## "எவ்வளவு மனோகரமானது" என்கிறார் ஷீலா ரமானி



## " லக்ஸ் டாய்லட் சோப்பின் புது மணத்தை




## நான் விரும்புகிறேன்."

" எனக்குப் பிடித்த மலர்களை அது நினைவூட்டு கிறது — அது மிகவும் கவர்ச்சியுடையது — இனி மையானது! லக்ஸ் டாய்லட் சோப்பின் உத்தம மான, மிருதுவான நுரையில், தங்கி வீசும் அந்த நறுமணத்தை நான் மிகவும் விரும்புகிறேன்."

தலைமுதல் கால் வரை கவர்ச்சி அளிக்க பெரிய சைஸிலும் கிடைக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

## லக்ஸ் டாய்லட் சோப்




சினிமா நட்சத்திரங்களின் உத்தமமான, வெண்மையான, அழகு தரும் சோப்

LTS. 440-50 TM

# கல்கி

மலர் 14 இதழ் 48 மன்மத ஆனி

1955 ஜூன் 26


## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

ஜூன் 24உ முதல்

சென்னை....

...வெலிங்டன் • பிராட்வே

ராக்ஸி ...

...மற்றும்

தென்னாடெங்கும்...



ஏவி எம்
புரொடக்ஷன்ஸ்

# செல்லப் பிள்ளை

K.R.ராமசாமி • T.S.பாலையா • K.A.தங்கவேலு
B.R.பந்துலு • ஜாவர் சீதாராமன்
சாவித்திரி • கண்ணாம்பா • பண்டரிபாய்

டைரக்ஷன்
**M.V.ராமன்**

திரைக்கதை, வசனம்
ஜாவர் சீதாராமன்

AVM
புரொடக்ஷன்ஸ்



மலர் 14 } தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற { மன்மத ஆண்டு
இதழ் 48 } தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { ஆனி 12

# போதனு மொழி மகாநாடு

பௌதிக விஞ்ஞானப் புது விஷயங்களைச் சொல்லும் திறமை தமிழ் மொழிக்கு இல்லை என்று முன்னாட்களில் உலாவிய பழிச் சொல்லைப் பற்றி மனம் புண்பட்டுப் போய்ப் பாரதியார் பாடினார். அந்தப் பாட்டு அனைவருக்கும் தெரியும். ஆனால், பாரதியாருடைய கவிக் கனவிலே தோன்றிய தமிழ் அன்னை அன்றைக்கே அவருக்கு ஆறுதல் அளிக்கும் ஒரு வாக்குறுதியும் தந்தாள் :

"தந்தை அருள்வலி யாலும் — இன்று
சார்ந்த புலவர் தவ வலியாலும்
இந்தப் பெரும்பழி தீரும் — புகழ்
ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்!"

அன்னை கூறிய அந்த வாக்கு நிறைவேறும் காலம் வந்து விட்டது. "சார்ந்த புலவரின்" தவ வல்மையும் நமது கல்வி மந்திரிக்கு இப்பொழுது கிடைத்து விட்டது. நமது பிரதேச மொழிகள் எல்லாம் "புகழ் ஏறிப் புவி மிசை" நிற்கும் என்ற பரிபூரண நம்பிக்கையும் நமக்கு ஏற்பட்டு விட்டது.

* * * *

நமது ராஜ்யக் கல்வி மந்திரி திரு சுப்ரமண்யம் அவர்களின் முயற்சியினால், கடந்த ஜூன் 18-ந் தேதி சென்னையில் கூடிய போதனு மொழி மகாநாடு பற்றிய நற்செய்தியை அன்பர்கள் தினசரிப் பத்திரிகைகளில் பார்த்திருப்பார்கள்.

நூற்றுக்கு மேற்பட்ட கல்வி நிபுணர்கள் கூடி இந்த மகாநாட்டு நடவடிக்கைகளில் ஊக்கத்தோடு கலந்து கொண்டு அபிப்பிராயம் வழங்கி, ஒரு தெளிவான முடிவுக்கு வந்தது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

சர்வகலாசாலை மேல் வகுப்புகளில், எல்லா விஷயங்களையும் பிரதேச மொழிகளிலேயே கற்பிக்க வேண்டும் என்ற யோசனையை இந்த மகாநாடு அலசி ஆராய்ந்தது. கலந்து கொண்ட அறிஞர்கள் எல்லாம் தங்கள் கருத்துக்களை ஒளிவு மறைவின்றி வழங்கினார்கள். தலைமை வகித்த கல்வி மந்திரி அவர்கள் மகாநாட்டின் நடவடிக்கைகளை நிதானத்தோடும் மதி நுட்பத்தோடும் நடத்தி, ஏகோபித்த முடிவுக்கு வருவதற்குப் பெருந் துணையாக நின்று, நிகழ்ச்சிகளை இயக்கிய திறமையை மிகமிகப் பாராட்டுகிறோம்.

மகாநாட்டின் தொடக்கத்தில் கல்வி மந்திரி சுப்ரமண்யம் அவர்கள் அருமையான ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். போதனு மொழி சம்பந்தமாக 1939-ம் ஆண்டில், நமது சென்னை மாகாணப் பிரதம மந்திரியாக இருந்த ராஜாஜிக்கும், அப்பொழுது கல்வி இலாகாவின் டிரக்டராக இருந்த ஸ்டாதம் அவர்களுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைப் படித்துக் காட்டினார். இன்று நாம் ஆராய்ந்து குழம்புகிற இந்த போதனு மொழிப் பிரச்னை குறித்து, பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பே எத்தகைய ஒரு தெளிவான முடிவுக்கு ராஜாஜி வந்திருந்தார் என்பதும், இவ் விஷயத்தில் அவருக்கு எத்தனை உறுதி இருந்து வந்திருக்கிறது என்பதும் அந்தக் கடிதத்திலே கண்டு, மகாநாட்டுப் பிரதிநிதிகள் அனைவரும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். அந்தக் கடிதத்தின் முழு மொழிபெயர்ப்பும் மற்றொரு பக்கத்தில் வெளியாகி யிருக்கிறது.

கைக்குழந்தைக்குத் தாய்ப் பால் போலாகும் தாய்மொழி. அந்நிய மொழியை வைத்து விஷயங்களைப் போதிப்பது டப்பாக்களில் போட்டு வரும் உணவுச் சாமான்களைப் போலாகும்.

உயர்நிலைப்பள்ளியில் பிரதேச மொழியே போதனா மொழியாக இருக்க வேண்டும் என்பதை உணர்ந்து, இப்பொழுது எல்லாப் பாடங்களும் பிரதேச மொழியிலேயே போதிக்கப்பட்டு வருகின்றன. ஆனால் கல்லூரிக்கு வந்ததும் எல்லா விஷயமும் ஆங்கிலத்தில் இருப்பதால், மாணவருக்கு எத்தனை கஷ்டம் உண்டாகிறது என்பதைக் கல்வி மந்திரி தமது பிரசங்கத்தில் எடுத்துக் கூறினார். தவிரவும், வடக்கே ஹிந்தி மொழி சம்பந்தமாய் எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகளையும், ஹிந்தியில் கலைச் சொற்கள் ஆக்குவதற்காக ஒரு கமிட்டி வேலை செய்து வருவதையும் பற்றிக் கூறிவிட்டு, இதுபோன்று நமது வட்டார மொழிகளிலும் நடவடிக்கைகள் எடுக்க வேண்டியது சம்பந்தமாக மகாநாட்டு நிபுணர்களின் கருத்துக்களைக் கல்வி மந்திரி வரவேற்றார்.



திரு சி. சுப்பிரமணியம்

இந்த மகாநாட்டில் மிகவும் திருப்திப்பட வேண்டிய காரியம், இதில் கலந்து கொண்ட அறிஞர்களில் பெரும்பாலோரும் பிரதேச மொழியைப் போதனா மொழியாக்க வேண்டியதன் அவசியத்தை நன்றாக உணர்ந்து ஆதரித்துப் பேசியதுதான்.

ஆங்கில மொழியின் விரிவும், ஆழமும் பற்றி யாருக்கும் அபிப்பிராய பேதம் இருக்கவே முடியாது. கல்லூரிகளில் ஆங்கிலத்திற்கு ஒரு மிக முக்கிய ஸ்தானம் இருந்தால், மாணவர்கள் உலக அறிவுத் துறைகளிலே ஞானம் பெறுவதற்குப் பெருந்துணையாக இருக்கும் என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டார்கள். ஆனால் மகாநாட்டின் விஷயம் அது அல்லவே! எல்லாப் பாடங்களையும் எந்த மொழியின் மூலம் கற்பிக்க வேண்டும் என்பதல்லவா கேள்வி.

மகாநாட்டில் கலந்து கொண்ட சென்னை, அண்ணாமலை—இரண்டு பல்கலைக் கழகங்களின் தலைவர்களும் ஆங்கிலத்தைக் கல்லூரியிலிருந்து அகற்றிவிடக் கூடாது என்பதைத் தெளிவாக எடுத்துரைத்ததோடு, பிரதேச மொழியைப் போதனா மொழியாகக் கையாளுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை ஒருதிட்டமான கிரமத்தில் கல்லூரிகளிலே எடுக்க வேண்டும் என்றும் தெரிவித்தார்கள்.

இன்னொரு உசிதமான யோசனையும் கூறப்பட்டது. கலைச் சொற்களையெல்லாம் பிரதேச மொழியிலேயே ஆக்கி முடிக்கும் வரை காத்திருக்காமல், அகில உலகக் கலைச் சொற்களை அப்படியே பிரதேச மொழிகளிலும் எடுத்துக் கொண்டு அந்தந்த பாஷைக்கு ஏற்ப இணைத்து உபயோகித்துக் கொள்ளலாம் என்று கூறப்பட்டது. இதனால் ஆங்கிலத்திலே வளரும் அறிவுத் துறைகளையெல்லாம் நமது மாணவர்கள் புரிந்துகொண்டு முன்னேற உதவியாக இருக்கும் என்று அறிஞர்கள் தெரிவித்தார்கள். இவற்றையெல்லாம் ஆராய்ந்து வழிவகைகள் காணுவதற்கு ஒரு கமிட்டி நியமித்து உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று மகாநாடு கருதியது.

நமது எதிர்கால மக்களின் அறிவு வளர்ச்சியை உருவாக்கும் முக்கியமான இவ்விஷயத்தில், கல்வித்துறையில் ஈடுபட்டுள்ள நிபுணர்கள் இப்படி ஒரு ஏகோபித்த முடிவுக்கு வந்தது மகத்தான வெற்றியாகும். பிரதேச மொழிகளைப் போதனா மொழியாக்கும் பணியில் விரைவாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று, கல்வி நிபுணர்கள் அனைவரும் ஒப்புக் கொண்டு அங்கீகாரம் கொடுத்தது நமது கல்வி மந்திரியின் முயற்சிக்குக் கிடைத்துள்ள பலமான ஆதரவு ஆகும்.

நமது பண்பாட்டிலும், மொழி வளர்ச்சியிலும் மெய்யான ஆர்வமும், அபிமானமும் நிரம்பிய கல்வி மந்திரி திரு சுப்ரமண்யம் அவர்களை இந்த வெற்றிக்காகப் பாராட்டுகிறோம். அவருடைய முயற்சி வெகு விரைவில் பலன் தந்து, நமது கல்லூரிகளில் எல்லாம் நம்முடைய தமிழ்மொழி அரியாசனம் ஏறும் நன்னாளை ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

# ஐ. நா. சபையின் பத்தாண்டு சேவை

ஐக்கிய நாடுகள் சபை தோன்றி, இந்த இதழ் வெளியாகும் 26-ம் தேதியுடன் பத்து ஆண்டுகள் ஆகின்றன. சென்ற யுத்தம் முடிந்தவுடன் நாஜி ஜெர்மனியை எதிர்த்துப் போராடிய நாடுகளும் மற்ற நாடுகளுமாகச் சுமார் ஐம்பது நாடுகள் சேர்ந்து உயர்ந்த லட்சியத்தோடு ஐக்கியநாடுகள் சபை என்ற இந்த ஸ்தாபனத்தை ஆரம்பித்தன. அதாவது யுத்தத்தை அறவே ஒழிக்க வேண்டும் என்ற லட்சியத்தோடுதான் ஆரம்பிக்கப் பட்டது. ஆனால் நாளடைவில், சென்ற யுத்தத்தில் தோளோடு தோள் சேர்ந்து நின்ற அமெரிக்காவும் ருஷ்யாவுமே ஒன்றுக்கு ஒன்று பகை நாடுகளாக மாறி விட்டன! சபையிலும் சம பலமுள்ள கட்சிகளாக இல்லாததால், சபையே சண்டைக்கூடமாக மாறி விட்டது! பின்னர் இந்தச் சபைக்கு எந்தப் பிரச்னை வந்தாலும் சுமுகமாகத் தீர்க்கப் படுவது ஏது! அதனால் இப்பொழுது உலகில் முன்னைவிட அதிகமாகவே யுத்த பீதி இருந்து வருகிறது.

இந்தச் சபை அணுகுண்டு உற்பத்தி விஷயத்தில் முதலிலேயே தலையிட்டு இந்த நாசகரமான குண்டுகளை இனி உற்பத்தி செய்யக் கூடாது என்று அந்த நாடுகளைக்

கேட்டுக் கொண்டிருந்தால் உலகில் சமாதானம் நிலைநிறுத்தப் பேர் உதவி செய்ததாக இருக்கும். அப்படியில்லாமல், தும்பை விட்டு விட்டு வாலைப் பிடித்தவன் கதையாக வேறு என்னவெல்லாமோ காரியங்களில் ஈடுபட்டுத் திணறித் திண்டாடுகிறது சபை.

இதெல்லாம் பார்க்கும்போது இந்த ஐ. நா. சபை இருந்து என்ன பயன்! கலைத்து விடலாமே என்று சிலர் சொல்லக் கூடும். இந்தக் கொள்கை தவறு.

ஒரு நாட்டின் அரசாங்கம் கெட்டு விட்டது என்றால் அரசாங்கத்தையே கூடாது என்று யாரும் சொல்வதில்லை. அதற்குப் பதில் அரசாங்கத்தைத் தான் சீர்திருத்துகிறார்கள். அம்மாதிரியே ஐ. நா. சபை இன்னும் நன்றாக வேலை செய்யும்படி சீர்திருத்த வேண்டுமே தவிர ஒழித்து விடக் கூடாது. இன்றையச் சூழ்நிலையில் இத்தகையதோர் சபை மிக மிக அவசியம். இந்தச் சபை வெறும் ஐக்கிய நாடுகள் சபையாக மட்டும் இராமல் "உலக சமாதான சபை"யாக வேலை செய்ய வேண்டும். உலகத்தில் எல்லாப் பகுதிகளிலும் சமாதானத்தை நிலை நாட்டவும் அதற்குத் தக்க சூழ்நிலையை ஏற்படுத்தவும் இச் சபை முயற்சிக்க வேண்டும். அப்பொழுது இந்தச் சபை தனது லட்சியத்தை அடைந்ததாகும்! இந்தப் பத்து வருஷ அனுபவத்தில் கற்ற பாடமாகக் கொண்டு, உலக சமாதான சபையாக இனி எதிர்காலத்தில் இயங்கும் என்று எதிர்பார்ப்போமாக!

# கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

ஜூன் மாதத்தில் ஒரு நாளைவிட ஒரு நாள் 'கல்கி' காரியாலயத்துக்கு வரும் தபால் பாரம் அதிகரித்துக் கொண்டே வருகிறது என்று திக்குமுக்காடுகிறார் நமது தபால்காரர்! நமது எழுத்தாள நண்பர்கள் 'கல்கி' சிறுகதைப் போட்டிக்கு அனுப்பும் கதைகளினால் இப்படியொரு நெருக்கடி ஏற்பட்டு வருகிறது! இதில் நமக்கு மகிழ்ச்சியே.

ஆனால் இளம் எழுத்தாள நண்பர்கள் நம் மீது கோபப்படுகிறார்கள். கொடுத்த அவகாசம் போதவில்லை என்கிறார்கள். 'இப்பொழுதுதான் கதை மனத்தில் உருவாகி யிருக்கிறது. அதை எழுத்தில் வடிப்பதற்குள் உங்கள் முடிவுத் தேதி வெகு சீக்கிரம் முடிந்து விடும் போலிருக்கிறதே' என்கிறார்கள்.

இவர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்பதற்காக ஒரு சிறு மாறுதல் செய்திருக்கிறோம். முடிவுத் தேதியை இன்னும் ஒரு மாதத்துக்குத் தள்ளிப் போட்டிருக்கிறோம். ஜூலை 31-ம் தேதி வரை இந்தப் போட்டிக்குக் கதைகள் அனுப்பலாம் என்று தீர்மானித்திருக்கிறோம். தமிழ் கூறும் நல்லுலகத்திலுள்ள எழுத்தாளர்களையெல்லாம் இந்த நல்ல வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். தமிழ் நாட்டிலுள்ள தமிழர்கள்தான் கதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம் என்பதில்லை. காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி வரையும், ஏன்—கடல் கடந்த இலங்கை, பர்மா, மலேயா முதலிய நாடுகளிலிருக்கும் தமிழர்களும், இந்தப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.

# போதனாமொழி பற்றி ராஜாஜி

1939-ம் ஆண்டு அக்டோபர் 19-ந் தேதி சென்னைக் கல்வி அதிகாரி ஸ்டாதம் அவர்களுக்குச் சென்னைப் பிரதம மந்திரி ராஜாஜி எழுதிய கடிதம்:-

"தென்னிந்திய மொழிகளில் தக்க பாடப் புத்தகங்கள் பிரசுரமாகி, விஞ்ஞானத் துறைகளுக்கான அகராதிகள் வகுக்கப்படுகிற வரையில், பௌதிக விஞ்ஞான கணிதங்களைக் கற்பிக்கத் தாய்மொழியை உபயோகிக்க இயலாது" என்று நீங்கள் சொல்லுகிறீர்கள்.

இது ஒரு இக்கட்டான நிலை. எவ்வளவு அசௌகரியமாகவும் துப்புரவில்லாமலும் இருப்பினும் ஏதாவது ஒரு கட்டத்தில் ஆரம்பித்தாலொழிய, இந்த இக்கட்டு தீராது. பாடப் புத்தகங்கள் எழுதுவோர் துறவிகளல்ல. அவற்றிற்குக் கிராக்கி உண்டானால் ஒழிய அவை எழுதப்படும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. தமிழில் போதிப்பது தொடங்கினாலன்றி, தமிழில் எழுதிய பாடப் புத்தகங்களின் தேவை புலன்படாது.

நாட்டு மொழிகளில் பௌதிக விஞ்ஞானங்களைக் கற்பித்தால், மாணவர் ஆங்கில மரபையும் ஆங்கில இலக்கணத்தையும் தேர்ந்து கொள்வதில் இடையூறு ஏற்படுமா என்ற விஷயத்தைப் பற்றி நாம் ஒரு திடமான முடிவுக்கு வரவேண்டும். தற்போது உலக வழக்கத்திலுள்ள ஆங்கிலக் கலைச் சொற்களை அந்தந்தப் பிரதேச மொழிகளுக்கு ஏற்ப எடுத்து ஆள்வதில் குற்றமொன்றுமில்லை. இப்படிச் செய்தால் ஆங்கில அறிவுக்குப் பாதகம் ஒன்றும் விளையாது. சில பாடங்களைக் கற்பிக்கும்போது 'மணிப் பிரவாளம்' ஏற்படுவதால் ஆங்கில மொழிப் பயிற்சி அப்படியொன்றும் கெட்டுப் போகாது. அப்படியே கொஞ்சம் நேரிட்டாலுங்கூட நஷ்டத்தைவிட லாபமே அதிகம்.

அறிவுத்துறைக் கல்வியில் சில அன்னியச் சொற்களை உபயோகிக்க வேண்டியிருப்பதால், போதனா மொழியே அன்னிய மொழியாகத்தான் இருக்க வேண்டும் என்று சொல்

வது தவறு என்பது என் கருத்து. மாணவர்களுக்குப் புகட்டப்படும் அறிவு, தாய்மொழியிலாவது பிரதேச மொழியிலாவது வழங்கப்படுமானால் அதனால் ஏற்படுகிற உடனடியான பயன் மிகப் பெரிது. சில அன்னியக் கலைச் சொற்களை உபயோகப் படுத்துவதனால் இந்தப் பயன் கெட்டு விடாது. சுருங்கக் கூறினால், போதனமொழி என்பது வேறு, கலைச்சொற்கள் வேறு. இந்தத் திட்டத்தைப் பின்பற்றினால் பிரதேச மொழியில் கலைச் சொற்கள் விரைவில் தாமாக உண்டாகும். போதனையில் அன்றாடம் ஈடுபட்டுள்ள ஆசிரியர்களே இந்தக் கலைச்சொற்களை எளிதில் தேடியெடுத்து வழக்கத்துக்குக் கொண்டு வர முடியும். இங்கிலாந்திலும், ப்ரான்ஸிலும் பௌதிக விஞ்ஞானக் கல்வியின் ஆரம்ப காலத்தில் லத்தீன் மொழியிலும், கிரேக்க மொழியிலுமா பள்ளிக்கூட வகுப்புகளை நடத்தினார்கள்!

அன்னியக் கலைச் சொற்களைத் தாராளமாக எடுத்துக்கொள்ளலாம். அதேசமயம் போதனை, பிரதேச மொழியிலேயே இருக்கலாம்.

பௌதிக விஞ்ஞானங்களுக்கு நான் கூறியுள்ளது, மற்ற வகைப் பாடங்களுக்கும் பெரிதும் பொருந்தும். ஒரு மாணவன், வீட்டில் தன் சிறிய தம்பிக்குப் பாடம் சொல்லிக்கொடுப்பதைப் பார்த்திருந்தால், அறிவுத் துறைகளை எப்படி அன்னியக் கலைச் சொற்களை உபயோகித்துத் தாய்மொழியிலேயே கற்பிக்க முடியும் என்பது புரியும்.

ஆங்கிலத்திலேயே இதுவரை கற்பித்துப் பழகி விட்ட ஆசிரியர்களுடைய கஷ்டம் எனக்குப் புரிகிறது. வேறு எந்த பாஷையிலும் கற்பிக்க முடியாது என்று அவர்கள் எண்ணுகிறார்கள். நீங்கள் குறிப்பிடுகிற அநேக ஆட்சேபணைகளைச் சொல்லுகிறார்கள்.

சென்னை போன்ற நகரத்தில் பல மொழி பேசும் மாணவர்கள் ஒருமித்துக் கூடும் வகுப்புகளில், ஒரு பிரதேச மொழியைத் தேர்ந்தெடுப்பதில் உள்ள கஷ்டம் எனக்குத் தெரியவே செய்கிறது.

ஹோமர், வர்ஜில் முதலியோரின் நூல்களைக் கற்பிக்கிற ஆங்கிலக் கலாசாலை வகுப்புகளில், இந்த நூல்களை கிரேக்க மொழி அல்லது லத்தீன் மொழியிலா கற்பிக்கிறார்கள்? ஆங்கிலத்தைப் போதனை மொழியாகக் கொண்டே இந்த கிரேக்க, லத்தீன் இலக்கியங்களைச் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

பிரதேச மொழிகளில் பாடம் கற்பித்த போதிலுங்கூட, இப்போதைக்கு மாணவர்களும் ஆசிரியர்களும் ஆங்கில மொழியில் எழுதப்பட்ட பாடப் புத்தகங்களை உபயோகிக்கும்படி சொல்லலாம். ஆனால் பள்ளிக்கூடத்தில் சொல்லித் தருவது பிரதேச மொழியிலேயே இருக்க வேண்டும்.

நீங்கள் உடனே உங்கள் அதிகாரத்தின் கீழ் வேலை செய்யும் இன்ஸ்பெக்டர்களுக்கு உத்தரவு பிறப்பியுங்கள். அன்னியக் கலைச் சொற்களை உபயோகித்த போதிலும் பௌதிக விஞ்ஞான கணித அறிவுத் துறைகளில் பிரதேச மொழியையே பயன்தக்க முறையிலும் அதிகமாகவும் உபயோகிக்கும்படி அறிவிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

# என்ன செய்தி?

## நாட்டு வைத்தியம்

பாரதத்தின் வைத்திய முறையான ஆயுர்வேதத்தின் மறுமலர்ச்சிக்குரிய முறைகளைச் சர்க்கார் கைக்கொள்ளத் தவறிவிட்டனர் என்று, சமீபத்தில் சேலத்திலே கூடிய தமிழ்நாடு ஆயுர்வேத மகா மண்டலத்தின் 20-வது ஆண்டு விழாவுக்குத் தலைமை வகித்த வைத்திய வாசஸ்பதி பண்டித பி. எஸ். ராம சர்மா குறிப்பிட்டார். இந்திய மக்களின் சுபிட்ச வாழ்வுக்குக் கைத்தொழில் துறைகள் அபிவிருத்தி அடைய வேண்டியது எவ்வளவு அவசியமோ, அது போலவே மக்களின் ஆரோக்கிய வாழ்வுக்கு வைத்தியத் துறையில் அபிவிருத்தி ஏற்பட வேண்டியது அத்தியாவசியம். முக்கியமாக, லட்சக்கணக்கான இந்திய கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான ஜனங்கள் நோய் நொடிகளிலிருந்து விடுதலை பெற்று ஆரோக்கிய வாழ்வு நடத்துவதற்குற்ற தேசிய வைத்திய முறைகளான சித்த வைத்தியமும், ஆயுர்வேதமும் அபிவிருத்தி அடையும்படி செய்ய வேண்டியது சர்க்காரின் முக்கிய கடமையாகும். சித்த வைத்திய முறையின் சரியான மதிப்பை இன்னும் நமது நாட்டில் பலர் புரிந்து கொள்ளவில்லை. தமிழ் நாட்டுக்கே சிறப்பாக அமைந்த இந்த சித்த வைத்திய முறை, பல மகான்களால் பயிலப்பட்டு அற்புதமான மூலிகைகளால் வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது. சங்கேதச் சொற்கள் என்று கூறப்படும் சில குறியீட்டுச் சொற்களைக் கையாண்டு சித்த வைத்திய நூல்கள் எழுதப்பட்டிருப்பதால், இவற்றைப் புரிந்து கொள்வதில் பல குழப்பங்கள் நேர்கின்றன என்பது உண்மைதான். என்றாலும் இந்த வைத்திய முறை அற்புதமான சாதனைகளோடு கூடியது என்பதில் சந்தேகமேயில்லை. இந்த சித்த வைத்தியத்தையும் ஆராய வேண்டியது நமது அரசாங்கத்தின் கடமையாகும்.

## திருவாங்கூர் விஷயம்

சில மாதங்களுக்கு முன் திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்தில் அதிகாரத்துக்கு வந்த காங்கிரஸ் சர்க்கார், அதற்குமுன் இருந்த பட்டம் தாணுப் பிள்ளை சர்க்காரைப் போலின்றித் திருவாங்கூர்த் தமிழர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டியது மிகமிக அவசியம். திருவாங்கூர்த் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திருவாங்கூர் சட்டசபை அங்கத்தினர்கள் தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காகக் காங்கிரசில் சேர்ந்தனர் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தென் திருவாங்கூரில் அதிக்கிரமமான காரியங்களைச் செய்ததாகக் கூறப்படும் போலீஸ் அதிகாரிகளுக்குச் சமீபத்தில் வெகுமதி வழங்கப்பட்டது ஒரு பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. தவிர, தி. த. கா. காங்கிரஸ் வாதிகள்மீது தொடரப்பட்டிருந்த வழக்குகளையும் சர்க்கார் இன்னும் வாபஸ் செய்து கொள்ளவில்லை. எனவே, திருவாங்கூர்த் தமிழ்ப் பிரமுகர்கள் சர்க்கார்மீது தங்கள் அதிருப்தியைத் தெரிவிக்க முற்பட்டுள்ளனர். ஆகையால், மறுபடியும் பழைய கதையாகி விடாமல் தடுக்க தி. கொ. சர்க்கார் காலதாமதமின்றித் தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்; திருவாங்கூர்த் தமிழர்களின் நம்பிக்கையைப் பெற முயற்சிக்க வேண்டும்.

## ஐரோப்பிய நாடுகளில் தமிழ்ப் பொக்கிஷங்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியரான டாக்டர் ஏ. சிதம்பரநாதன் செட்டியார் இந்திய சர்க்காருக்கும் ராஜ்ய சர்க்காருக்கும் ஓர் அருமையான யோசனை கூறியுள்ளார்.

"பிரிட்டிஷ் நூல் நிலையங்களிலும் ஐரோப்பிய நூல் நிலையங்களிலும் பழந்தமிழ் இலக்கிய நூல்களைச் சேகரிப்பதற்காக, தமிழ் அறிஞர்களைச் சர்க்கார் ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பி வைக்க வேண்டியது அவசியம். அங்குள்ள நூல் நிலையங்களில் பண்டைய தமிழ் ஏட்டுச் சுவடிகளும் நூல்களும் ஏராளமாக உள்ளன. அவற்றில் இதுவரை பிரசுரமாகாத நூல்களை அச்சிடுவதற்குச் சர்க்கார் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

டாக்டர் சிதம்பரநாதன் செட்டியாரின் யோசனைக்கு இணங்க, சர்க்கார் ஐரோப்பிய நூல் நிலையங்களில் உள்ள பண்டைய தமிழ்ச் சுவடிகளின் பிரதிகளைத் தயாரித்து வருவதற்காகத் தமிழ் அறிஞர்களை அனுப்புவார்களாயின், அதனால் மிகுந்த பலன் ஏற்படும். பாரதநாடு சுதந்திரம் இழந்திருந்த காலத்தில் இந் நாட்டின் கலைப் பொக்கிஷங்களையும் இதர பொக்கிஷங்களையும் அன்னியர்கள் சூறையாடிவிட்டனர். அதன் விளைவாக இந்தியாவின் இணையற்ற இலக்கியப் பொக்கிஷங்கள் வெளி நாடுகளில் இன்றும் இருக்கின்றன. அவற்றை ஆராய்ச்சி செய்து வர அறிஞர்களை அனுப்ப வேண்டுமென்ற அருமையான யோசனையைச் சர்க்கார் ஏற்று ஆவன செய்தால் நல்ல பலன் ஏற்படும்.

## கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை!



சமாதானத்துக்கும் ஆசை; சண்டையையும் விடப்படாது.

## நமது இலட்சியம்



பண்டித நேருவின் ருஷ்ய விஜயம் உலகத்துக்குப் புது நம்பிக்கை ஊட்டியிருக்கிறது.

## பாவம், டி. டி. கே !

டி. டி. கே. ஓட்டுகிருர்; ஆங்கிலக் கப்பல்காரர் ஏமாந்துகிருர்கள்!

## எதிர்பார்க்கிருர்கள் !

மாகாண எல்லை சம்பந்தமாக நியமிக்கப்பட்ட கமிட்டி தனது யாதாஸ்தைச் சீக்கிரத்தில் சர்க்காருக்குச் சமர்ப்பிக்கப் போகிறதாம்.

# தமிழ் கூறும் நல்லுலகம்

கோரேகான் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் 5-6-55 அன்று மாலை பம்பாய் டெலிபோன் மாஜி ஜெனரல் மானேஜரான திரு எம். சுந்தரம் ஐயர் அவர்கள் தலைமையில் வள்ளுவர் திருநாள் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் ஸ்ரீமதி பத்மா கிருஷ்ணசுவாமியும், திரு தனிக்கொடி அவர்களும் பங்கெடுத்துக் கொண்டு சிறப்பித்தனர். தலைவர், "வள்ளுவர் பெருமான் திருநாளைத் தமிழ் மக்கள் மாத்திரம் கொண்டாடுவதோடன்றி உலகப் பெரு மக்களும் சிறப்புறக் கொண்டாடிப் பயனடையத் தமிழ் மக்கள் முயற்சி எடுக்க வேண்டும்" என்று கூறினர். செயலாளர் திரு பி. ஆர். சுப்பிரமணியன் நன்றி கூற விழா முடிந்தது.

★

தென் பீகாரிலுள்ள மாங்கிர் என்ற ஜில்லாவைச் சேர்ந்த ஜமால்பூரில் மிகப் பெரிய ரயில்வே லோகோமோடிவ் தொழிற்சாலை ஒன்று இருக்கிறது. அங்கு வேலை செய்யும் தமிழர்கள் ஒரு தமிழ்ச் சங்கம் அமைத்திருக்கின்றனர். அச் சங்கத்தின் சார்பில் தெய்வப் புலவரின் திருநாளை 5—6—55 அன்று வெகு சிறப்பாகக் கொண்டாடினர். திரு மு. ஸ்ரீனிவாசன் தலைமையில் திரு கா. முத்தையா, திரு ஜி. சுப்பிரமணியன், திரு ஏ. சங்கரன் ஆகியோர் குறளைப் பற்றிப் பேசினர்கள்.

★

பம்பாய் பாரதி கலா மன்றத்தினர், தென் இந்திய பஜனை சமாஜ் கட்டடத்தில் சென்ற 12—6—55 அன்று திருவள்ளுவர் தினம் கொண்டாடினர்கள். பம்பாய், தென் இந்திய உயர்நிலைப் பள்ளியின் தமிழாசிரியர் திரு நா. பிச்சுமணி அவர்களும் ஸ்ரீமதி என். ஏ. கல்யாணி அவர்களும் சொற்பொழிவாற்றினர்கள். தலைமை வகித்த திரு எம். சுந்தரம் கீதையையும் குறளையும் ஒப்பிட்டுப் பேசினர்.

★

இமய மலைச் சாரலில் கங்கைக் கரையில் அமைந்த 'ஆனந்தகுடீர்' என்ற ஆசிரமத்தில் மே மாதம் 18ந் தேதி மாலை மிக மிக இனிய நாகஸ்வர வெள்ளம் மூன்று மணி நேரம் பெருக்கெடுத் தோடியது. அப்படி சுவாமி சிவானந்தரை நாதானந்த வெள்ளத்தில் ஆழ்த்தும் "பேறு" காருகுறிச்சி திரு அருணாசலம் கோஷ்டியாருக்கு வாய்த்தது. திரு அருணாசலம் அவர்களுக்கு "நாகஸ்வர கலாநிதி" என்ற பட்டமும், அவருடன் வாசித்தவருக்கு "நாகஸ்வர ஜோதி" என்ற பட்டமும், தவுல் வாசித்தவருக்கு "தவுல் மணி" என்ற பட்டமும் வழங்கினர் சுவாமி சிவானந்தர்.

★

இவ்வாரம் கொழும்பு விவேகானந்த சபை மண்டபத்தில் அகில இலங்கைத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க அங்குரார்ப்பணக் கூட்டத்தில் இலங்கைத் தபால் தந்தி இலாகா அமைச்சர் திரு சு. நடேசப் பிள்ளை "கல்கி" திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். அதை



யொட்டிப் பேசுகையில் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளராகவும் மேதையாகவும் விளங்கினரென்றும் அவரது தமிழ்நடை தமிழ் மக்களைத் தமிழ் படிக்குமாறும் தமிழைப் போற்றுமாறும் தூண்டுவதா யிருந்ததென்றும் திரு நடேசப் பிள்ளை அவர்கள் கூறினர்கள்.

சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு ம. பொ. சிவஞான கிராமணியாரும் இக் கூட்டத்தில் கலந்து கொண்டு சொற்பொழிவு நிகழ்த்தினர்.

<u>அட்டைப்பட விளக்கம்</u>

## ரவி சந்திரிகாவில் மலைநாட்டுக் கன்னி

பொதிகை மலைச் சாரலில், அகத்திய முனிவரும் நவநாத சித்தர்களும் நடமாடிப் புனிதம் விளைத்த பாபநாச தீரத்தில், மலையும் காடுகளும் அருவியும் ஆறுமாக அழகுக் காட்சி தரும் சுந்தர வட்டத்தில், சொக்கிகுடி என்ற சிறு குடியிருப்பு ஒன்று இருக்கிறது. 'பளிஞர்' என்றும் 'புளிஞர்' என்றும் அழைக்கப்படும் மலைஜாதியினரின் நித்திய வாசஸ்தலமான அந்தக் குடியிருப்பின் தலைவனுக்கு, 'சொக்கி' என்று ஒரு மகள்! அவளுடைய மந்திர எழிலும், மோகனச் சிரிப்பும் அந்த மலை வட்டாரத்தில் பிரசித்தமானவை. இந்த மலை நாட்டுக் கன்னி 'ரவிசந்திரிகா'வில் தோன்றுகிறாள். இனி வரப் போகும் அத்தியாயங்களில் ஒரு முக்கிய கட்டத்தில் சொக்கியும் அவள் தந்தையும் தோன்றி ரவீந்திரனுடைய வாழ்க்கைக்கு ஒளி கொடுக்கிறார்கள். அந்தக் கதாபாத்திரங்களைத் தாங்கி வருகிறது இவ்வாரத்து அட்டைப்படம். ஓவியர் மணியம் அவர்கள் சொக்கிகுடியின் கன்னியை நூவர்ணங்களிலே சித்திரித்திருக்கிறார்!

# சக்கரவர்த்தித் திருமகள்

ராஜாஜி

## 74. லங்காதகனம்

பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்ட ஹனுமான் தான் பெற்ற வரத்தால் அந்த அஸ்திரத்தினின்று விடுதலையடையும் வரையில் ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டும் என்று தீர்மானித்து அரக்கப் பாமரர்கள் திட்டுவதையும் அவமானப் படுத்துவதையும் இம்சிப்பதையும் பொறுமையுடன் தாங்கிக் கொண்டே சென்றான்.

ராவணனுடைய சபையில் அரசன் முன் அவனைக் கொண்டு போய் நிறுத்தினார்கள். தான் பட்ட துன்பமும் அவமானமும் போக ராவணனைக் கண்டதும் சீதைக்கு ராவணன் செய்த தீமையை நினைத்துப் பெருங் கோபம் மேலிட்டது. திவ்விய ஆபரணங்களும் பட்டுப் பீதாம்பரமும் கிரீடமும் பூண்டு கண் கூசும் எழிலுடன் ராவணன் அமர்ந்திருந்தான். தங்கம், ரத்தினம், வைடூரியம், முத்து, பட்டு இவற்றின் பிரகாசம் சபை முழுதும் நிறைந்தது. ராஜ லக்ஷணங்களுடன் விளங்கிய அவன் கறுத்த மேனி தேஜஸ் கொண்ட ஒரு மலை போல் காணப்பட்டது.

"ஆஹா! இந்த மகான் தருமத்திலிருந்து பிறழாமல் சன்மார்க்கத்தில் நின்றிருந்தானாகில் இவன் ஐசுவரியம் எவ்வாறு இருந்திருக்கும்! இந்திரன் முதலியவர்கள் அனைவரும் இவனுக்கு ஈடாக மாட்டார்கள். என்ன வடிவம்! என்ன எழில்! என்ன பலம்! தான் பெற்ற வரங்களை நம்பித் துஷ்ட காரியங்களில் இறங்கி விட்டு அல்லவோ இவன் தன் பாக்கியத்தையும் மேன்மையையும் இழந்தான்!" இவ்வாறு கோபமும் வியப்பும் இரக்கமும் கொண்டு ஹனுமான் யோசித்துக் கொண்டிருக்கையில் ராவணன் மந்திரிகளைப் பார்த்து உத்தரவிட்டான்.

"இந்தத் துஷ்டன் யார்? எங்கிருந்து வந்தான்? யார் இவனை அனுப்பியது? இந்த லங்கைக்குள் ஏன் பிரவேசித்தான்? உண்மையைச் சொல்லும்படி கேளுங்கள்!" என்றான்.

மன்னன் உத்தரவிட்டபடி மந்திரி பிரஹஸ்தன் ஹனுமானைப் பார்த்து, "குரங்கே! பயப்பட வேண்டாம்! உண்மையைச் சொன்னால் தப்பிப் போவாய். இந்திரன் உன்னை அனுப்பினானா? அல்லது நீ குபேரனுடைய ஆளா? அல்லது வேறு யார் உன்னை ஏவியது? உண்மையைச் சொல்லி விட்டுத் தப்பித்துக் கொள். நீ ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டு இங்கு வந்திருக்கிறாய்? மறைக்காமல் சொல்!" என்றான்.

இவ்வாறு பிரஹஸ்தன் நல்ல வார்த்தைகளாகச் சொல்லிக் கேட்





டான். ஹனுமான் மறுமொழியாக ராவணனைப் பார்த்துச் சொன்னான்:

"இந்திரனாவது குபேரனாவது என்னை அனுப்பவில்லை. நான் வானரன். ராக்ஷஸ ராஜனைப் பார்க்க விரும்பி வந்தேன். அதற்காகவே வனத்தை அழித்தேன். என்னைக் கொல்லப் பிறர் தாக்கினபடியால் அவர்களை நான் வதம் செய்தேன். வானர ராஜன் சுக்ரீவனுடைய தூதனாக நான் இங்கே வந்திருக்கிறேன். அரக்கர் மன்னனே! என் அரசன் தங்களைச் சகோதரனாகப் பாவித்து க்ஷேமம் விசாரிக்கிறார். அயோத்தி மன்னன் தசரதனுடைய புகழ் பெற்ற குமாரன் ராமசந்திரனும் வானர ராஜனும் நட்பு செய்து கொண்டிருக்கிறார்கள். சுக்ரீவனுடைய பகைவனான வாலி ராமசந்திரனால் வதம் செய்யப்பட்டான். வானர ராஜ்யப் பதவியை சுக்ரீவன் அடைந்திருக்கிறான். அயோத்தியாதிபதியாக வேண்டிய ராமசந்திரன் தந்தை வாக்கை





மேற்கொண்டு தண்டகாரண்யத்தில் வனவாசம் செய்து கொண்டிருந்த காலத்தில் அங்கே தனியாக இருந்த அவருடைய தேவியைக் காணாமல் ராம லக்ஷ்மணர்கள் அவளைத் தேடி வந்தார்கள். சுக்ரீவ ராஜாவின் நட்பை அடைந்து அவன் சகாயத்தைக் கோரினார்கள். வானர ராஜன் தன் ஆட்களை பூவுலகம் முழுதும் தேடிப் பார்க்க அனுப்பினான். லங்கையில் தேட நான் வந்தேன். புண்ணியவதி ஜானகியை இவ்விடம் நான் கண்டேன். ராக்ஷசேசுவரனாகிய தங்களுக்குச் சகோதர அரசனுடைய தூதனாகிய நான் வணக்கமாகச் சொல்லுகிறேன். சக்கரவர்த்தித் திருமகனுக்காகவும் சொல்லுகிறேன்.

“சீதாதேவியை அபகரித்துத் தூக்கி வந்தது தருமத்துக்கு விரோதம் என்பது தங்களுக்குத் தெரியும். உம்முடைய குல நாசத்துக்கு இது காரணமாகும். ரகுவீரனையும் வானரர்களையும் பகை செய்து கொண்டு அழிந்து போக வேண்டாம். சீதையை மரியாதையாக ரகுவீரனிடம் ஒப்புவித்துச் சரணமடைவீராக. சீதையை உம்முடைய அழிவுக்

காக வந்த காலனாக அறிவீராக. விஷத்தை உணவாக எண்ண வேண்டாம். புத்திமான்கள் தருமத்துக்கு விரோதமான காரியங்களில் அகப்பட்டுக் கொண்டு பெரிய அபாயத்துக்கு ஆளாக மாட்டார்கள். பிறர் மனைவியை விரும்பும் பாபம் ஒருவனை வேரோடு அழித்து விடும் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். பாப காரியத்தால் தாங்கள் முன் செய்த தவமெல்லாம் அழிந்து பயனற்றுப் போகும். பிழை செய்து பெரும் பாக்கியத்தைக் கெடுத்துக் கொண்டீர். இப்போது உமக்குள்ள வழி ராமனிடம் சரண் புகுவது ஒன்றே. ராமனைப் பகைத்துக் கொண்டு உம்முடைய நாசத்தைத் தேடிக் கொள்ள வேண்டாம். நீர் பெற்ற வரங்கள் ரகுவீரனுக்கு எதிரில் ஒன்றும் பயன்படாது. யோசித்துப் பார்த்து உண்மை ஆபத்தை அறிந்து கொள்வீராக. வானர ராஜனுடைய தூதனாகிய நான் சொன்னதை மதித்து நல்வழியில் சென்று பிழைப்பீராக. நான் சொன்ன வார்த்தைகள் உம்முடைய சகோதரன் சுக்ரீவனுடைய தூதனாக, உம்முடைய நன்மைக்காகச் சொன்ன உண்மை வார்த்தைகள்.''

தைரியமே உருவெடுத்தவனான ஹனுமான் அரக்கனுக்கு விஷம்போல் தோன்றும் இந்த உபதேசத்தை மிகத் தெளிவான மொழிகளில் செய்தான். அதைக் கேட்ட அரக்கனுக்குக் கோபம் பொங்கிக் கண்கள் சிவந்தன.

ரோஷாவேசத்தில் "இவனைக் கொன்று விட்டு மறு வேலை பார்ப்பீர்களாக'' என்றான்.

தூதனைக் கொல்வது தவறாகும் என்று சபையிலிருந்த விபீஷணன் சொன்னான். "தூதர்களைக் கொல்லுவது கூடாது என்று ராஜ நீதி அறிந்தவர்கள் அனைவரும் சொல்லி வருவதால் இதைச் செய்ய வேண்டாம். அங்கஹீனம் செய்யலாம், கசையடி கொடுக்கலாம், சூடு போட்டு விடலாம், மரண தண்டனை மட்டும் வேண்டாம்'' என்று விபீஷணன் யோசனை சொன்னான்.

"பாபகாரியம் செய்தவனைக் கொல்வதில் என்ன தவறு?'' என்று கேட்டான் ராவணன்.

"அப்படியல்ல. இவன் என்ன குற்றம் செய்தவனாக இருந்தாலும், அது பிறருடைய ஏவலினால் செய்யப்பட்டது. அவர்களை விட்டு விட்டு வெறும் கருவியாக வந்த ஒரு சாரனையோ தூதனையோ பிடித்துக் கொல்வதில் ஒரு பயனுமில்லை. இவனை யார் அனுப்பினார்களோ அவர்களைத் தண்டிப்பதற்கு வழி தேடுவீராக. அவர்களைத் தண்டிக்க வேண்டுமானால் அவர்கள் இவ்விடம் வருவார்கள். அப்போது அவர்களைச் சரியானமுறையில் தண்டிக்கலாம். இவனைக் கொன்று விட்டால் நம் எதிரிகள் இங்கே வருவதற்கு இடமே இராது. இவன் உயிருடன் திரும்பிப் போய்ச் சொன்னால் அவர்கள் வந்து நம்மைத் தாக்குவார்கள். அப்போது அவர்கள் சரியான தண்டனை நம்முடைய பலத்தால் அடைவார்கள். அற்பமான ஒரு சாரனைக் கொல்வதில் என்ன புகழ்? என்ன பிரயோஜனம்? ராஜ தருமத்திலிருந்து தவறினது ஒன்றே நிற்கும்'' என்றான் விபீஷணன் வினயமாக.

இந்த யோசனையை ராவணன் ஒப்புக் கொண்டான். "சரி, வானரத்துக்கு முக்கியமான லட்சணம் அதன் வால். இவன் வாலைக் கொளுத்தி அடித்துத் துரத்தி விடுங்கள்'' என்றான் ராவணேசுவரன்.

இப்படி அரக்கர் மன்னன் சொன்னதும் வேலைக்காரர்கள் ஹனுமானை வெளியே கொண்டு போனார்கள். வாலுக்குப் பழந் துணிகளைக்கொண்டு நன்றாகச் சுற்றினார்கள். வால் வளர்ந்தது. வளர வளர, கிடைத்த பழந் துணிகளைக் கொண்டு சுற்றி எண்ணெய் விட்டு நெருப்பு வைத்து விட்டார்கள். தீப்பற்றி எரிய ஆரம்பித்தது. கயிற்றால் கட்டப்பட்ட ஹனுமானை லங்கா நகரத்துத் தெருக்கள் தோறும் இழுத்துச் சென்றார்கள்.

"இதோ நம் நகரத்துக்கு வந்த திருடன்!'' என்று பெண்கள் குழந்தைகள் எல்லாரும் பார்த்துப் பரிகசித்துச் சந்தோஷப்படும்படியாக ராக்ஷசர்கள் ஹனுமானை ஊரில் எல்லாத் தெருக்கள் வழியாகவும் பெரும் வாத்திய கோஷங்களுடன் கொண்டு போய்ப் பெரு மகிழ்ச்சி அடைந்தார்கள்.

அசோகவனத்தில் சீதைக்கு ராக்ஷசிகள் சொன்னார்கள். "உன்னோடு பேசிற்றே அந்தத் திருட்டுக் குரங்கு, அதற்கு என்னவாயிற்று தெரியுமா? வாலுக்கு எண்ணெய்த் துணி சுற்றி நெருப்பு வைத்து விட்டார்கள். வால் எரிந்து கொண்டிருக்கிறது. அவனை இழுத்துக்கொண்டு ஊர்வலம் செய்கிறார்கள்" என்று சொல்லி சீதையைப் பரிகசித்தார்கள்.

சீதை அக்கினி மூட்டி, "ஹே! அக்கினியே, நான் செய்த புண்ணியம் ஏதேனும் இருந்தால், நான் உண்மைப் பதிவிரதையானால் நீ ஹனுமானுக்குக் குளிர்ந்து போவாயாக" என்று பிரார்த்தித்தாள்.

ஹனுமானும் எல்லா அவமானத்தையும் அடிகளையும் அக்கிரமங்களையும் பொறுத்துக் கொண்டு தெருத்தெருவாக எல்லா இடங்களிலும் பார்த்துக் கொண்டு சென்றான். நகரத்தில் எல்லாத் தெருக்கள் சந்துகளிலிருக்கும் பெண்களும் குழந்தைகளும் வேடிக்கை பார்க்கட்டும் என்று மாருதியை எல்லா இடங்களுக்கும் கொண்டு போனார்கள். அவனும் பேசாமல் நகரத்தின் கோட்டை முதலிய ரகசியங்கள் முற்றிலும் நன்றாகப் பார்த்துக் கொண்டே போனான். "என் எஜமானனுக்கு இது உதவும்" என்று பொறுமையாகப் பார்த்துக் கொண்டே சென்றான்.

"இது வென்ன ஆச்சரியம்! நெருப்பு வைத்திருக்கும் எண்ணெய்த் துணிகள் மட்டும் பற்றி எரிகிறது. என் வாலுக்கோ அந்தத் தீ குளிர்ந்தே இருக்கிறது! ராம காரியத்தில் பஞ்ச பூதங்கள் உதவுகிறது என்பதற்கு இது அடையாளம். கடலில் மலை கிளம்பி எனக்கு உபசாரம் செய்யவில்லையா? அப்படியே அக்கினி தேவனும் இப்போது என்னை வருத்தாமல் குளிர்ந்திருக்கிறான் போலிருக்கிறது. அல்லது என் தந்தை வாயு தேவனுடைய நட்பை மதித்து அக்கினி என்னை எரிக்காமல் தணிந்திருக்கிறான் போலிருக்கிறது. ஆயினும் இந்த சமயத்தை விட்டு விடலாகாது. இந்தத் துஷ்டர்களுக்குச் சரியான பயம் உண்டாக்கிப் போவதற்குத் தகுந்த சந்தர்ப்பம் தானாக வந்திருக்கிறது" என்று யோசிக்கலானான்.

திடீர் என்று தன் உருவத்தைச் சுருக்கிக் கொண்டு கட்டியிருந்த கட்டுகளையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, மறுபடி பெரும் வடிவத்துடன், எரியும் வாலுடன் கிளம்பிப் பெரியதொரு மாளிகை மேல் குதித்து ஏறி நின்றான். கையில் ஒரு கம்பத்தைப் பிடுங்கிக் கொண்டு அதை அனைவர்களும் நடுங்கச் சுழற்றினான்.

பிறகு அங்கிருந்து மாளிகை மாளிகையாகத் தாவிக் குதித்து ஒவ்வொரு வீடும் பற்றியெரிய நெருப்பு வைத்துச் சென்றான். சிறிது நேரத்திற்குள் காற்றும் வீசிற்று. நகரமெல்லாம் தீப்பற்றி ஆகாயமளாவ எரிந்தது. அரக்கர்களும் பெண்களும் குழந்தைகளும் குய்யோ முறையோ என்று கதறிக் கொண்டு இங்கு மங்கும் அலைந்தார்கள்.

'இந்தக் குரங்கு யமனே!' என்று சிலர், 'இவன் அக்கினி தேவனே!' என்று சிலர், இன்னும் இப்படிப் பல விதமாக ராக்ஷசர்கள் கத்திக் கொண்டு பயந்து எரியும் வீடுகளிலிருந்து தப்பியோடினார்கள்.

தான்பட்ட இம்சையை நினைத்து எரியும் லங்கையைப் பார்த்து ஹனுமான் மிக மகிழ்ச்சியடைந்தான். திரிகூட மலையில் ஒரு உயர்ந்த இடத்திலிருந்து இதைப் பார்த்துத் திருப்தியடைந்து பிறகு கடலில் போய் மூழ்கி வாலில் இருந்த நெருப்பை அணைத்துவிட்டு நின்றான்.

*  *  *

"ஐயோ, என்ன செய்தேன்! கோபத்தினால் மதியிழந்தேன். எவ்வளவு பலம் இருந்து என்ன பயன்? எவ்வளவு சாமர்த்தியம் ஐசுவரியம் இருந்தாலும் கோபத்தை அடக்கத் தெரிந்தாலல்லவோ எல்லாம் பயன்படும். சீதையும் இந்தப் பெருந் தீயில் மாண்டல்லவா போயிருக்க வேண்டும்! சர்வநாசமாக அல்லவா முடிந்தது, நான் கோபத்தில் செய்த காரியம்! ஐயோ! என்னைப் போன்ற மூடன் இல்லை, பாவி இல்லை! அரக்கர்கள் பேரில் கொண்ட கோபம் சீதையைக் கொன்றது. இனி நான் இங்கேயே உயிர் நீத்து என் வாழ்க்கையையும் வெட்கத்தையும் தீர்த்துக்

கொள்ள வேண்டும்!" என்று தாங்க முடியாத துக்கத்தில் மூழ்கினான்.

அப்போது ஆகாயத்தில் யாரோ பேசுவது கேட்டது. லங்காநகரம் தீப் பற்றி யெரிவதைக் கண்ட சாரண யக்ஷர்கள் ஆகாயத்தில், "ஆஹா! என்ன அற்புதச் செயல்! ஹனுமானுடைய பராக்கிரமம் வாழ்க! சீதை இருக்கும் இடம் தவிர மிகுதி லங்கை முழுவதும் தீப்பற்றி யெரிகிறது" என்று பேசி மகிழ்ந்தார்கள்.

இது ஹனுமான் காதில் பட்டது. "ஓ! பிழைத்தேன்! சீதையல்லவோ என் உயிரைக் காப்பாற்றினாள். அவள் புண்ணியமல்லவோ நெருப்பு என்னைத் தீண்டாமல் வாலில் குளிர்ந்து நின்றது. நெருப்பு அந்தக் கற்புத் தேவியை எப்படித் தீண்டும்? அக்கினியை அக்கினி என்ன செய்யும்? சீதையிடம் நான் வைத்த நெருப்பு செல்லவில்லை. அக்கினி தேவனே உதவி யிருக்கிறான். ராம காரியமல்லவா? சமுத்திர ராஜனும் மைனாகமும் உதவவில்லையா?" என்றிவ்வாறு எண்ணி உடனே அசோக வனம் சென்றான்.

சிம்சுபா மரத்தடியில் உயிருடன் உட்கார்ந்திருந்த சீதையைக் கண்ணால் கண்டு மிக மகிழ்ந்து, நமஸ்கரித்து, "தாயே! தாங்கள் க்ஷேமமாய் இருப்பதைக் கண்டேன். இது தங்கள் சக்தி. என் பாக்கியம். நான் போய் வருகிறேன்" என்றான் ஹனுமான்.

ஜானகியும் "நீயல்லவோ வீரன்! உன்னால் ஆகாத காரியமில்லை. சீக்கிரம் என் நாதன் வந்து அரக்கர்களை வீழ்த்தி, என்னை அடையச் செய்வாய். இது நீ ஒருவனே செய்ய முடியும்" என்றாள்.

"கோடிக்கணக்கான வானர சைன்யத்துடன் சுக்ரீவன் ராம லக்ஷ்மண வீரர்களுடன் இங்கு வந்து சேருவான். ராவணனும் அவன் துஷ்ட கூட்டமும் மடிவார்கள். ரகுநந்தனன் உம்முடன் அயோத்திக்குத் திரும்பிப் போவான். துக்கப்படாதீர். மங்களம். சீக்கிரம் அவர்கள் வருவார்கள் என்று நிச்சயமாக இருப்பீராக."

இவ்வாறு சமாதானப் படுத்தி விடைபெற்றுக் கொண்டு சென்றான். கடற்கரையில் அரிஷ்ட மலை யென்ற அழகிய மலை பேரில் ஏறி ஆகாயத்தில் கிளம்பினான்.

வழியில் மைனாக மலை தன்னை எதிர் பார்த்து நின்றதைக் கண்டு அதைக் கையால் அன்போடு தடவிக்கொடுத்து விட்டு, நிற்காமல் வில்லினின்று செல்லும் அம்பின் வேகத்தோடு நேராகச் சென்றான். மகேந்திர மலையின் சிகரம் தெரிந்ததும் அக்கரை வந்தது என்று அறிந்து ஒரு பெரும் கர்ஜனை செய்தான். ஆகாயத்தில் கருடனைப்போல் வரும் ஹனுமானைப் பார்த்துக் கொண்டிருந்த வானரங்கள் "வந்து விட்டான்! வந்து விட்டான்!" என்று ஆரவாரம் செய்தார்கள். அது வரையில் கவலையும் கண்ணீருமாக இருந்த வானரங்கள் அடங்கா மகிழ்ச்சி யடைந்து குதித்தார்கள்.

ஜாம்பவான் "நிச்சயம் வெற்றியுடன் திரும்பி வருகிறான். இல்லாவிடில் இப்படி கர்ஜிக்க மாட்டான்" என்றான். எல்லாரும் மரங்களும் குன்றுகளும் ஏறி ஹனுமான் ஆகாயத்தில் பறந்து வருவதைப் பார்த்துக் கொண்டே மகிழ்ச்சியோடு நின்றார்கள்.

மலைகளும் மரங்களும் எல்லாம் வானரங்களால் நிறைந்து விளங்கும் காட்சியை ஆகாயத்தி லிருந்து பார்த்து ஹனுமான் மகிழ்ச்சி யடைந்தான். ஆரவாரத்துக் கிடையில் மகேந்திர மலைமேல் இறங்கினான்.

# நீங்கள் அதை நம்பலாம்



## அவள் அணிவது

**கடாவ் வாயில்**



உள் நாட்டு
சரக்குகளையே
வாங்குங்கள் —
நல்ல ரகமாக
வாங்குங்கள்.

# மேலும் இப்பொழுது

# புதிய பியட் 1100 டிலக்ஸ்

## மிக சுறு சுறுப்புள்ளது-அதிக சௌகரியங்கள்-சிக்கனமானது

முன்னேறின தோற்றம்—

ஜாஸ்தியான க்ரோமியம் அலங்கரிப்புகள்

அதிக வசதிகள்—

ஸ்டாண்டர்டு எக்யூப்மெண்டாக ட்யூப் இல்லாத டயர்கள், பின் பார்வை கண்ணாடியில் விளக்கு. இரண்டு வெய்யல் காப்புகள். பின் சீட்டுகளுக்கு கைபிடிகள்.

மலிவானது—

எக்ஸ் பாக்டரி ரூ. 9,450/- எல்லா வரிகளும் நீங்கலாக



உங்களுடைய வியாபாரி யிடம் இன்றே பாருங்கள்

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்

தி பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட்

ஆக்ரா ரோடு, குர்லா, பம்பாய்

*விற்பனையாளர்கள் :*

டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்டு ஸன்ஸ் லிமிடெட், மதுரை

சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட், மவுண்ட் ரோடு, சென்னை

# இலங்கைப் பிரதமரின் பிடிவாதம்

கொழும்பு, ஜுன் மீ, 18 உ

இலங்கை இந்திய அரசாங்க அதிகாரிகளுக்கிடையில் இவ் வாரம் மறுபடி நடைபெற்ற சம்பாஷணை சமரச முடிவு ஏதும் ஏற்படாமல் "புஸ்" வாணம் மாதிரியாகி விட்டபொழுதிலும் இந்த மகாநாடு முக்கியமான சில உண்மைகளை வெளிப்படுத்த உதவி யிருக்கிறது. அதாவது இலங்கை இந்தியர் பிரச்னையில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்க்க இலங்கை இந்திய ஹைகமிஷனரும் இலங்கை அரசாங்கமும் மேற்கொண்டு பேச்சுகள் நடத்துவதில் பயனில்லை யென்பதும் இனி இரு அரசாங்கங்களும் நேரடியாகத்தான் பேச்சு நடத்த வேண்டுமென்பதும் தெளிவாகி விட்டன. டில்லி ஒப்பந்தத்துக்கு ஹை கமிஷனர் ஸ்ரீ சக்கரவர்த்தி அளிக்கும் வியாக்கியானத்தை இலங்கை ஒப்புக் கொள்வதற்கில்லை யென்றும் சரியான வியாக்கியானத்தை நேருஜியிடமே நேரில் கேட்டுக் கொள்வதாயும் பிரதம மந்திரி ஸர் ஜான் கோத்தலைவாலா இவ்வார மகாநாட்டில் பச்சையாகச் சொல்லியதாய்த் தெரிய வருகிறது.

இரண்டாவதாக, மிகமிகக் கடுமையாயுள்ள பிரஜா வுரிமைச் சட்டத்தையோ அல்லது இமிக்ரேஷன் சட்டத்தையோ திருத்தும் பேச்சுக்கே இடம் கிடையாதென்று பிரதமர் ஸர் ஜான் தெளிவாகத் தெரிவித்து விட்டார். தற்சமயம் அமுல் நடந்து வரும் விபரீதமான பிரஜாவுரிமைச் சட்டத்தின்படி உரிமை பெறக்கூடியவர்களுக்கு மட்டுமே இந் நாட்டில் பிரஜாவுரிமை வழங்க முடியுமென்றும் இந்தியா கோருவதைப் போலச் சட்டத்தைத் தளர்த்துவது அசாத்திய மென்றும் இலங்கை அறிவித்து விட்டது. இந்த நிலைமையில் இரு தேசப் பிரதமர்களும் மறுபடியும் சந்தித்துப் பேச ஏற்பாடுகள் செய்யப்படலாமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. நேருஜியும் ஸர் ஜானும் ஏற்கெனவே இரண்டு தடவைகள் சந்தித்துப் பேசி யிருப்பதை இங்குள்ள இந்திய வட்டாரங்கள் சுட்டிக் காட்டி, இலங்கை அரசாங்கம் நல்லெண்ணம் காட்டுவதாயிருந்தாலொழிய பிரதமர்கள் மறுபடியும் சந்திப்பதனால் பிரச்னை தீர்ந்து விடாதென்றும் இலங்கை இந்தியர் பிரச்னையை மனிதாபிமானத்துடன் தீர்க்க இலங்கை அரசாங்கம் முதலில் சம்மதம் தெரிவிக்க வேண்டு மென்றும் கூறுகின்றன.

• • •

இதற்கிடையில் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர் ஜனாப் அஸீஸ் சென்ற ஏப்ரல் மாதம் தலைவர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டது முதல் இலங்கை அரசாங்கத்துடன் கண்ணியமான அடிப்படையில் ஒத்துழைக்கக் காங்கிரஸ் தயாரென்பதை அடிக்கடி வெளியிட்டுக் கொண்டிருக்கிறார். அட்டன் மகாநாட்டில் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தின் நகல் ஒன்றைப் பிரதம மந்திரிக்கு அனுப்பி வைத்து, அந்தத் தீர்மானத்தின்படி பிரதம மந்திரி நடவடிக்கை யெடுத்துக் கொண்டால் இந்தியர் பிரச்னையில் ஏற்பட்டுள்ள நெருக்கடி சுலபமாகத் தீருமென்பதுடன் அரசாங்கத்துடன் காங்கிரஸ் ஒத்துழைக்கவும் வழி பிறக்குமென்று ஜனாப் அஸீஸ் தமது கடிதத்தில் சுட்டிக் காட்டி யிருக்கிறார். இலங்கையிலுள்ள இந்தியர்களுக்கு அவர்கள் இஷ்டப்பட்ட தேசத்தின் பிரஜையாவதற்கு வசதியளிக்க வேண்டுமென்பதுதான் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தின் சாரம். பெரும்பாலான இந்திய வம்சாவளியினர் இந்தியப் பிரஜைகளா யிருக்கவே மனப் பூர்வமாக விரும்புகிறார்களென்று இலங்கை அரசாங்கம் கூறுகிறது. இந்தக் கூற்று உண்மையா யிருக்குமானால் இஷ்டப்பட்ட தேசப் பிரஜைகளாகும் உரிமையை இந்திய வம்சாவளியினர் சுதந்திரமாக உபயோகிக்க இலங்கை அரசாங்கம் ஏன் அனுமதிக்கக் கூடாதென்பதுதான் காங்கிரஸின் கேள்வி. தங்களுடைய தீர்மானத்தை நேரில் விளக்கி யுரைக்க ஒரு தூதுகோஷ்டியை அனுப்பத் தயாரா யிருப்பதாயும் ஜனாப் அஸீஸ் பிரதமருக்கு எழுதியுள்ள கடிதத்தில் தெரிவித்திருக்கிறார். இதற்குப் பிரதம மந்திரி நேரடியாகப் பதில் கொடுக்கா விட்டாலும் பிரஜாவுரிமைச் சட்டத்தை மாற்றும் உத்தேச மில்லை யென்பதை மறைமுகமாக வெளியிட்டிருக்கிறார்.

—ரஜனி



சென்னை, தியாகராயநகர், 'கல்யாண் ஸ்டோர்' இம்மாதம் 12உ புதிய கட்டடத்துக்கு மாற்றப்பட்டது. அன்று ராஜாஜி விஜயம் செய்து ஒரு கைத்தறிப் புடவையின் நேர்த்தியைப் பார்த்து மகிழ்ந்தார்.



# பாலைவனத்து மான்

ஆசிரியர் :
பலவந்த் கார்கே

மொழிபெயர்ப்பு : ஜெயமணி

மறுநாளே ஜில்லா தலைமை ஸ்தாபனத்தின் அவசரக் கூட்டம் நடந்தாக வேண்டும். அந்தத் தகவலைச் சுற்று வட்டாரத்தில் உள்ள எல்லாக் கிராமங்களுக்கும் அறிவித்தாக வேண்டுமே! என்ன செய்வது! அந்தக் கிராமங்களுக்குச் செல்ல நல்ல ரஸ்தாக்கள் எதுவும் இல்லை. கரடு முரடான பாதையிலும் வயல் வரப்பு வழியாகவும் செல்லுவதைத் தவிர வேறு வசதி கிடையாது.

இந்தப் பிரச்னையைக் குறித்து எங்களுக்குள் விவாதம் நடக்கலாயிற்று.

எங்கள் ஜில்லா விவசாயிகள் சங்கத்தின் தலைமைக் காரியாலயம் தாழ்ந்த ஒரு மண் குடிசையில் அமைக்கப்பட்டிருந்தது. அதில் தான் நாங்கள் கூடி விவாதித்தோம். மறு நாள் நடக்கப் போகும் அவசரக் கூட்டத்தைப் பற்றி எல்லாக் கிராமங்களுக்கும் எப்படி அறிக்கை அனுப்புவது என்ற கேள்வி எழுந்தது.

அவ் விஷயமாக ஒவ்வொரு விவசாயியும் ஒவ்வொரு யோசனை கூறினர். ஆனால், எந்த யோசனையும், எங்களுடைய நோக்கம் நிறைவேறுவதற்குற்ற உருப்பட்ட யோசனையாகத் தோன்ற வில்லை.

அப்போது அக் கூட்டத்திலிருந்து மெதுவான ஒரு குரல் எழுந்தது.

"அந்த அறிவிப்பை என்னிடம் கொடுங்கள். அதை நான் எல்லாக் கிராமங்களுக்கும் தெரிவித்து விட்டு வந்து விடுகிறேன்" என்று சாவதானமாகக் கூறினான், அங்கிருந்த இளைஞனை ஒரு விவசாயி.

ஒன்றும் புரியாமல் எல்லோரும் அவன் பக்கம் திரும்பினர்.

அவனுக்கு இருபது வயது இருக்கும். அவனது உடைகள் பல இடங்



களில் தையல் போடப்பட்ட அரைக் கந்தலாக இருந்தன.

"எந்தக் கிராமத்துக்குப் போய் அறிவித்துவிட்டு வருவாய்?" என்று நான் அவனைக் கேட்டேன்.

"எல்லாக் கிராமங்களுக்கும் தான்" என்றான் இளைஞன்.

அவனது குரல் யந்திரம் போல் உணர்ச்சி யற்றதாக இருந்தது.

"எல்லாக் கிராமங்களுக்குமா! கூட்டம் நாளைக்கு என்பது உனக்குத் தெரியுமா?"

"ஆமாம், தெரியும். சில மணி நேரத்துக்குள் நான் எல்லாக் கிராமங்களுக்கும் சென்று திரும்பி விடுவேன். பத்து, பதினைந்து கிராமங்கள்தானே இருக்கின்றன. மொத்த தூரம் அறுபது மைல்களுக்கு மேல் இராதே!" என்று அலட்சியமாகக் கூறினான் இளைஞன்.

அவனது கூற்றில் எனக்கு நம்பிக்கை இல்லை. இளங் கன்று பயமறியாது என்பதைப் போல் அவன் அதில் உள்ள கஷ்டத்தை உணர வில்லை என்று தோன்றியது.

அவனை உற்றுப் பார்த்தேன். அவனது உடலின் நிறம் துருப்பிடித்த இரும்பு போல் இருந்தது. அவன் கழுத்து நீளமாயும், வயிறு சிறுத்தையின் வயிற்றைப் போல் உள்ளடங்கியும், முழங்கால்கள் வெண்கல கேடகங்களைப் போலவும் இருந்தன. இருந்தாலும் அவன் சில மணி நேரத்தில் அறுபது மைல் தூரம் ஓடமுடியும் என்பதை என்னால் நம்ப முடிய வில்லை.

அச் சமயத்தில் இந்தர் சிங் அவரது இரும்பு போன்ற கையால் என் தோளைத் தட்டினார்.

இந்தர் சிங் வயோதிகர். விவசாயிகளின் இயக்கத்தில் கலந்து கொண்டதற்காக இரண்டு தடவைகள் சிறை சென்றவர்.

"அது யார் தெரிய வில்லையா? அவன்தான் பாகூ கிராமத்தைச் சேர்ந்த பூதா சிங். அவனால் ஒரே மூச்சில் நூறு மைல்கள் ஓட முடியும்" என்றார் இந்தர் சிங்.

"நூறு மைல்களா!" என்று கேட்டேன் ஆச்சரியத்துடன்.

"ஆமாம்! அவனைப் பற்றி நீ கேள்விப் பட்டதில்லையா!" என்று கேட்டார்.

"இல்லையே" என்றேன்.

இந்தர் சிங் கூறத் தொடங்கினார்:

"பூதா சிங் கைக்குழந்தையாக இருந்த போது அவன் தந்தை சாம்பா இறந்து விட்டான். எனவே, அவன் மனைவி குழந்தை பூதா சிங்குடன் காட்டின் ஓரத்தில் உள்ள வயல்களுக்கு மத்தியில் குடிசையில் வசித்து வந்தாள். அவளிடம் மலைப் பிரதேச நாய் ஒன்று இருந்தது. பூதா சிங் குழந்தையாக இருந்த போது, அந்த நாயின் வாலை முறுக்கி அதனுடன் விளையாடுவான். அது இவனை விரட்டுவதும், இவன் அந்த நாயை விரட்டுவதுமாக ஓட்டப் பந்தயம் நடைபெறும். ஒட்டகங்கள், குதிரைகள், நரிகள், அணில்கள், முயல்கள் இவைகளை விரட்டுவதில் பூதா சிங்கின் பால்யப் பருவம் கழிந்தது. பூதா சிங் சிறுவனாக இருக்கும் போது முயல்களைக் கூட ஓடிப் பிடித்து விடுவான். வேகமாகச் செல்லும் ஒட்டகத்தினால் கூட ஒரே மூச்சில் ஐம்பது மைல்களுக்கு மேல் ஓட முடியாது. ஆனால், பூதா சிங் ஒரே மூச்சில் நூறு மைல்கள் ஓடுவான்!"

"அவ்வளவு தூரம் செல்ல அவனுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்?" என்று கேலியாகக் கேட்டேன்.

"அவனால் பன்னிரண்டு மணி நேரத்தில் நூறு மைல்கள் ஓடமுடியும்...என் வார்த்தை

யில் உனக்குச் சந்தேகம் இருக்குமாயின் அதைப் பரிசோதனை செய்து பார்த்துவிடு. சம்பந்தப்பட்ட எல்லாக் காகிதங்களையும் அவனிடம் கொடுத்து விடு. அவன் அவற்றைக் குறிப்பிட்டவர்களிடம் கொடுத்து விட்டு இன்றிரவே திரும்பி வந்து விடுவான்."

இவ்வாறு இந்தர் சிங் கூறியதும், நான் பூதா சிங்கிடம் பல கடிதங்களையும் கொடுத்தேன். அந்தக் கடிதம் ஒவ்வொன்றையும் அந்தந்தக் கிராமத்துக்குச் சென்று அதில் குறிப்பிட்ட நபர்களிடம் கொடுத்து விட வேண்டும் என்று கூறினேன்.

மறுநாள் சகல கிராமங்களிலும் உள்ள பதினைந்து சங்கங்களையும் சேர்ந்த காரியதரிசிகள் அவசரக் கூட்டத்துக்கு வந்திருந்தனர். நான் அவர்கள் ஒவ்வொருவரிடமும் விசாரித்தபோது, ஒவ்வொருவரும், பூதாசிங் தான் தங்களிடம் கூட்ட அறிவிப்புக் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்ததாகக் கூறினர்.

* * *

கூட்டம் முடிந்தபின் நான் பூதா சிங்கைக் கூப்பிட்டுப் பேசினேன். வக்கீல் குமார் செயின், தலைமை உபாத்தியாயராக இருந்த ஜுகல் கிஷோர், மாஜி நீதிபதி அஜ்மீர் சிங் முதலிய பிரமுகர்களும் ஒன்று சேர்ந்து பூதா சிங்குடன் பேசினர். சில மணி நேரத்தில் நூறு மைல் ஓடக்கூடிய ஆச்சரியமான சக்தி பொருந்திய அந்த வீரனை, கிராமத்தில் உள்ள சிலரைத் தவிர வேறு எவரும் இத்தனை நாளாக அறிந்து கொள்ளாததைக் குறித்து எல்லோரும் வருந்தினர்.

"உலகத்திலேயே நீண்ட தூர ஓட்டப் பந்தயத்தின் எல்லை இருபத்தைந்து மைல்கள் தான். ஆனால் நமது பூதா சிங் நூறு மைல்கள் ஓடுகிறான். அப்படியிருந்தும் அவனைக் கவனிப்பார் இல்லையே!" என்று முன்னாள் தலைமை உபாத்தியாயர் பெருமூச்சு விட்டார்.

"லண்டனில் நடக்கும் உலகப் பந்தயத்தில் கலந்து கொள்ள பூதா சிங்குக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் பட்சத்தில், நமது சிறிய கிராமமான பாகூ உலக படத்தில் ஒளி வீசிக்கொண்டிருக்கும்" என்றார் மாஜி நீதிபதி.

"நமது நாட்டில் எத்தனையோ ஆச்சரியங்கள் இருக்கின்றன. கடலில் மூழ்குவதிலும், குஸ்தி விளையாட்டிலும், வேட்டையாடுவதிலும் உலகம் வியக்கத்தக்க நிபுணர்கள் இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்குத் தங்களுடைய திறமையைக் காட்டச் சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. எனவே, அவர்களுடைய திறமையெல்லாம் வீணாகி, அவர்கள் அனாமதேயர்களாக மடிகிறார்கள்" என்று உருகினார் குமார் செயின்.

அவர்களில் வயோதிகரான இராணுவ ஹவில்தார் ஒரு யோசனை கூறினார்.

"கிரிக்கெட் முதலிய விளையாட்டுப் பந்தயங்களில் பாட்டியாலா மகாராஜா மிகுந்த ஆர்வமுள்ளவர். நாம் எப்படியாவது இந்தச் செய்தி அவர் காதில் படும்படி செய்து விட்டால், அவர் பூதா சிங்கை நிச்சயமாகச் சர்வதேச மல்லர்களின் போட்டிப் பந்தயத்துக்கு அனுப்பி விடுவார்" என்றார் ஹவில்தார்.

வழுக்கைத் தலை வியாபாரி பூதாசிங்கைச் சந்தேகத்துடன் பார்த்தார்.

"தூரத்தைப் பற்றி விவசாயிக்கு அதிகமாக எதுவும் தெரியாது. இவன் முப்பது மைல் தூரம் ஓடினால், தான் நூறு மைல் தூரம் ஓடியதாக நம்பி விடுவான். முதலில் நம் எதிரிலேயே இதை ஏன் பரீட்சித்துப் பார்க்கக் கூடாது! இதற்காகச் சிறிது தொகை வேண்டுமாயினும் வசூல் செய்து விடலாம். இங்குள்ள பெரிய மைதானத்தின் சுற்றளவு சுமார் நானூற்று நாற்பது கெஜம் ஆகும். இந்த மைதானத்தை பூதா சிங் நானூறு தடவை சுற்றி விட்டால் நூறு மைல்களாகி விடும். நாம் எல்லோரும் அந்தக் காட்சியைப் பார்க்கலாம். அதன் பிறகு பூதா சிங்கின் எதிர்காலத் திட்டத்தை நிர்ணயிக்கலாம்" என்றார் வழுக்கைத் தலை வியாபாரி கடைசியாக.

இந்த யோசனையைக் கேட்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தனர். அந்த யோசனைப்படி நடக்க பூதா சிங்கும் இசைந்தான்.

மேற்படி ஏற்பாட்டை உடனே தண்டோரா மூலம் எல்லோருக்கும் அறிவித்தனர்.

மறு ஞாயிற்றுக்கிழமை யன்று விடியற்காலம் முதற்கொண்டே ஜனங்கள் மைதானத்தைச் சுற்றிக் கூட ஆரம்பித்து விட்டார்கள்.

சரியாகக் காலை ஏழு மணிக்கு மாஜி தலைமை ஆசிரியர் 'விஸில்' கொடுக்கவே பூதா சிங் மைதானத்தைச் சுற்றி நூறு மைல் ஓட்டப் பந்தயத்தை ஆரம்பித்தான்.

பூதா சிங் ஓரே வித வேகத்தில் யந்திரத்தைப் போல் ஓடியதை எல்லோரும் ஆச்சரியத்துடன் கவனித்துக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு சுற்றையும் தலைமை உபாத்தியாயர் கவனமாகக் குறித்துக் கொண்டு வந்தார்.

மத்தியானம் பூதா சிங் ஓட்டத்தை நிறுத்தி விட்டு ஒரு டம்ளர் பால் சாப்பிட்டான். வியர்வையால் சொட்டச் சொட்ட நனைந்திருந்த உடைகளைக் களைந்து விட்டு வேறு உடைகளை உடுத்திக் கொண்டான். பிறகு தலையை வாரி, அவன் சமூக சம்பிரதாயப்படி உச்சந் தலையில் முடிச்சுப் போட்டுக் கைக் குட்டையால் தலை முடிச்சை நன்றாகக் கட்டிக் கொண்டான்.

பிறகு, மீண்டும் ஓட்டம் ஆரம்பமாயிற்று. பூதா சிங் மைதானத்தை நானூறாவது தடவை சுற்றியபோது சரியாக மாலை ஆறரை மணி ஆயிற்று. அதாவது குறிப்பிட்ட நேரத்துக்கு அரை மணி முன்பே பூதா சிங் தனது பந்தயத்தை முடித்து விட்டான்!

பூதாசிங் மைதானத்தை நானூறாவது தடவை சுற்றி முடித்ததும் அங்கு கூடியிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் கரகோஷமும் சந்தோஷ ஆரவாரமும் செய்தனர். பலர் பூதா சிங்கிடம் வந்து அவனை மனமார வாழ்த்தினார்கள். அவர்களில் இருவர் பூதா சிங்கின் வெற்றியைக் கண்டு பரவசம் அடைந்து அவனைத் தோளில் தூக்கிக் கொண்டு கடைத் தெரு வழியாகச் சென்றனர்.

பூதா சிங்கின் வெற்றி பற்றிய செய்தி பல கிராமங்களிலும் பரவியது. தனக்கு வாழ்த்துக் கூற வந்தவர்களிடம் "எல்லாம் கடவுள்

கிருபை" என்று ரொம்பவும் அடக்கமாகக் கூறிக் கொண்டான் பூதா சிங்.

"நான் லண்டனுக்குச் சென்றால் அங்கு நடக்கும் ஓட்டப் பந்தயத்தில் நிச்சயமாக வெற்றி பெறுவேன்" என்றும் அவன் நம்பிக்கையுடன் சொல்லிக் கொண்டான்.

பூதா சிங்கைப் பற்றிய செய்தியை நாங்கள் பத்திரிகைகளுக்கு அனுப்பினோம். அவன் பாட்டியாலா மகாராஜாவைப் பேட்டி காண்பதற்கான ஏற்பாடுகளையும் செய்யலானோம்.

பூதா சிங்கின் ஓட்டப் பந்தயம் நடந்த இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு, அவனது கிராமத்திலிருந்து அறுபது வயதான அவன் தாயார் வந்து சேர்ந்தாள்.

பூதா சிங் எதிர்காலத்தில் அகில உலகப் புகழ் பெறுவதற்கு இடமிருக்கிறது என்றும், எனவே, அவனைப் பாட்டியாலா மகாராஜாவினிடம் அனுப்பப் போவதாகவும் அவளிடம் கூறினோம். ஆனால், எங்கள் அபிப்பிராயத்துக்கு இணங்க அவள் மறுத்து விட்டாள்.

"என் மகனைப் பட்டணத்துக்கு அனுப்ப முடியாது. எனக்கு வயதாகி விட்டது. என்னால் வயல்களைக் கவனித்துக் கொள்ள முடியவில்லை. என் மகன் இல்லாவிட்டால், வயல்களிலிருந்து நரிகளையும் முயல்களையும் யார் விரட்டுவார்கள்! எங்கள் பழைய நாய் செத்து விட்டது. எனக்கு உதவியாக இப்போது என் மகனைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் இராமல் நான் உயிர் வாழ முடியாது. ஆகையால், நான் அவனைத் திருப்பி அழைத்துச் சென்றுதான் தீர வேண்டும்" என்று கத்தினாள் பூதா சிங்கின் தாய்.

அவளுக்கு மாஜி நீதிபதி பதில் அளித்தார்.

"பாட்டியம்மா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்கள் மகன் உலகப் பந்தயத்தில் வெற்றி பெற்று வரப் போகிறான். உலக மக்களின் புகழுக்குப் பாத்திரமாக வேண்டிய அவனை, நீங்கள் உங்கள் கிராமத்திலேயே அடைத்து வைத்திருக்கிறீர்கள். அவனுடைய எதிர்கால வாழ்வுக்கே நீங்கள் தடையாக இருக்கிறீர்கள். ஆகையால், நாங்கள் சொல்லுகிறபடி அவனை எங்களிடம் விட்டு விடுங்கள்" என்றார் மாஜி நீதிபதி.

அப்போது கூட பூதா சிங்கின் தாயாருக்குத் தன் மகனை விட்டுச் செல்ல விருப்பமில்லை.

கடைசியில், அவளுக்குப் பாட்டியாலா மகாராஜாவைப் பேட்டி காணச் சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறது என்று அங்கிருந்தவர்கள் வற்புறுத்திக் கூறிய பிறகு தான், அவள் தன் மகனை விட்டு விட்டு ஊருக்குச் செல்ல அரை மனத்துடன் சம்மதித்தாள்.

"கவலைப்படாதே, அம்மா. நான் கூடிய சீக்கிரம் கடல்களைக் கடந்து லண்டன் சென்று நூறு மைல் ஓட்டப் பந்தயத்தில் வெற்றி பெற்று வரப்போகிறேன். பிறகு நாம் பணக்காரர்களாகி விடுவோம்" என்று பூதா சிங்கும் தன் தாயாருக்கு ஆறுதல் கூறினான்.

மறு நாள் அவன் தாயார் அவனது சொந்தக் கிராமத்துக்குத் திரும்பிச் சென்று விட்டாள்.

பிறகு நாங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பூதா சிங் பாட்டியாலாவுக்குச் செல்லுவதற்கு உதவியாகச் சிறு தொகை சேகரிக்க முற்பட்டோம். அவன் தாற்காலிகமாக மாஜி நீதிபதி வீட்டிலேயே இருந்தான். அவருடன் தினசரி சீட்டு ஆடுவோருக்கு வெற்றிலை, புகையிலை, சிகரெட், சோடா முதலியன வாங்கி வருவதே அவனது வேலையாக இருந்தது.



தாடிக்காரர் :- போன வாரம் அடித்த மழை போதாது. அதனாலே ஏகப்பட்ட கொசு உண்டாகி உபத்திரவமாயிருக்கிறது!

குடைக்காரர் :- ஆமாம்! ஆனால் உங்களுக்குக் கொசு உபத்திரவம் ஒன்றும் தெரியாதே!

இப்படியே சில வாரங்கள் கழிந்தன. பூதா சிங்கை எல்லோரும் மறக்கத் தொடங்கினர். அவனுக்குத் தான் பாட்டியாலாவுக்குச் செல்லச் சந்தர்ப்பம் ஏற்படுமென்ற நம்பிக்கையும் மறையத் தொடங்கியது.

ஒரு நாள் அவன் என்னைப் பார்த்து, என்னிடம் தனது பரிதாப நிலையைப் பற்றிக் கூறினான்.

"பாட்டியாலா மகாராஜாவின் தர்பாரில் இருந்த ஒரு பிரமுகரை எனக்குத் தெரியும். அவர் பரீத்கோட்டில் இருக்கிறார். அங்கு என்னை அனுப்பி விட்டால், அவர் மூலம் மகாராஜாவைப் பேட்டி காண நான் முயற்சிப்பேன்" என்றான் பூதா சிங்.

அவனது கோரிக்கைக்கு இணங்க நான் அவனை பரீத்கோட்டிற்கு அனுப்பிவைத்தேன்.

அதன் பின் சில நாட்கள் கழித்து, பூதா சிங் மிகவும் கஷ்டப்பட்டுப் பாட்டியாலாவுக்குச் சென்றதாகக் கேள்விப்பட்டேன். பல நபர்களின் வழியாக அவன் கடைசியில் மகாராஜாவின் இராணுவக் காரியதரிசியையும் பார்த்து விட்டான். மகாராஜாவைப் பேட்டி காண ஏற்பாடு செய்வதாக மேற்படி காரியதரிசி பூதாசிங்குக்கு உறுதி கூறியிருப்பதாகவும் தெரிந்தது.

* * *

இந் நிலையிலே, பாட்டியாலாவில் மாத்திரமல்ல, இந்தியா முழுவதும் மின்னல் வேகத்தில் பல சம்பவங்கள் நிகழலாயின. இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்

பட்டது. அதைத் தொடர்ந்து திடுக்கிடத் தக்க எத்தனையோ காரியங்கள் நிகழ்ந்தன. எனவே, பூதா சிங்கின் கதி என்ன ஆயிற்று என்பதே தெரிவதற்குச் சிறிதும் இடமிராமற் போய் விட்டது.

1948—ம் வருஷ மத்தியில் பாரத நாட்டுடன் சமஸ்தானங்களின் இணைப்புப் படலம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. பாரத நாட்டின் உதவிப் பிரதம மந்திரி சர்தார் பட்டேல் மன்னர்களுடன் சமரசப் பேச்சு நடத்துவதற்காக நாடு முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்.

சர்தார் பட்டேல் பாட்டியாலாவுக்கு விஜயம் செய்தபோது நான் அந்நகருக்குச் சென்றிருந்தேன். சர்தார் பட்டேலை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். திறந்த மோட்டாரில் அவருக்குப் பக்கத்தில் மகாராஜா வீற்றிருந்தார். அந்த மாபெரும் கூட்டத்தில் எதிர்பாராதவிதமாக நான் பூதா சிங்கைச் சந்திக்க நேர்ந்தது.

"மகாராஜாவைப் பேட்டி காணும் படலம் எந்த மட்டில் இருக்கிறது!" என்று நான் அவனைக் கேட்டேன்.

"மகாராஜாவுக்கு இப்போதெல்லாம் ஓய்ச்சல் ஒழிவே இல்லையாம். அவருக்குக் கொஞ்சம் அலுவல்கள் குறைந்த பின் நான் பேட்டி காண்பதற்கு ஏற்பாடு செய்வதாகக் கூறியிருக்கிறார்கள்" என்றான் பூதா சிங்.

நான் ஊருக்குத் திரும்பி வந்தபின் இரண்டு வருஷகாலம் வரையில் பூதாசிங்கைப் பார்க்கவே யில்லை. எனினும், அவனைப் பற்றிய தகவல்களை அடிக்கடி விசாரித்து வந்தேன். மகாராஜாவுக்கு ஒன்றுமேல் ஒன்றாக அவசர அலுவல்கள் இருந்து வந்ததால், பூதா சிங்குக்கு அவரைப் பேட்டி காணச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை என்று தெரிந்தது. பாவம்! எந்த ஜன்மத்தில் அவனுக்கு அத்தகைய சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறதோ என்று என் மனம் எண்ணமிட்டது.

ஒரு நாள் பூதா சிங் இராணுவக் காரியதரிசியிடம் தான் தன் கிராமத்துக்குச் செல்ல உத்தேசித்திருப்பதாகக் கூறியதாய்த் தெரிந்தது. அதற்கு அவர், அனாவசியமாகச் செலவுசெய்து கொண்டு கிராமத்துக்குச் செல்ல வேண்டாமென்றும் மகாராஜாவின் பேட்டி கிடைக்கும் வரையில் அரண்மனை சமையல் அறைக் காவலனாக வேலை பார்த்து வரலாமென்றும் அவனுக்கு யோசனை கூறினாராம்.

அப்போதிருந்த நிலையில், அந்த யோசனை சிறந்ததாகத் தோன்றவே பூதா சிங் அதற்கு இசைந்து விட்டான்.

அரண்மனை சமையல் அறைக்குக் காவலாக நாள் முழுவதும் பேசாமல் உட்கார்ந்திருப்பதே பூதா சிங்கின் வேலை!

* * *

ஒரு வருஷம் கழித்துச் சொந்த வேலையாக நான் பாட்டியாலாவுக்குச் சென்றிருந்தேன். நான் ஓரிடத்தில் ரஸ்தா வழியாகப் போய்க் கொண்டிருந்தபோது, எதிரில் வந்த ஒரு சைக்கிள் ரிக்ஷா என் கவனத்தை இழுத்தது. உற்றுப் பார்த்தபோதுதான் அதில் உட்கார்ந்து கொண்டிருப்பது பூதாசிங் என்பது

எனக்குத் தெரிய வந்தது. அவனுக்குப் பக்கத்தில் ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள்.

என்னைக் கண்டதும் பூதா சிங் சிரித்துக் கொண்டே ரிக்ஷாவை நிறுத்தச் சொன்னான்.

"மகாராஜா கோடை காலத்தைக் கழிப்பதற்காகச் செயில் நகரில் உள்ள அவருடைய வசந்த மாளிகைக்குச் சென்றிருக்கிறார். திரும்பி வந்ததும் நிச்சயமாக எனக்குப் பேட்டி கிடைக்கும். பேட்டி காண்போர் ஜாபிதாவில் என் பெயர் தான் முதலில் இருக்கிறதாம். கூடிய சீக்கிரம் லண்டனில் நடைபெறப் போகும் ஓட்டப் பந்தயத்துக்கு இந்தியர் கோஷ்டியை அனுப்பப் போகிறார்களாம். அந்தக் கோஷ்டியில் நானும் தேர்ந்தெடுக்கப் படுவேன்."

பூதா சிங்கின் தளரா நம்பிக்கை என் மனத்தை என்னவோ செய்தது. இத்தனை வருஷங்களாகியும் இன்னும் அவனது நம்பிக்கை குன்றவில்லை! அவனையே பரிதாபமாகப் பார்த்தேன்.

"ஏன் ரிக்ஷாவில் செல்லுகிறாய்!" என்று வியப்புடன் கேட்டேன்.

அவ்வளவுதான்! அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கிழவி உடனே பிரலாபிக்கத் தொடங்கி விட்டாள்.

"மகனே, நான் என்ன சொல்லுவேன்! என் மகன் பூதா வயல்களைக் கவனித்துக் கொண்டு சுதந்திர புருஷனாக இருந்தான். ஆனால் இப்போதோ அவன் மகாராஜாவின் அரண்மனையில் அடிமையாகி விட்டான். ஓடியாடி வேலை செய்த அவனுக்குச் சதா சர்வ காலமும் உட்கார்ந்திருந்ததால் கால்கள் வீங்கி விட்டன. தொடைகளிலும் முழங்கால்களிலும் இரத்தம் கட்டிவிட்டதாம். பார், அவன் கால்கள் எவ்வளவு வீங்கியிருக்கின்றன! நான் என்ன செய்யப் போகிறேனோ!"

பூதா சிங்கின் தாய் இவ்விதம் கூறியதைக் கேட்டதும் நான் அவனது கால்களைப் பார்த்தேன். அவற்றைப் பார்க்கச் சகிக்கவேயில்லை. அதே சமயம் பூதா சிங்கின் முகத்தைப் பார்த்தேன். அவன் முகத்தில் இன்னும் நம்பிக்கை ஒளி வீசியது!

"டாக்டர் எனக்கு மின்சார சிகிச்சை செய்து வருகிறார். இன்னும் சில நாட்களில் என் கால்கள் குணமடைந்து விடும். அதன் பிறகு என்னால் ஓட முடியும். பின்னர் நான் லண்டன் சென்று நூறு மைல் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளலாம்!"

தாகத்தினால் பாலைவனத்தில் ஓடி ஓடிக் கடைசியாக எழுந்திருக்க முடியாமல் விழுந்து விட்ட கலைமான், சிறிது தூரத்தில் தோன்றும் கானல் நீரைக் கண்டு மீண்டும் நம்பிக்கை கொள்வது போல் இருந்தது பூதா சிங்கினுடைய நிலைமை!

தாயும் மகனும் சென்ற ரிக்ஷா மறையும் வரையில் அதையே பார்த்துக் கொண்டு நின்றேன். உலகிலேயே இணையற்ற ஓர் ஓட்ட வீரனின் வாழ்க்கை இப்படிப் பாழாகி விட்டதே என்று என் மனம் அங்கலாய்த்தது. அவனது தற்போதைய பரிதாப நிலைமைக்குக் காரண புருஷர்கள்மீது எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

பஞ்சாபி பாஷையில் முதற் பரிசுபெற்ற கதை.



சிவகங்கை M. Rm. M. ராம பிள்ளை அவர்களின் சகோதரரும், லேட் M. Rm. மாணிக்க வாசகம் பிள்ளை அவர்கள் செல்வனுமாகிய M. Rm. M. அருணாசலத்திற்கும் மேற்படியூர் S. M. கருமுத்துப் பிள்ளை அவர்களின் புதல்வி ராமலெக்ஷ்மிக்கும் 26-5-1955ல் மணமகள் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. பந்துக்களும், அன்பர்களும் ஏராளமாக வந்திருந்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர். அன்று மாலை கந்தர்வகான ஏழிசைச் செல்வன் ஸ்ரீ M.K. தியாகராஜ பாகவதர், T. P. சொக்கலால் ராம் சேட் ஆகியவர்களின் ஒருமையான இன்னிசைக் கச்சேரியும் நடந்தது. வாழ்க மணமக்கள்!

# திருட இயலாத குடும்ப சைஸ் பாக்கில்

# 'அனஸின்'

## வாங்குங்கள்

'அனஸின்' 32 வில்லைகள் கொண்ட டப்பா ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்பொழுது 4 அணுக்கள் மிச்சமாகின்றன. அனஸினை எப்பொழுதும் கையோடு வைத்துக்கொள்ளும் குடும்பங்களுக்காகவே இந்த டப்பாவை பிரத்தியேகமான முறையில் அமைத்திருக்கிறோம். அனஸினை அவர்கள் சதா வைத்திருப்பதற்கு காரணம் அதில் வலி நிவாரணத்தை விரைவில் அளிக்கும் 4 மருந்துகள் அடங்கியிருப்பதே:

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினில் அடங்கியிருக்கும் இந்த நான்கு மருந்துகள் நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து, பத்திரமாகவும், நிச்சயமாய், விரைவில் நிவாரணமும், தலைவலி, ஜுரம், ஜலதோஷம், பல்வலி மற்றும் தசை நார்களில் நோவு முதலியவற்றை போக்குகின்றது.




'அனஸின்' 2 வில்லைகள் கொண்ட பாக்கெட்டுகளிலும் கிடைக்கும்.

எப்பொழுதும் **அனஸின்** வில்லைகள் வேண்டுமென்றே கேளுங்கள்

A. 45




1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 6-ந் தேதி. "யாரோ ஒரு சிறு பள்ளிக்கூடப் பையனும், 'ஸ்டான்லி டென்னிஸ் கோப்'பை யைத் தட்டிக் கொண்டு போய் விட்டானும்." இதுதான் அன்று சென்னையில் எங்கு பார்த்தாலும் பேச்சாக இருந்தது.

ஆம், அந்தப் பையனுக்குப் பதின்மூன்று வயதுதான். தியாகராய நகர் ராமகிருஷ்ணா பள்ளியில் ஒன்பதாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். பார்க்கச் சிறியவன் தான். பெயர் கிருஷ்ணன்.

ஸ்ரீ கிருஷ்ணன் யார் என்பதைப் பற்றிச் சொல்லாமல், ஏதோ எழுதுவது சரியல்ல. 1939-ல் இந்தியாவின் நான்காவது டென்னிஸ் விளையாட்டுக்காரராக விளங்கிய ஸ்ரீ டி. கே. ராமநாதன் அவர்களின் புதல்வன் கிருஷ்ணன். மகனையும் பிரமாதமான விளையாட்டுக்காரராக்க வேண்டும் என்று ஸ்ரீ ராமநாதன் அவர்களுக்கு ஒரு ஆசை ஏற்பட்டது. பதினோராம் வயதில் முதன்முதலாகப் பயிற்சி கொடுக்க ஆரம்பித்தார், 13-ம் வயதில் ஸ்டான்லி கோப்பையை அலட்சியமாக ஜயித்தார் கிருஷ்ணன்.

1950-ல் ஸ்டான்லி கோப்பை வெற்றிக்குப் பிறகு, 1951, 52, 53 வருஷங்களில் அகில இந்தியச் சிறுவர் டென்னிஸ் போட்டியில் முதன்மை ஸ்தானம் வகித்தார் கிருஷ்ணன். 1951-ல் பெரியோர் போட்டியிலும் கலந்து கொண்டார். முதன் முதலில் எல்லாப் பந்தயத்திலும் வெற்றி பெறவில்லை. தோல்விதான் ஜயத்துக்கு முக்கிய ஊன்றுகோல் என்ற பழமொழியைக் கிருஷ்ணன் நன்கு அறிவார்.

1952-ல் சென்னை ராஜதானியில் முதன்மை ஸ்தானம் பெற்றார். அதே வருஷம் இங்கிலாந்தில் விம்பிள்டனில் நடக்கும் சிறுவர் போட்டியில் கலந்து கொண்டார். முழு வெற்றி கிட்டவில்லை. இந்தியாவுக்குத் திரும்பிப் பல வேறு போட்டியில் கலந்து கொண்டு தமது திறமையைக் காட்டினார். 1953-ம் வருஷம் மைசூர், நீலகிரியில் நடந்த போட்டிகளில் வெற்றிமேல் வெற்றி கிடைத்தது. மைசூர் மகாராஜா கிருஷ்ணனது திறமையை மெச்சி, இங்கிலாந்துக்குப் போய் விம்பிள்டனில் விளையாடப் பண உதவி செய்தார். அங்கு இரண்டாவது ஸ்தானம் பெற்றார். 1953-ம் வருஷம் இந்தியாவின் டேவிஸ் கப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஸ்ரீ சுமந்த் மிச்ராவின் தலைமையில் ஆஸ்திரேலியாவுக்குச் சென்றார். ஆட்டத்துக்கு ஆட்டம், இடத்துக்கு இடம், கிருஷ்ணனது திறமை அதிகரித்துக் கொண்டே வந்தது. ஆஸ்திரேலியாவிலிருந்து திரும்பி வந்ததும், அகில இந்தியப் போட்டியில், ஆர்க்கின்ஸ்டாலைத் தோற்கடித்து, இந்தியாவின் சாம்பியன் ஆனார். 1954-ம் வருஷம் மறுபடியும் விம்பிள்டனுக்குச் சென்றார். இந்த வருஷம், ஜூனியர் பட்டம் பெற்றார்.

'உலக அரங்கத்தில் கிருஷ்ணன் வாகை சூட வேண்டும்' என்ற எண்ணம் எல்லோருக்கும் எழுந்தது. ஹாரி ஹோப்மேனிடம் கிருஷ்ணன் பயிற்சி பெற்று வருவதற்காக, ஆஸ்திரேலியாவுக்கு அகில இந்திய டென்னிஸ் சங்கத்தார் அனுப்பி வைத்தார்கள். மூன்று மாதத்துக்குப் பிறகு அகில இந்தியப் போட்டியில் கலந்துகொள்ளக் கல்கத்தாவுக்கு அழைத்தனர். ஆனால் கிருஷ்ணன் ஆர்க்கின்ஸ்டாலிடம் தோல்விபெற்றார். அந்தத் தோல்விக்குப் பிறகு, அவர் அநேக இடங்களில் ஆர்க்கின்ஸ்டாலை ஜயித்திருக்கிறார்!

இந்த வருஷம் டேவிஸ் கப் போட்டிக்குக் கிருஷ்ணனும் நரேஷ் குமாரும் இந்தியாவின் பிரதிநிதிகளாகச் சென்றனர். எதிப்து நாட்டைச் சுலபமாகத் தோற்கடித்தனர்.

சமீபத்தில் மான்செஸ்டரில் ஒரு டென்னிஸ் போட்டி நடந்தது. அதில் கிருஷ்ணன் தமக்கு அழியாப் புகழ் தேடிக் கொண்டார். விம்பிள்டன் சாம்பியன் டிராப்னியை மிக சுலபமாகத் தோற்கடித்தார் கிருஷ்ணன். இதுவரை ஒரு இந்தியனும், விம்பிள்டன் சாம்பியன்களைத் தோற்கடித்ததில்லை. இந்த மகத்தான வெற்றியை எல்லோரும் பாராட்டுகின்றனர்.

தென்னிந்தியாவில் இதுவரை கிருஷ்ணனைத் தவிர ஒருவரும் அகில இந்திய சாம்பியனாக ஆகவில்லை. தென்னிந்தியாவுக்கே தனிப் புகழ் தேடிக் கொடுத்தவர் கிருஷ்ணன். பதினேழு வயதில் அகில இந்திய சாம்பியனாக ஒருவருமே ஆனதில்லை. இந்தத் தனிப்பெரும் புகழ் திரு கிருஷ்ணனுக்குத்தான்.

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 24. உணவு விடுதிகள்

இன்று உணவு விடுதிகளெல்லாம் நோய்களைப் பரிமாறும் பண்டகசாலை என்று சொன்னால் மிகையாகாது. மக்கள் வயிற்றை நிரப்பும் பணியில் நோய்களையும் நிரப்பி விடுகிறார்கள். உணவு விடுதிகளை நடத்தும் நண்பர்களுக்குக் கோபம் வரலாம். ஆனால் உண்மையைப் பொதுஜன நன்மைக்காக எடுத்துக் காட்டத்தான் வேண்டியிருக்கிறது. மற்ற வியாபாரங்களிலும் பல மோசடிகள் நடக்கலாம். ஆனால் உயிரை வளர்க்கும் உணவில் மோசடிகள் செய்வது, கவனக் குறைவாய் விடுதிகளை நடத்துவதைச் சிறிதும் பொறுக்கவே முடியாது.

இன்றைய வாழ்க்கையில் பொதுவாக உணவு விடுதி இல்லாமல் அநேகர் வாழவே முடியாது. அவ்வளவு முக்கியத்துவம் பெற்று விட்டது. எதிர்காலத்தில் இதன் அவசியமும் முக்கியத்துவமும் இன்னமும் அதிகமாகுமே தவிரக் குறைய மார்க்கமில்லை. இதில் நல்ல வருமானமும் இருக்கிறது. இன்றைய வருமானம் தரக்கூடிய முதன்மையான தொழில்களில் ஹோட்டல் தொழிலும் ஒன்று. மற்றதையாவது அவசியமானால் பணம் சௌகரியமிருப்பவர்கள் அனுபவிக்கக் கூடியது. ஆனால் சாப்பாட்டு விஷயத்தில் அம்மாதிரி சொல்வதற்கில்லை. எல்லோரும் வேளா வேளைக்குச் சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும்.

உத்தியோக விஷயமாகவும், வியாபார விஷயமாகவும், சொந்த விஷயமாகவும் பலர் வீட்டை விட்டு வெளியில் அலையும்போது பசி எடுத்ததும் ஹோட்டல்களைத்தான் நாடுவார்கள். பலர் மாதக் கணக்கில், வருடக் கணக்கில் உணவு விடுதிகளையேதான் நம்பி வாழ வேண்டியதாய் இருக்கிறது. சிலர் வாழ்நாள் முழுதும் உணவு விடுதிகளையே அண்டி வாழுகிறார்கள். ஆனால் அங்கு ஏதோ வயிற்றை நிரப்புகிறார்களே அன்றி, ஆரோக்கியம், சுத்தம், சத்துள்ள ஆகாரம் என்று பார்ப்பதில்லை. ஏன், பார்ப்பவர்களும் இல்லை!

முதலில் சுத்தத்தை எடுத்துக் கொள்வோம். சுத்தத்தைப் பார்த்தால் ஹோட்டலில் சாப்பிடவே முடியாது என்று முடிவு கட்டி விடலாம். ஆனால் சாப்பிட்டுத்தான் ஆக வேண்டியதாய் இருக்கிறதே! இதற்கு ஒரு பரிகாரமும் இல்லையா! இதைக் கண்காணிப்பார் இல்லையா! யார் கவனிப்பது! யார் பொறுப்பு! மக்கள் இவ்வாறுதான் கடைசி வரையில் இருக்க வேண்டியதுதானா! எத்தனையோ துறைகளில் பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டு, நினைத்தபடி நடக்கும் விஞ்ஞானம் மிகுந்த இந்தக் காலத்தில், "ஊம்! இவைகளெல்லாம் சாத்தியமா!" என்று வெற்றுப் பேச்சு மட்டும் பேசி விடுவதால் திருப்தி அடைந்து விடுவதா! இவைகளையெல்லாம் மக்களும் சிந்தனை செய்ய வேண்டும். அரசாங்கமும் பாதுகாப்பளிக்க வேண்டும். மக்களுக்கு நோய்களினின்று பாதுகாப்பளிக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும்.

முதலில் உணவு விடுதிகளில் தண்ணீர் சௌகரியம் வேண்டும். அந்தத் தண்ணீரும் குடிக்கும் தண்ணீராகவும், சுத்தமாகவும் இருக்க வேண்டும். பின் சாப்பிட்ட பாத்திரங்களை ஆரோக்கிய விதிப்படி கழுவ வேண்டும். உணவு ஆரோக்கிய முறைப்படி சத்து இழக்காமல் சமைக்கப்பட வேண்டும். இவைகளெல்லாம் கவனிக்கப்படாமல் வெறுமனே அழகாய்ப் பீங்கான் தட்டுகளிலும், எவர்சில்வர் தட்டுகளிலும் ஸ்பூனுடன் கொண்டு வந்து வைத்து விட்டால், பாதி ஸ்பூன்வரை வாயில் நுழைத்துக் கொண்டு உள்ளே உணவைத் தள்ளி விடுகிறோம்.

மின்சார விசைகளினால் இயங்கக் கூடிய சாமான்கள் விற்கும் கடைக்கு ஒருநாள் சென்றேன். விதவிதமாய்ச் சமையலுக்கு வேண்டிய சாமான்கள் இருந்தன. ஒவ்வொன்றும் என்ன சாமான், எப்படி உபயோகிப்பது என்பதை ஒருவர் விளக்கினார். காய்கறி துண்டு போடுதல், அரைத்தல், ரசம் பிழிதல், காப்பி டீ போடல் வரை சகலமும் இருந்தன. ஒரு பக்கம் மேஜை போல் ஒரு சாமான் இருந்தது. அதை விளக்கும்படி கேட்டேன். "இது வீடுகளுக்கு உபயோகமில்லை. பெரிய ஹோட்டல்களுக்குத் தான் உபயோகம். இதில் சாமான்களைப் போட்டால், தண்ணீர் தானாகச் சூடாகிப் பாத்திரங்களைச் சுகாதார முறைப்படி கழுவும்" என்றார்.

"இம்மாதிரி இங்கு எல்லா ஹோட்டல்களிலும் இருக்கிறதா!" என்று கேட்டேன்.

"இந்திய ஹோட்டல்களில் யாரும் வாங்குவார் இல்லை. ஆங்கில ஹோட்டல்களுக்காக வாங்குவார்களென்று வரவழைத்து வைத்திருக்கிறோம்" என்றார்.

"ஏன் இந்திய ஹோட்டல்களிலும் இம்மாதிரி வாங்கி வைத்துச் சுகாதார முறைப்படி பாத்திரங்களைச் சுத்தம் செய்யக் கூடாது!" என்று எனக்கு மனத்தில் பட்டது.

சில நாட்களுக்கு முன் ஒரு சுகாதார அதிகாரி, ஒரு பெரிய ஹோட்டலில் சென்று சுத்தம் செய்து வைத்திருந்த பாத்திரத்தின் மேல் உள்ள ஜலத்துளிகளைப் பூதக் கண்ணாடி கொண்டு பார்த்ததில், சாக்கடைத் தண்ணீரில் இருக்கும் கிருமிகளை விட அதிக நோய்க் கிருமிகள் இருப்பதைப் பார்த்ததாகப் பத்திரிகைகளில் செய்தி வந்தது. நினைக்கவும் மனம் பதறுகிறது. இம் மாதிரி பாத்திரங்களில் தானே எல்லோரும் சாப்பிட வேண்டியிருக்கிறது. அந்தக் கிருமிகளில் க்ஷயக்கிருமிகள் இருக்கலாம். காலராக் கிருமிகள் இருக்கலாம். டைபாய்ட் கிருமிகள் இருக்கலாம். மலேரியாக்

கிருமிகள் இருக்கலாம். மற்றும் மக்களுக்கு வியாதிகளைப் பரப்பும் கிருமிகள் சகலமும் வாசம் செய்யலாம். இவைகளெல்லாம் வயிற்றுக்குள் போனால் என்ன ஆகும்! என்ன வியாதிகள் தான் வராது!!

இவைகளை உணவுடன் உட்கொள்ளுகின்றனர். உட்கொள்பவர்களின் உடலில் இக்கிருமிகள் உள்ளே சென்றதும், உடலில் ஒரு மாபெரும் யுத்தம் நடக்கிறது. இரத்தத்திலுள்ள வெள்ளை அணுக்கள்தான் வரும் வியாதிக் கிருமிகளை எதிர்க்கும் சிப்பாய்கள். இவ் வணுக்கள் நல்ல ஆரோக்கியமாய்ப் பலம் பொருந்தியதாய் இருக்கும் வரை உள்ளே வரும் வியாதிக் கிருமிகளுடன் சண்டையிட்டு வெற்றி பெறுகின்றன. இரத்த அணுக்கள் சிறிது பலம் குன்றி யிருந்தாலும் சரி, வந்தது ஆபத்து. உட்சென்ற கிருமிகள் இரத்த அணுக்களைக் கபளீகரித்துத் தங்கள் வம்சங்களை அபிவிருத்தி செய்து கொண்டு தங்கள் குணத்தைப் பல வியாதிகள் மூலமாகக் காண்பிக்கின்றன. பின் வியாதிகளைக் குணமாக்க வேண்டி நோய்க் கிருமிகளைக் கொல்லக் கூடிய கொடிய பாஷாணங்களை மருந்துகளின் மூலமாக உட்செலுத்த வேண்டி யிருக்கிறது.

எனவே இன்றுள்ள பெரும்பாலான வியாதிகள் அநேகமாய் இம்மாதிரியான ஹோட்டல்களின் மூலமாய்ப் பரவுகின்றன என்றால் மிகையாகாது. இம்மாதிரியான ஹோட்டல்கள் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகின்றனவோ அவ்வளவுக்கும் ஆஸ்பத்திரிக் கட்டடங்களும் அதிகமாக வேண்டியதுதான் என்பது சொல்லாமலேயே விளங்கும்.

பெரிய ஹோட்டல்களே இக்கதி என்றால், சாதாரண எளிய மக்கள் செல்லும் ஹோட்டல்களில் எவ்வளவு லட்சணமாய் இருக்கும்! அதில் சாப்பிடுகிறவர்களின் உடல் நலம் எவ்வளவு பாதிக்கும்! இம்மாதிரியான ஹோட்டல்களில் தண்ணீர் சௌகரியம் எப்படி யிருக்கிறது; சாப்பிட்ட பாத்திரம் சுத்தம் செய்வது எப்படி நடக்கிறது என்று யார் அறிவர்! ஒரு ஹோட்டலில் தொட்டியில் என்னமோ நல்ல தண்ணீர் இருந்தது. ஆனால் சாப்பிட்ட பாத்திரம் அந்தத் தண்ணீரில் கழுவப்படாமல், ஏற்கெனவே சாப்பிட்ட பாத்திரத்தைமுக்கிஎடுத்த தண்ணீரிலேயே மறுபடியும் மறுபடியும் முக்கி எடுத்து வைத்து விடுகிறான் வேலைக்காரன். பரிமாறுகிறவர்களும் அதை அப்படியே எடுத்துத் துடைத்துப் பரிமாறி விடுகின்றனர். தண்ணீர் சௌகரிய மிருக்கும் ஹோட்டல்களிலேயே இம்மாதிரி என்றால் மற்றும் 'மோபைல் கான்டீன்'கள் கதி என்ன! ஆகாச கங்கையா அவர்களுக்கு வருகிறது! நின்ற இடத்தில் நூற்றுக் கணக்கானவர்களுக்கு மேஜை நாற்காலி போட்டு உணவைப் பரிமாறி விடுகிறார்கள். இதை யெல்லாம் யார் நினைக்கிறார்கள்! பின் மக்களின் ஆரோக்யத்தை எம்மாதிரி காப்பாற்ற முடியும்!

ஹோட்டலில் சென்று சாப்பிடுகிறவர்களின் உடல் நிலை எத்தன்மையது என்று சொல்ல முடியாது. க்ஷயத்தால் பீடிக்கப்பட்டவனும் வரலாம். டைபாய்ட் ஜுரம் வந்தவனும் வரலாம். மலேரியாவில் அடிபட்டவனும் வரலாம். அம்மை வந்தவர்களும் வரலாம். மற்ற சரும வியாதிக்காரர்களும் வரலாம். ஜல







"குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே" என்னும் பழமொழியின் உண்மை அன்று நிதர்சனமாகத் தெரிய வந்தது. சோர்வும் சோம்பலும் பயமும் இன்னதென்றே அறியாத இளங்கன்றுகளான குழந்தைகளுக்காகவே ஜூன் மாதம் 4-ந் தேதியன்று இந்தியக் குழந்தைகள் விழாக்கொண்டாட்டக் கமிட்டியார் ஒரு குதூகலமான குழந்தைகள் விழாவைப் பெரம்பூர் நியூ ஹாலில் கொண்டாடினார்கள். பெரம்பூர் லோகோ வொர்க்ஸ் ஊழியர்களின் குழந்தைகள் விழாவில் பங்கெடுத்துக் கொண்டன. 2,700 குழந்தைகள்! விழா எப்படியிருக்கும் என்று விவரிக்க வேண்டியதில்லை. விளையாட்டுப் பந்தயப் போட்டி, சங்கீதப் போட்டி முதலியன ஏற்பாடு செய்யப்பட்டு, வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பொம்மைப் பரிசுகள் வழங்கப்பட்டன. தக்ஷிண ரயில்வே பிரதம மெக்கானிக்கல் எஞ்ஜினியர் ஸ்ரீ பி. வேங்கடராமன் அவர்கள் விழாவுக்குத் தலைமை வகித்தார். ஸ்ரீமதி வேங்கடராமன் குழந்தைகளுக்குப் பரிசுப் பொருள்களை வழங்கினார். பரிசளிப்புக்கு ஏற்ற அழகு அழகான பொம்மைகள் பல ஊர்களிலிருந்தும் ஏராளமாக வந்து குவிந்திருந்தன. பரிசுப் பொருள்களைப் பிரித்து ஒழுங்காக வைத்திருந்த அழகுக்கு நிர்வாகிகளை எத்தனை தடவை வேண்டுமானாலும் பாராட்டலாம். விழாக் கமிட்டித் தலைவரும், லோகோ வொர்க்ஸ் மானேஜருமான ஸ்ரீ எஸ். வி. ராமஸ்வாமி அவர்களின் அரிய முயற்சியினால் இவ்விழா மிகவும் சிறப்பாக நடந்து வருகிறது என்பது பாராட்டுக்கு உரியது.

---

தோஷம் பிடித்தவர்களும் வரலாம். இவர்களைச் சோதனை செய்து சாப்பிட அனுமதிப்பது என்பது சாத்தியமல்ல. பசி எல்லோருக்கும் ஒன்றே அல்லவா! எல்லோரும்தான் வருவார்கள். ஆனால் அவ்வாறு வருபவர்களின் எச்சில் செய்யப்பட்ட பாத்திரங்கள் அதிக ஜாக்கிரதையுடன் சுத்தம் செய்யப்பட வேண்டும். அம்மாதிரி செய்ய அரசாங்கம் சகல ஏற்பாடுகளும் செய்ய வேண்டும். செய்யாத, செய்ய முடியாதவர்களுக்கு இத் தொழில் நடத்த அனுமதிக்கவே கூடாது.

சுத்தம் செய்வது இவ்வளவு அழகு என்றால் ஹோட்டல்களுக்குக் காய்கறிகள் வாங்குவது அதைவிட அழகாய் இருக்கிறது. 'பாழாய்ப் போனது பசு வாயில்' என்ற பழமொழி உண்டு. அதைப்போல வாடிப்போன, கெட்டுப்போன காய்கறிகள் உணவு விடுதிகளுக்கு என்று கடைக்காரர்களே எடுத்து வைத்து விடுகின்றனர். "இவைகளைப் பத்திரமாய் எடுத்து வையடா. அந்த ஹோட்டல் ஐயா வந்து வாங்கிக் கொள்ளுவார்" என்று கடைக்காரன் சொல்லுகிறான். காய்கறிகளே இந்த லட்சணமென்றால், பின் அதைச் சுத்தம்செய்யும் முறையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். பின் சமைக்கும்போது அதன் சத்து காப்பாற்றப்படுமென்று கனவிலும் நினைப்பதற்கில்லை. எதை வேக வைத்தாலும் அதன் தண்ணீரைக் கீழே கொட்டி விடுவது சர்வ சாதாரணம். பின்பு மக்களின் ஆரோக்கியம் எவ்வாறு காப்பாற்றப்படும்!

இன்ன உத்தியோகத்துக்கு இவ்வளவு படிப்பு இருக்க வேண்டும் என்ற நியதிகள் உண்டு. சில பதவிகளுக்குச் சில பரீட்சைகளில் கட்டாயம் தேறியிருக்க வேண்டும் என்ற நிபந்தனைகள் உண்டு. சமையல் உத்தியோகம் செய்பவர்களுக்கும் அம்மாதிரி ஏன் வைக்கக் கூடாது! ஜனரஞ்சகமான கலையெல்லாம் கூட சாஸ்திரியமாய்க் கட்டுப்படுத்தி அதற்கான கலாசாலைகள் ஏற்பட்டுப் பட்டங்களை வழங்கி வருகிறார்கள். அதைப் போல உணவுக் கலைக்கான கலாசாலை ஏற்படுத்தி, இன்னின்ன பதார்த்தங்களில் இன்னின்ன சத்துக்கள் உள்ளன, அவை நசிந்து விடாமல் பாதுகாக்கும் முறையில் சமைப்பது எப்படி! எவ்வகையில் ஆகாரங்களைத் தயார் செய்யலாம் என்பதையெல்லாம் பாட திட்டமாக வைத்து, அவைகளில் தேறியவர்களை மட்டும் ஹோட்டல்களில் வேலைக்கு வைத்துக் கொள்ளப்படும் என்றால் தாமாகவே பலர் படிக்க வருவார்கள். இம்மாதிரி பட்டங்கள் பெற்றவர்களுக்கு நிறையக் கிராக்கியும் இருக்கும். ஹோட்டல்களில் மட்டும் என்ன! தனிப் பட்டோர் வீடுகளிலும் இம்மாதிரி சமையல்காரர்களுக்கு நல்ல கிராக்கி இருக்கும். ஒரு வகையில் வேலையில்லாத் திண்டாட்டமும் குறையலாம். மக்களின் ஆரோக்கியமும் பாதுகாக்கப்படும்.

(தொடரும்)

# டூமெக்ஸ்

# பால் உணவு

## ஏன் நிர்பயமானது?

ஏனெனில் டூமெக்ஸ் பால் உணவு டூபர்கொலின் டெஸ்டெட் பசுக்களின் பாலினின்று தயார் செய்யப்படுகிறது. இத்தகைய டூபர்கொலின் டெஸ்டெட் பால் குழந்தைகளுக்கு பரிசுத்தமானது, நிர்பயமானது என்பதை உங்கள் டாக்டர் கூறுவார். டூமெக்ஸ் பால் உணவு தண்ணீரில் சுலபமாக கரையக்கூடியது. எளிதில் ஜீரணிக்கக்கூடியது. டூமெக்ஸ் பால் உணவில் பால் பண்ணைக்கே உரித்தான மணம் கமழ்வதால் குழந்தைகள் இதை மிகவும் விரும்புகின்றனர்.

**டூமெக்ஸ்**
**பால் உணவு**

உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக்கவனியுங்கள்

கல்கியின்

# அமர தாரா

ஆனந்தி




அத்தியாயம் 25

## பகத்சிங்கின் கடிதம்

இரண்டு நாட்கள் கழித்து அய்யாக் குட்டி வந்தார். அவருடைய கையில் பெரிய கூடை ஒன்று இருந்தது. கூடையில் காய்கறிகளும், மாம்பழங்களும் இருந்தன. "என்ன இருந்தாலும் அய்யாக்குட்டி ரொம்பக் கெட்டிக்காரர். முனிசாமி கவுண்டரை வசப்படுத்த எத்தனை சாமான்களுடன் வந்திருக்கிறார்!" என்று வியந்தேன். நான் நினைத்தமாதிரியே முனிசாமி கவுண்டரும் அவரது மனைவியும் அய்யாக் குட்டியை மிக நன்றாக உபசரித்தார்கள்.

"உபசாரம் பலமாக இருக்கிறதே!" என்று அவரைப் பரிகசித்தேன்.

"ஆமாம்! நான் எங்கே போனாலும் என்னை மிகக் கவனமாக உபசரிப்பார்கள். நீ ஒருத்திதான் அதற்கு விதிவிலக்காக நடந்து கொண்டாய். குங்குமத் துறையில் என்னை நீ சரியாகக் கவனிக்கவில்லை என்ற குறை எனக்கு இன்னும் மறக்கவில்லை" என்று குறைப்பட்டார்.

"என்னவோ பேசுகிறீரே! நான் சென்னைக்குப் போன பிறகு நீங்கள் என்ன செய்தீர்கள்? தகவலே தெரியவில்லையே?" என்றேன்.

"அதை ஏன் கேட்கிறாய்? நீ போன பிறகு எனக்கு அங்கிருக்கவே பிடிக்கவில்லை. ஒரு நாள் திடீரென்று என்னுடைய சினிமாக் கொட்டகை தீப் பிடித்து எரிந்து போய் விட்டது. ஏனென்றே தெரியவில்லை. அதன் பிறகு நான் பிழைப்புக்கு வழி தேடினேன். எங்கெங்கோ சுற்றியலைந்து விட்டு இந்த ஸ்டுடியோவுக்கு வந்து சேர்ந்தேன். ரிஷி வேஷமும், காவல்காரன் வேஷமும் மாறி மாறிப் போட்டுக் கொள்கிறேன்" என்று சொல்லி விட்டுப் பலமாகச் சிரித்தார்.

நானும் சிரித்தேன். "உங்களைக் கதாநாயகனாக எடுத்துக் கொள்ளவில்லை என்று உங்களுக்குக் குறையாக்கும்!" என்றேன்.

"அது கிடக்கட்டும். நான் கேட்டால் கோபித்துக் கொள்ள மாட்டாயே?" என்று கூறிச் சிறிது தயங்கினார் அய்யாக்குட்டி.

"என்னுடைய கோபத்துக்கு நீங்கள் நிஜமாகவே பயப்படுகிறீர்களா, என்ன?" என்று கேட்டேன்.

"நான் உன்னைப் பற்றிக் கேட்டால் 'என்னைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை' என்பாயோ என்றுதான் எனக்குத் தயக்கமாக இருக்கிறது" என்றார்.

அவருடைய அந்த மாறுதல் எனக்கு மிகவும் சந்தோஷத்தை அளித்தது. ஏன் என்னை அவர் ஒன்றும் கேட்கவில்லை என்று வியந்து கொண்டிருந்தேன். என்னிடம் அவருக்கு அலட்சியம் போய் மதிப்பு உண்டாகியிருக்கிறதென்று தெரிந்ததும் எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனால் அந்த மாறுதலுக்குக் காரணம் புரியவில்லை.

பிறகு வக்கீல் பத்மநாபன் வீட்டை விட்டு நான் வந்த காரணத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். "ஈசுவரமூர்த்தியைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாதென்று வந்து விட்டேன். எதற்கு இன்னொருவருடைய வீட்டில் இருக்க வேண்டும்? அதனால் தானே அவர்களுடைய நிர்ப்பந்தங்களுக்கெல்லாம் ஆளாக வேண்டியிருக்கிறது?" என்றேன்.

சற்று நேரத்துக்குப் பின், "இந்துமதி! உன்னைப் போன்ற அழகிய பெண்களுக்கு எப்போதும் கஷ்டம் தான். யாராவது இப்படிச் சொல்லிக் கொண்டுதான் இருப்பார்கள். இத்தனை துன்பங்களுக்கும் இடையில் நீ திடமாக இருப்பதைப் பார்த்து எனக்கு அதிசயமாக இருக்கிறது. நான் உரிமையாகக் கேட்பதாக நினைத்துக் கொள்ளாதே. ரங்கதுரையின் சமாசாரம் உனக்கு ஏதேனும் தெரிந்ததா?" என்று கேட்டார்.

எனக்கு அவர் கேட்ட விதம் பிடித்திருந்தது. ஆகவே பதில் சொன்னேன். பேராசிரியர் தாம்ஸன் தம்பதிகளைப் பார்த்ததையும் அவர் சொன்னதையும் கூடச் சொன்னேன். "இப்போது தான் ரொம்பக் கவலையாக இருக்கிறது. இந்த யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து எனக்கு இரவில் தூக்கமே போய் விட்டது. அவருக்கு ஒன்றும் ஆபத்து ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்று ரொம்பக் கவலையாக இருக்கிறது. இருந்தாலும் பகவான் என்னை இவ்வளவு சோதிக்க வேண்டாம்" என்றேன்.

"உன் கவலைகளெல்லாம் சீக்கிரம் தீர்ந்து விடலாம். சிறு வயதில் ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டால் பிறகு வாழ்க்கை முழுதும் சந்தோஷமாக இருப்பார்களாம். நீ அதிகக் கஷ்டப்பட்டு விட்டாய். அதனால் இனிமேல் சந்தோஷம்தான் என்று நினைக்க இடமிருக்கிறது" என்று கனிவுடன் கூறினார் அய்யாக் குட்டி.

அவருடைய குரலிலிருந்து அவர் இதய பூர்வமாக அப்படிக் கூறுகிறாரென்று எனக்குத் தோன்றியது.

"நீங்கள் ரொம்ப மாறிப் போய் விட்டீர்களே? என்ன காரணம்?" என்று வியப்புடன் கேட்டேன்.

"எந்த விதத்தில் மாறியிருக்கிறேன்?" என்று கேட்டார்.

"உங்களுடைய விளையாட்டு சுபாவம் அநேகமாகப் போய் விட்டது.



அதைத் தவிர என்னிடம் ஒருவித மரியாதையுடன் பேசுகிறீர்கள். உங்கள் முகத்தின் சாயலே மாறிப் போயிருக்கிறது. இதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது" என்று கூறினேன்.

அய்யாக் குட்டி சற்று நேரம் மௌனமாக இருந்தார்.

பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"சொல்லுகிறேன், இந்து! உனக்குத் தெரிய வேண்டிய



விஷயம்தான். உன்மீது அக்கறை உள்ளவர் யாரோ உனக்குத் தெரியாமலேயே இருக்கிறார் என்பதை நீ தெரிந்து கொள்ளத்தானே வேண்டும்?..." என்று நிறுத்தினார்.

"என்னது? என்ன சொல்கிறீர்கள்?" என்று வியப்போடு கேட்டேன்.

"பொறு! சொல்லுகிறேன். சினிமாக் கொட்டகை எரிந்து போய் விட்டது என்று சொன்னேன் அல்லவா? எவ்வளவு முயன்றும் அது எரிந்த காரணத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை. போலீஸில் கூட எழுதி வைத்தேன். போலீஸில் எழுதி வைத்து என்ன புண்ணியம்? எனக்கு ஒரேயடியாக எல்லாம் நஷ்டமாகி விட்டது. மூன்று சினிமா பிலிம் சுருள்கள் எரிந்து விட்டன. அந்த பிலிம்காரர்களுக்கு நான் ஏகப்பட்ட பணம் கொடுக்க வேண்டும். பணம்கொடுக்காவிட்டால் ஸிவில் ஜெயிலில் பிடித்துப் போட்டு விடுவார்கள். இதனால் நான் அடைந்த வருத்தம் சொல்லிமுடியாது. என்னுடைய கஷ்டம் தீருவதற்கென்றே ஒரு அற்புதமான சம்பவம் நடந்தது.

"உன்னை நினைத்துக் கொண்டே ஒரு நாள் மலைப் பாதையில் நடந்துகொண்டிருந்தேன். 'இந்துமதியைச் சினிமாத் துறையில் சேர்த்து விட்டால் பெயரும் புகழும், செல்வமும் நம்மைத் தேடிக் கொண்டு வருமென்று எண்ணிக்கொண்டிருந்தோமே? இப்போது இப்படியாகி விட்டதே! இந்துமதியைப் போன்ற திடமான குணம் யாருக்கும் வராது. இத்தனை கஷ்டத்தையும் தைரியமாகப் பொறுத்துக் கொண்டாளே? ஒரு இளம் பெண்ணுக்கு இவ்வளவு சக்தி இருக்கும் போது, எனக்கு ஏன் கஷ்டத்தைத் தாங்கும் சக்தியில்லை? என்ன இருந்தாலும் இந்துமதி ஒரு அபூர்வமான பெண்!' என்று எண்ணிக் கொண்டே நடந்து கொண்டிருந்தேன்.

"மலையின் மேலே பன்னீர் அருவி இருக்கிறதல்லவா? அதில் போய்க் குளித்து விட்டு வந்தால் மனத்துக்குச் சற்று அமைதி உண்டாகும் என்று நினைத்துக் கொண்டே மலை மீது ஏறிப் போய்க்கொண்டிருந்தேன். மாலை ஐந்து மணி இருக்கும். சூரியன் மறைந்து விட்டது. நம் ஊரில்தான் சீக்கிரம் இருட்டி விடுமே. திடீரென்று பாதை யோரத்துப் புதரில் சல சல வென்று சத்தம் கேட்டது.

"நான் திரும்பிப் பார்த்தேன். அருகில் செல்லப் பயமாக இருந்தது. நரியாக இருக்கலாமல்லவா? சற்று நேரம் புதரையே பார்த்துக் கொண்டு நின்றேன். புதருக்கு அருகில் ஏதோ வெள்ளையாகத் தெரிந்தது. மறுபடியும் சலசலப்புச் சத்தம் கேட்காமல் போகவே காற்றாகத்தான் இருக்குமென்று எண்ணிக் கொண்டே கீழே கிடந்த வஸ்து என்ன வென்று பார்க்கப் போனேன். அருகில் சென்றதும் அது ஒரு காகிதப் பொட்டலம் என்று தெரிந்தது. அதன்மேல் அய்யாக்குட்டி என்று இருந்ததைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளைச் சொல்வது கடினம். அதை எடுத்தேன். கனமாக இருந்தது. சொல்ல முடியாத ஆவலுடன் அந்தப் பொட்டலத்தைப் பிரித்தேன். அதில் ஒரு கடிதம் இருந்தது.

"இந்துமதிக்குத் தீங்கு நினைப்பவன் எனக்கு விரோதி. இன்னொரு தடவை ஏதாவது செய்தாயானால் கொட்டகை எரிந்தமாதிரி மறுபடியும் கஷ்டம் வரும். ஜாக்கிரதை. கொட்டகை எரிந்ததற்கு நஷ்ட ஈடாக இதிலுள்ள பணத்தைப் பெற்றுக் கொள்ளவும். இதைப் பற்றி யாரிடமாவது கூறியதாகத் தெரிந்தால் உன் உயிர் உன்னுடையதில்லை. நீ அவளுக்குச் செய்த தீங்குக்குப் பரிகாரம் செய்ய வேண்டும். அதனால்தான் இதைக் கொடுக்கிறேன். இப்படிக்கு,

பகத்சிங்"

என்று எழுதியிருந்தது. அதைப் படித்த உடனேயே எனக்குப் பாதி உயிர் போய் விட்டது. அதை எடுத்துக் கொண்டு ஓட்டமாக ஓடிவந்து பத்திரப்படுத்தினேன். அந்தக் கடிதத்தைத் திரும்பத் திரும்ப வாசித்தேன். எழுதியிருப்பது யார் என்று ஊகித்துப் பார்த்தேன். எவ்வளவு முயன்றும் ஒரே ஒருவர் பெயர்தான் நினைவில் சுற்றிச் சுற்றி வந்தது."

"அது யாருடைய பெயர்?"

"நீதான் சொல்லேன் பார்ப்போம்!"

"என் தந்தை காசிலிங்கம் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா?"

"அதில் சந்தேகம் வேறு இந்து? உன் தந்தையைத் தவிர வேறு யார்



# வாழ்க்கை வாழ்வதற்கே..

வயிற்றுக் கடுப்பு, வலிப்பு, அஜீரண பேதி அல்லது இதர வயிற்றுக் கோளாறினால் உங்கள் அன்றாட அலுவல்களைக் குலைய விடாதீர்கள். ஓமம்-கற்பூர் உட்கொண்டு உங்களை முடக்கிவிடும் அந்த வலியை சமனப் படுத்துங்கள். அதன் அலாதியான குண விசேஷ மருந்துகள் காரணமாக நீங்கள் உடனே நிவாரணம் பெற்று மீண்டும் உங்கள் அலுவல்களை சுறுசுறுப்பாகக் கவனிக்கலாம். ஓமம்-கற்பூர் ஸ்திரீகளின் கர்ப்பாசயக் கோளாறு சமயங்களிலும் நிவர்த்தி அளிக்கிறது. இந்த அற்புத நிவாரணியை எந்த வயதினரும் நிர்ப்பயமாக உட்கொள்ளலாம்.

ஹென்றியின்

## ஓமம்-கற்பூர்

தயாரிப்பவர்:

விட்டில்ஸ் ஓரியண்டல் பார்ம் & பார்மஸூடிகல்ஸ் லிமிடெட், மதராஸ்-1

உன்மீது இவ்வளவு அக்கறை கொண்டிருக்க முடியும்? காசிலிங்கம்தான் அதை எழுதியிருக்கிறார் என்பதில் எனக்கு அணுவளவும்சந்தேகமில்லை."

"ஆனால் 'பகத்சிங்' என்பவர் பிடிபட்டுத் தூக்குத் தண்டனை அடைந்ததாகக் கேள்விப் பட்டேனே" என்று கூறிவிட்டுச் சென்னையில் நான் கேள்விப்பட்ட விஷயத்தை விவரமாகக் கூறினேன். ஈசுவரமூர்த்தி பத்மநாபனிடம் கூறிய விஷயத்தைச் சுலோசனா என்னிடம் சொன்னாள். அதை நான் கூறியதும் அய்யாக்குட்டி, "இந்துமதி! இவர்களைப் பற்றி எனக்குத் தெரியாது. எல்லோரும் ஒரே கூட்டத்தினராக இருக்கலாம். செத்துப் போனவன் வேண்டுமென்றே தான் 'பகத்சிங்' என்று பொய் சொல்லியிருக்கலாம். அல்லது அவன் செத்துப் போன பிறகு அவனுடைய சகா அவன் பெயரை வைத்துக் கொண்டிருக்கலாம். இதெல்லாம் நமக்கு அவசியமில்லாத விஷயம். ஆனால் இந்தக் கடிதத்தை எழுதியது உன் தந்தைதான் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை!" என்றார்.

"அப்படித்தான் இருக்க வேண்டும். எனக்கும் இப்போது ஒரு வித மன நிம்மதி ஏற்பட்டிருக்கிறது. என் தந்தை தூக்கு மேடையில் இறந்து போனார் என்று நினைக்கும்போதெல்லாம் சித்திரவதையாக இருந்தது. ஒரு தடவை அவரை நேரில் பார்த்து 'நீங்கள் இப்படிச் செய்யலாமா?' என்று எனக்குக் கேட்க வேண்டும் போல் இருக்கிறது."

"இந்துமதி! அந்த எண்ணத்தை மாத்திரம் இப்போது விட்டு விடு. உன் தந்தையைப் பார்ப்பது என்பது நடக்கக் கூடிய காரியமல்ல. அதனால் உங்கள் இருவருக்கும் துன்பம் வரலாம். அவர் கூறியிருப்பது போல் உனக்கு நான் இழைத்த அநீதிக்குப் பரிகாரம் செய்ய வேண்டும். இன்று முதல் நான் உனக்குத் துணையாக இருப்பேன். பதிலுக்கு எதையும் எதிர்பார்க்க மாட்டேன். நீ என்னைப் பரிபூரணமாக நம்பலாம்" என்று உணர்ச்சியுடன் கூறினார். அவர் குரல் தழுதழுத்தது.

ஒரு கடிதத்துக்கு ஒரு மனிதனின் உள்ளத்தை அடியோடு மாற்றி விடும் சக்தி இருக்கிறதே என்று அதிசயப்பட்டேன்.

"ஆனால் நீங்கள் ஏன் சென்னைக்கு வந்து இந்த விவரங்களைச் சொல்லவில்லை? உங்களை எப்படி நம்புவது?" என்று அவரிடம் கேட்டேன்.

"ஏன் இந்து! சென்னைக்கு நான் வந்து இந்த விவரங்களைப் பத்மநாபனுக்குத் தெரியாமல் சொல்லியிருக்க முடியுமா? நான் வந்திருந்தால்தான் என்னை அவர்கள் மதித்திருப்பார்களா? மேலும் நீ அங்கே சுகமாக இருக்கிறாய் என்று நினைத்தேன். நான் வந்திருந்தால் நீ கூட என்னை நம்பியிருக்க மாட்டாய்" என்றார்.

அதுவும் உண்மைதானே என்று நினைத்துப் பேசாமலிருந்தேன்.

"இதைப் பற்றி நீ மூச்சுக் கூட விடக் கூடாது. இதைப் பற்றி வெளியில் தெரிந்தால் காசிலிங்கத்துக்கு ஆபத்துத்தான் ஏற்படும்" என்றார்.

என் அன்னையையும் தந்தையையும் பற்றிய எண்ணங்களில் நான் என்னை மறந்து உட்கார்ந்திருந்தேன்.

## அத்தியாயம் 26

# அய்யாக்குட்டியின் யோசனை

எனக்கு இந்த விவரங்களை அய்யாக்குட்டி கூறியபோது ஏற்பட்டதைவிட அவர் எனக்கு உதவி புரிவதற்காகச் சொன்ன யோசனையைப் பற்றிக் கேட்டபோது பல மடங்கு வியப்பு உண்டாயிற்று.

"உனக்கு நான் ஏதாவது நன்மை செய்ய வேண்டும், இந்து! இல்லாவிட்டால் எனக்குச் சமாதானமாக இருக்காது. உன் தந்தைக்கு நான் நேரில் வாக்குக் கொடுக்கா விட்டாலும், மனத்தால் வாக்களித்து விட்டேன். என்னால் உனக்கு நேரிடையாகப் பொருளுதவி செய்ய முடியாது. நீயே புகழும், செல்வமும் அடைவதற்கு வழிதான் என்னால் சொல்ல முடியும்" என்றார்.

"இவ்வளவு தூரம் உங்களுக்கு வாக்குறுதி கொடுப்பது முதலியவற்றில் எப்படி நம்பிக்கை உண்டாயிற்று?"



“ இந்துமதி! நீ என்னை இன்னும் பழைய அய்யாக்குட்டி என்றே நினைக்கிறாய். நான் அடியோடு மாறி விட்டேன் என்பதை நீ புரிந்து கொள்ளவில்லை. ஆனால் அது உன் குற்றமில்லை. நீ இப்போது தானே என்னைப் பார்க்கிறாய்? கூடிய சீக்கிரம் தெரிந்து கொள்வாய் ” என்று கூறினார்.

“ உண்மைதான். நம்புவது கொஞ்சம் கஷ்டம் தான் ” என்றேன்.

அய்யாக்குட்டியின் முகம் தொங்கிப் போயிற்று. சிறிது நேரம் தரையையே பார்த்துக் கொண்டிருந்தார். எனக்கே ஏன் அப்படிச்சொன்னேனென்று தோன்றியது.

அய்யாக்குட்டி தரையைப் பார்த்துக் கொண்டே பேசினார். “ இந்து! நான் சொல்ல வந்ததைச் சொல்லி விடுகிறேன். நான் நல்ல எண்ணத்தோடுதான் சொல்கிறேன் என்பதைக் கடவுள் அறிவார். நீ இப்படிச் சிரமப்படுவதைப் பார்க்க எனக்கு வருத்தமாக இருக்கிறது. உனக்கோ நல்ல களையான முகத்தைக் கடவுள் அளித்திருக்கிறார். உன் குரலும் இனிமையாக இருக்கிறது. நீ மாத்திரம் சினிமாவில் சேர்ந்து நடித்தாயானால் பிரமாதமான பெயரெடுப்பாய்.”

நான் சிரித்தேன். “முனிவர் ஞான திருஷ்டியினால் கூறும் விஷயங்களில் இதுவும் ஒன்றோ?” என்று அவரிடம் கேலியாகக் கேட்டேன்.

“ இந்து! இது விளையாட்டில்லை. நீ பேசும் போது உன் முகத்தில் தோன்றும் பாவங்களை உன்னால் பார்க்க முடியாது. என்னால் முடியும். நான் காசிலிங்கத்தின் விஷயத்தைச் சொல்லிக் கொண்டு வந்தபோது உன்னுடைய முகத்தில் உணர்ச்சியினால் தோன்றிய மாறுதல்களைக் கவனித்துக் கொண்டேவந்தேன். அதை யாரேனும் ஒரு டைரக்டர் பார்த்திருந்தால் நீ நடிப்பதற்காகவே பிறந்தவள் என்று சத்தியம் செய்திருப்பார். உன்னைப் பற்றி உனக்கே தெரிய முடியுமா?”

“ நீங்கள் அனாவசியமாக ஏதோ யோசனை சொல்லுகிறீர்கள். என் மீது உங்களுக்கு நிஜமான அக்கறை இருந்தால் சுற்று வட்டாரத்தில் தேடிப் பார்த்து எனக்கு ஒரு பள்ளிக்கூடத்தில் வேலை தேடித் தாருங்கள். நான் இவர்களோடு இங்கே நிம்மதியாக இருக்கிறேன்.”

“ இந்துமதி! நீ குழந்தை மாதிரி பேசுகிறாய். பள்ளிக்கூட வாத்தியார் வேலைக்காக வென்று படித்து விட்டு வருகிறவர்களுக்குத்தான் நிரந்தரமாக வேலை கொடுப்பார்கள். பெண்களுக்கு வேலை கிடைப்பது அவ்வளவு சுலபமல்ல. நான் வேண்டுமானால் முயற்சி செய்து பார்க்கிறேன். ஒரு சினிமாவில் நடிப்பதற்கு எவ்வளவு ரூபாய் குறைந்த பட்சம் தருவார்கள் என்று உனக்குத் தெரியுமா?”

“தெரியாதே!” என்றேன்.

“கதாநாயகி பாத்திரத்தில் நடித்தால் குறைந்தபட்சம் பத்தாயிரம் ரூபாய் தருவார்கள். படம் எடுக்க ஒரு வருஷ காலம் ஆகிறதென்று வைத்துக் கொள்வோம். மாதம் எவ்வளவு ரூபாய்?” என்று கேட்டுக் கொண்டே தன் சட்டைப் பையிலிருந்து ஒரு சின்ன நோட்டும் பென்சிலும் எடுத்து அவசரமாக ஏதோ எழுதினார். பிறகு என்னைப் பார்த்து, “எண்ணூற்றி முப்பத்து மூன்று ரூபாய், ஐந்தணா, நாலு தம்பிடி ஆகிறது. நீ வேறு எது செய்தாலும் இவ்வளவு பணம் சம்பாதிக்க முடியுமா?” என்றார்.

“எனக்குப் பணத்தைப் பற்றிக் கவலையில்லை. சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாமல் நான் எப்படியோ உயிர் வாழ வேண்டும். அதுவும் ரங்கதுரை வரும் வரையில்தான் ” என்றேன்.

அய்யாக் குட்டி மறுபடியும் மௌனத்தில் ஆழ்ந்தார்.

“ என்ன யோசிக்கிறீர்கள் ?”

“ நான் சொன்னால் நீ கோபித்துக் கொள்ளக் கூடாது.”

“ இல்லை. சொல்லுங்கள்.”

"ரங்கதுரை திரும்பி வருவாரென்று நீ மனப்பூர்வமாக நம்புகிருயா?"

"ஏன்? வரமாட்டா ரென்பதற்கு ஏதேனும் ஆதாரம் இருக்கிறதா?"

"இந்துமதி! காலமோ யுத்த காலம். அது உனக்குத் தெரியாத விஷயம் அல்ல. ரங்கதுரை ரொம்ப நல்லவர் தான். ஆனால் இந்த யுத்த ரகளையில் அவர் எப்போது இந்தியாவுக்கு வர முடியப் போகிறதோ, யார் கண்டார்கள்? எதற்கும் நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஏதேனும் செய்வது நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது."

"எனக்கு அதில் ஆசையில்லையே?"

"ஏன் இந்து! நாம் ஆசைப்படும் காரியங்களையேதான் எப்போதும் செய்கிருேமா? இஷ்டமில்லாத காரியங்கள் எவ்வளவோ செய்யவில்லையா? நீ வக்கீல் பத்மநாபன் வீட்டிலிருந்து ஓடி வரவேண்டும் என்று ஆசைப் பட்டாயா என்ன? அந்தமாதிரி சில காரியங்கள் செய்யும்படி நேரிடத் தான் செய்கிறது."

"அவர்கள் வீட்டிலிருந்து வரும்படியான அவசியம் நேரிட்டது. இப்போது என்ன அப்படி அவசியம்?"

"நீ எத்தனை நாளைக்கு இவர்கள் வீட்டில் இருக்க முடியும்? உன்னை நீ காப்பாற்றிக் கொள்ள வேண்டாமா? ரங்கதுரை வரும் வரை, குறைந்தது இரண்டு வருஷங்களுக்காவது நீ ஏதாவது ஏற்பாடு செய்து கொள். போதும். ஒரு படத்தில் முதலில் நடி. பிறகு இஷ்டமிருந்தால் நடிக்கலாம். இல்லாவிட்டால் விட்டு விடலாம். உனக்கு ஏதாவது உண்மையான உதவி செய்த திருப்தி எனக்கும் ஏற்படும்."

"நீங்கள் என் தந்தையின் கடிதத்துக்காகப் பயந்து கொண்டு எனக்கு உதவி செய்வதாகக் கூறுகிறீர்களா?"

"அதுவும் ஒருவிதத்தில் உண்மை தான், இந்துமதி. உனக்கு உதவி செய்தால் 'பகத்சிங்'கின் அன்புக்கு நான் பாத்திர மாகலாம். அவருக்கு நான் பட்டிருக்கும் நன்றிக் கடனை அவரது குமாரியின் மூலம் தீர்த்துக் கொள்ள விரும்புகிறேன். அது தவரு?"

"உங்கள் மனத்தில் வேறு எந்தவித எண்ணமும் இல்லையா?"

"நீ எதைப் பற்றிக் கேட்கிருய் என்று புரிகிறது, இந்து. சத்தியமாக இனிமேல் நீ என்னை மணந்துகொள்ள வேண்டுமென்று நினைக்க மாட்டேன். இத்தனை நாட்களுக்குப் பிறகும், இத்தனை கஷ்டங்களுக்குப் பிறகும் நீ ரங்கதுரையிடம் வைத்திருக்கும் அன்பைப் பார்க்கும்போது வியப்பாக இருக்கிறது. அந்த அன்பு தெய்வீகத் தன்மை வாய்ந்ததென்று எனக்குத் தோன்றுகிறது. அதற்குக் குறுக்கே நான் வர மாட்டேன். சத்தியமாகச் சொல்லுகிறேன். ரங்கதுரை வரும் வரையில் உனக்குப் பாதுகாப்பாளனுக நான் இருக்கிறேன். அதுவும் காசிலிங்கத்தின் கட்டளையின்படி



தான். இதில் நீ சிறிதும் சந்தேகப் படவே வேண்டியதில்லை."

"இரண்டு நாள் அவகாசம் கொடுங்கள். யோசித்துச் சொல்கிறேன்."

"பேஷாக யோசி. இரண்டு நாட்கள் என்ன? பத்து நாட்கள் யோசியேன். என்ன அவசரம்? நான் போய் விட்டு நாளை வருகிறேன்" என்று விடை பெற்றுக் கொண்டார் அய்யாக்குட்டி.

அவர் சென்ற பிறகு தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தேன். அய்யாக்குட்டியைப் பற்றி ஒன்று மாத்திரம் சொல்ல வேண்டும். அவரிடம் எத்தனையோ குறைகள் இருந்த போதிலும் ஒரே ஒரு விசேஷ குணம் இருந்தது. அதுதான் பிடிவாத குணம்;

விடாமுயற்சி செய்யும் குணம் என்று கூடச் சொல்லலாம். அதுவே அவருடைய பிற்கால வெற்றிக்குக் காரணம் என்று நான் கருதுகிறேன்.

ஒரு காரியத்தைச் செய்துவிட வேண்டுமென்று அவர் நினைத்து விட்டால் அதைச் சலிப்பே அடையாமல் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பார். எதிராளியின் ஆட்சேபணைகள் அவர் காதில் ஏருது.

கவுண்டரிடம் அந்த விஷயத்தைத் தெரிவித்தேன். "உங்களுக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டேன்.

பெரியவர் சிறிது நேரம் யோசித்து விட்டு, "குழந்தை! எனக்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாது. நான் கேள்விப்பட்ட வரையில் நடிப்பவர்களுக்கு நல்ல பெயர் இல்லை. அது தான் யோசிக்க வேண்டிய விஷயம். அதற்குத் துணியலாமா, அம்மா?" என்று கேட்டார்.

அய்யாக்குட்டியிடமும் கவுண்டர் அதையே சொன்னர்.

"பணம் வருவது இடக்கட்டும். குழந்தைக்குக் கெட்ட பெயர் வந்து விட்டால் அதை அழிக்க உம்மால் முடியுமா?" என்று கேட்டார்.

அதற்கு அய்யாக்குட்டி சமத்காரமாகப் பதில் சொன்னர். "நீங்கள் சுத்தப் பத்தாம் பசலிப் பேர்வழியாக இருக்கிறீர்களே? இருபதாம் நூற்றுண்டில் கலைத்துறையில் ஈடுபடுபவர்களுக்குக் கெட்ட பெயர் வரும் என்ருல் யாராவது சிரிப்பார்கள். கலைகள் எவ்வளவு முன்னேறியிருக்கின்றன, கலைஞர்கள் எவ்வாறு கௌரவிக்கப் படுகிருர்கள் என்பதெல்லாம் உங்களுக்குத் தெரியாது. இந்தப் பட்டிக்காட்டில் ஏதாவது பிதற்றினுர்கள் என்ருல், உலகமே இங்குதான் இருக்கிறதோ? சென்னையில், பம்பாயில், கல்கத்தாவில் கலைஞர்கள் கௌரவிக்கப் படுவதை நான் கண்ணுல் பார்த்திருக்கிறேன். இதனுல் இந்துவுக்குப் பெயர் கெட்டுப் போகும் என்ருல் நான் அதற்கு இடங் கொடுப்பேனு என்ன?" என்று ஒரே போடாகப் போட்டார்.

"இருக்கலாம்! ஆனுலும் எனக்குச் சரியென்று தோன்றவில்லை. குழந்தைக்கு மனத்தில் ஏதோ ஆசை இருக்கிறது. நாளைக்கு அந்த மனிதன் சீமையிலிருந்து வந்து, 'சினிமாக்காரியைக் கட்டிக் கொள்ள மாட்டேன்' என்று சொன்னுல் என்ன செய்வது?" என்று சந்தேகத்துடன் கேட்டார்.

"ஐயோ! தாத்தா! சீமைக்குப் போய் விட்டு வரும் மனிதன் பெண்டாட்டியை ஒளித்து வைக்க விரும்ப மாட்டான். அவள் நல்ல நாகரிகமாக நாலு பேருடன் பழகத் தெரிந்தவளாக இருந்தால் தான் அவனுக்குப் பிடிக்கும். சீமையில் சினிமாக் கலை எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது தெரியுமா? அதையெல்லாம் பார்த்தவன் ஒரு சிறந்த சினிமா நடிகையை மனைவியாக அடைவதைப் பாக்கியமாகக் கருத மாட்டானு?"

"அது சரி! ஆனுல் நல்ல அழகான பெண்கள் பத்துப் பேருக்கு நடுவில் பழக ஆரம்பித்தால் அதன் மூலம் கெடுதலே வராதென்று எப்படிச் சொல்ல முடியும்?"

"என்ன தாத்தா? அப்படிப் பார்த்தால் எங்கே போனுலும் கஷ்டந்தான். வாத்தியார் வேலைக்குப் போனுல் அங்கேயும்தான் பத்துப் புருஷர்களோடு பழக வேண்டும். எந்த வேலை செய்தாலும் நல்லதும் உண்டு, கெடுதலும் உண்டு. ஆனுல் எனக்குத் தெரிந்த மட்டில் இதிலொன்றும் கெடுதல் கிடையாது. அது சர்வ நிச்சயம். நாம் இரண்டு பேரும் இந்துவுக்குத் துணையாக இருக்கும் போது என்ன ஏற்பட்டுவிட முடியும்? இந்துவும் சாதாரணமான பெண் அல்ல. எல்லாவற்றிலும் அவளுக்கு அளவு தெரியும். சுலபத்தில் ஏமாறக்கூடியவள் அல்ல. இந்துவைப் போன்றவர்கள் இந்தத் தொழிலில் இறங்கினுல் இந்தத் தொழிலுக்கே கௌரவம் ஏற்படும். எந்த விஷயமாக இருந்தாலும் அதைக் கையாள்பவர் கையில்தானே அதன் மதிப்பு இருக்கிறது?

"அதிலும் எவ்வளவு பணம் சம்பாதிக்கலாம்! இந்த மாதிரி ஒரு லாபகரமான தொழில் கிடையவே கிடையாது" என்ருர். இப்படிப் பேசிப்பேசிக் கவுண்டர் மனத்திலிருந்த ஆக்ஷேபணையைப் போக்கி விட்டார். கடைசியில் கவுண்டர் ஒரு நாள், "உனக்கு எப்படி உசிதமோ அப்படிச் செய்யம்மா! எனக்குச்சம்மதந்தான்" என்று கூறும்படி செய்து விட்டார். (தொடரும்)

வீட்டிலும் திறந்த வெளியிலும்
போட்டோக்கள் எடுக்க

# GEVAPAN 33°

## கேவாபான் 33°

சரியான
நெகடிவ்வுக்கு




இவை விபரத்திற்கும் கேவார்ட் எக்ஸ் போஷர் கால்குலேட்டருக்கும் எழுதுங்கள்:

**Allied Photographics Limited**

அல்லீட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

(மெயிலிங் டிபார்ட்மெண்ட்), கஸ்தூர் பில்டிங் ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

*பிரதி வெள்ளி இரவு 8 மணிக்கு ரேடியோ சிலோனில் (31,49 மீட்டரில்) ஏ.பி.எல். ஸ்தாபனத்தாரால் வெளியிடப்படும், "போட்டோ-பேண்டஸி" (PHOTO - FANTASY) என்ற நிகழ்ச்சியைக் கேட்டு ஒரு பரிசு பெறுங்கள்.*

Z-36

கூந்தல் பெருகினால்
விதவிதக் கொண்டைகளை
ஜோடிப்பது வெகு எளிதே!

# கேசவர்த்தினி




கேசவர்த்தினி கொண்டு கூந்தலைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இனி பொடுகைத் தலையில் சுமப்பானேன்? தலை அரிப்பை நிறுத்துங்கள். இள நரையைத் தடுங்கள். நரையையும் தள்ளி வையுங்கள்.

மறைந்துள்ள கூந்தலழகை
**கேசவர்த்தினி**
கொண்டு எடுத்துக் காட்டுங்கள்

ஷாம்புவினால் கூந்தலை சுத்தமாகவும் சுகந்தமாகவும் ஆக்குங்கள்

கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால் செலவு வேறு. எங்கும் கிடைக்கும்
**கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்** No. 5

# 'பிராங்கைடிஸினால் என் சுவாசப்பைகள் நெருப்பைப்போல் தகித்தன'



ஆனால் **பெப்ஸ்**
அடைப்பைப்போக்கி, எரிச்சலையும் உடனே தணித்தது.




பெப்ஸ் தொண்டை மற்றும் மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும் போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி, உங்கள் சுவாசத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைகளுக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும், உலக பிரசித்தி பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்புளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**PEPS**

FPY-38-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்




## 24. திருச்சிராப்பள்ளி

சோழ நாட்டின் தலைநகராக விளங்கிய உறையூரின் அருகே உள்ளது ஒரு குன்றம். "சிராப்பள்ளிக் குன்று" என்று தேவாரத்திலே அது குறிக்கப்படுகின்றது.

தென்னாட்டில் சமண சமயத்தைப் பரப்பிய முனிவர்கள், மன்னர் வாழ்ந்த தலைநகரங்களின் அருகே உள்ள மலைக்குகைகளைத் தம் இருப்பிடமாகக் கொண்டனர் என்பது ஒரு சரித்திர உண்மை. பாண்டி நாட்டுத் தலைநகராகிய மதுரையின் அருகே அமைந்த எட்டு மலைகளில் அம் முனிவர்கள் வாழ்ந்தார்கள். பல்லவ மன்னர் தலைநகரமாகக் கொண்ட காஞ்சிபுரத்தின் அருகேயுள்ள திருப்பருத்திக்குன்றம் சமண முனிவர்களின் இருப்பிடம் ஆயிற்று. அவ்வண்ணமே சோழ மன்னர் அரசு வீற்றிருந்த உறையூரின் மருங்கே நின்ற குன்றையும் அன்னார் உறைவிடமாகக் கொண்டனர்.

உறையூருக்குக் கிழக்கே "நெடும் பெருங் குன்றம்" ஒன்று நின்றது என்று அகநானூற்றுப் பாடல் அறிவிக்கின்றது.

"கறங்கிசை விழவின்
உறந்தைக் குணாது
நெடும் பெருங்குன்றம்"

(உறந்தை - உறையூர், குணாது - கிழக்கில் உள்ளது)

என்று பாடினார் ஒரு பழம் புலவர்.

அக் குன்றத்தின் உச்சியிலே சமண முனிவர் பலர் தவச்சாலைகள் நிறுவினர். அன்னவருள் ஒருவர் 'சிரா' என்னும் பெயரினர். அவருடைய தவச்சாலை சிராப்பள்ளி என்று பெயர் பெற்றது. இச் செய்தியை அறிவிக்கின்றது அம்மலையில் உள்ள கல்லெழுத்து.

ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்னே தமிழ் நாட்டில் கடுமையான சமயப் போர் மூண்டது. சைவமும் வைணவமும் ஒரு பால்; சமணமும் சாக்கியமும் ஒரு பால் நின்று நிகழ்த்திய நெடும் போரில் மத வெறி கொண்ட மன்னரும் மாந்தரும் நெறி முறை கடந்து நடந்ததும் உண்டு. பல்லவ மன்னனாகிய மகேந்திர வர்மன் திருநாவுக்கரசரைத் துன்புறுத்திப் பின்பு அவர் பெருமையை அறிந்து சமண சமயத்தைத் துறந்தான்; சைவ சமயத்தைத் தழுவினான். மத வெறி கொண்டு சமணப் பள்ளிகளை இடித்தான்; சிவாலயங்கள் எடுத்தான்.

அம்மன்னன் எடுப்பித்த ஆலயங்களில் ஒன்று சிராப்பள்ளிச் சிவன் கோயில் என்பது அங்குள்ள கல்வெட்டுக்களால் விளங்குகின்றது. சமணப் பள்ளியை அரசன் அழித்தாலும் நெடுங் காலமாக வழங்கி வந்த சிராப்பள்ளி என்னும் பெயர் மாறவில்லை. எனவே, அம்மலையின் மீது கோயில் கொண்ட சிவபெருமானைச் "சிராப்பள்ளிக் குன்றுடையான்" என்று தேவாரம் பாடுவதாயிற்று.

"நன்றுடை யானைத்
தீயதில் லானை நரை வெள்ளேறு
ஒன்றுடை யானை
உமையொரு பாகம் உடையானைச்
சென்றடை யாத
திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக்
கூறஎன் உள்ளம் குளிரும்மே"

[ஏறு - காளை]

என்பது திருஞான சம்பந்தர் திருவாக்கு. தேவாரப் பாமாலை பெற்றமையால் சிராப்பள்ளி திருச்சிராப்பள்ளி ஆயிற்று.

மகேந்திரவர்மன் நிறுவிய சிராப்பள்ளிச் சிவாலயத்தைத் திருநாவுக்கரசரும் சிந்தையாரத் தொழுதார்; அரசன் உள்ளத்திலும் அமண முனிவர் பள்ளியிலும் சிவமணம் கமழச் செய்த இறைவன் கரு

ணையை நினைந்து இன்பக் கண்ணீர் பொழிந்தார்; தாயாகவும் அமைந்த தயாபரன் என்று சிராப்பள்ளியில் கோயில் கொண்ட ஈசனைப் போற்றினர்.

"தாயுமாய் எனக்கே
தலைக் கண்ணுமாய்ப்
பேய னேனையும்
ஆண்ட பெருந்தகை
தேய நாதன்
சிராப் பள்ளி மேவிய
நாய னார் என
நம் வினை நாசமே"

[தேய நாதன்—உலக நாதன்]

என்று பாடினர். "பால் நினைந்து ஊட்டும் தாயுமாய் நின்ற பரமனே! அறிவினுக்கு அறிவாய் நின்று அறிவிக்கும் இறைவனே! கண்ணின் ஒளியாய் நின்று காணுதன வெல்லாம் காட்டும் கண்ணுதலே! பேயேனையும் ஆட்கொண்ட பெருமானே!" என்று போற்றினர். அவர் திருவாக்கின் அடியாகத் "தாயுமானவர்" என்னும் பெயர் ஈசனுக்கு அமைவதாயிற்று.

அவ் வண்ணமே அம் மலையில் எழுந்தருளி யிருக்கும் அம்மையின் பெயரும் திருநாவுக்கரசரது தேவாரத்தின் அடியாக எழுந்ததாகும்.

"மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாஉகந் தேறும் இறைவனர்
கட்டு நீந்தவர்க் கின்னரு ளே செயும்
சிட்டர் போலும் சிராப்பள்ளிச் செல்வரே"

[மட்டு-தேன், கட்டு-பாசம், சிட்டர்-பெரியவர்]

என்ற திருப் பாசுரத்தில் உள்ள "மட்டு வார் குழலாள்" என்ற அருமைத் தமிழ்ப் பெயரே இன்றளவும் அம்மையின் பெயராக வழங்கி வருகின்றது.

இலங்கை வீரனாகிய திரிசிரனை அம் மலையோடு இணைத்துத் திருச்சிராப்பள்ளியைத் திரிசிராமலை என்றும், அதைச் சார்ந்த நகரத்தைத் திரிசிரபுரம் என்றும் கூறுவதுண்டு. குன்றுதோராடும் குமரவேளின் புகழ் பாடிய அருணகிரியார்,

"திரைகள் போல்அலை மோதிய சீதள
குடக காவிரி நீள்அலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீர"

என்று அப்பெருமானைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

திருச்சிராப்பள்ளியின் பெருமை படிப் படியாக உயர்ந்தது. மலையின் அடியில் எழுந்த ஊர் சிறந்த நகரமாகப் பெருகிற்று. பழைய தலைநகரமாகிய உறையூர் சிற்றூர் ஆகக் குறுகிற்று. இப்பொழுது திருச்சிராப்பள்ளியின் ஒரு அங்கமாக அமைந்துள்ளது உறையூர்.

மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே, தவப் பெருஞ்செல்வர் ஒருவர் திருச்சிராப் பள்ளியிலே தோன்றினர்; தாயுமானவர் என்னும் பெயர் கொண்ட அப்பெரியாரைத் தமிழ் நாடு நன்கறியும். அவர் பாடியருளிய இன்பத் தமிழ்ப் பாடல்கள் கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாகும்.

"தந்தை தாயும்நீ
என்உயிர்த் துணையும்நீ
சஞ்சலம் அது தீர்க்க
வந்த தேசிக
வடிவும்நீ உனையலால்
மற்றொரு துணை காணேன்
அந்தம் ஆதியும்
அளப்பரும் சோதியே
ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய
தாயுமா னவன்எனும்
சிரகிரிப் பெருமானே"

என்ற பாட்டின் இனிமையும் எளிமையும் அவர் வாக்கின் தெளிவிற்கு ஒரு சான்றாகும். இறைவன் அருளைப் பெற விரும்பி அவர் பாடிய பாடல்கள் படிப்போர் உள்ளத்தை உருக்குவன வாகும்.

"பாராயோ என்னை முகம்
பார்த்தொரு கால் என் கவலை
தீராயோ வாய் திறந்து
செப்பாய் பரா பரமே"

என்ற பாட்டைப் பாடாதார் தமிழ் நாட்டில் உண்டோ?

திருச்சிராப் பள்ளிக்குப் பெருமை அளித்த தமிழ்க் கவிஞருள்ளே தலை சிறந்தவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. காவிரி யாற்று வெள்ளம் போல் அவர் உள்ளத்திலே பொங்கி எழுந்தது தமிழ்க் கவிதை. தமிழ் மொழியில் ஆர்வம் உடைய மாணவர்க்குத் தாயும் தந்தையுமாய் அமைந்து அறிவை ஊட்டினர் அப் பெரியார். தமிழகத்தில் அறிவுடையோர் "சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தி" பெற்ற சாமிநாதையர், பிள்ளையவர்களின் மாணவர்களுள் ஒருவர் என்றால் அப் புலவர் பெருமானது சீர்மை பேசுந் தரத்ததோ?

"அருத்தி மிகும் எனைஅருகில்
இருத்தி அருந் தமிழ்நூல்கள்
அறைந்து பின்னர்த்
திருத்துறைசை அமர்தருசுப்
பிரமணிய அருட்கடலின்
திருமுன் சாரப்
பொருத்திஅனை யான்கருணைக்கு
இலக்காக்கி இருபயனும்
பொருந்தச் செய்தோன்
மருத்த பொழில் சிரகிரிவாழ்
மீனாட்சி சுந்தர
நாவலவர் ஏறே"

[அருத்தி—(தமிழ்)ஆர்வம், துறைசை—திருவாவடுதுறை]

என்று தம்மை ஆட் கொண்டு, உருவப் படுத்திய குருநாதனை அகமகிழ்ந்து போற்றினர் ஐயர் பெருமான்.

## 3. எண்ணெய் வளர்ந்த கதை

பூமிக்கு அடியில் தேங்கிக் கிடக்கும் மண்ணும் கல்லும் கலந்து இறுகிப் போன எண்ணெய்க் குழம்பை மனிதர்கள் எத்தனையோ காலத்துக்கு முன்பாகவே உபயோகிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். எத்தனையோ காரியங்களுக்கும் உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். எகிப்து தேசத்து மன்னர்கள் பிரசித்தி பெற்ற



பாபல் ஸ்தூபிகளைக் கட்டுவதற்கு இந்த எண்ணெய்க் குழம்பை உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். அலை மோதும் பெரிய கடல்களில் அந்தக் காலத்தில் உபயோகித்த மரக்கலங்களுக்கும் இதே இறுகிய எண்ணெய்க் குழம்பை உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். மரக்கலத்தின் அடியில் பொருத்தியிருக்கும் ஒரு மரப் பலகைக்கும் இன்னொரு மரப் பலகைக்கும் இடையில் உள்ள இடுக்குகளின் வழியாகக் கடல் நீர் உள்ளே புகுந்து விடாமல் அடைப்பதற்காக இந்த இறுகலான நிலத்தார் எண்ணெய்க் குழம்பை உபயோகப்படுத்தி அதில் வெற்றி அடைந்திருக்கிறார்கள்.

ஆனால் அப்பொழுதெல்லாம் எண்ணெய்க் கிணறு தோண்டி அதிலிருந்து மேற்படி எண்ணெய்க் குழம்புகளை எடுத்து அவர்கள் உபயோகித்து விடவில்லை. கடற்கரை ஓரமாக உள்ள பெரிய படுகைகளில் எவ்வித கஷ்டமும் இன்றி எதேச்சையாகக் கிடைத்த நிலத்தார் எண்ணெய்க் குழம்புகளைத்தான் உபயோகப்படுத்தியிருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

'எண்ணெய்க் கிணறுகள் தோண்டுவது அப்படி என்ன கஷ்டமா! அது எல்லா இடத்திலும் கிடைக்காதா!' என்று கேட்கலாம்.

ஆமாம்; எண்ணெய்க் கிணறுகள் தோண்டுவது கஷ்டம்தான். எண்ணெய்க் குழம்புகளும் சில சில இடங்களில்தான் கிடைக்கின்றன.



சாதாரணமாய் பூமியில் கிணறு தோண்டுகிறோம். இருபது முப்பது அடி ஆழம் போனவுடன் தண்ணீர் கிடைத்து விடுகிறது. தண்ணீரை உபயோகப்படுத்த ஆரம்பித்து விடுகிறோம். அது போல தோண்டிய இடங்களிலெல்லாம் பூமிக்குள் எண்ணெய்க் குழம்பு கிடைக்காது. பின் எங்குதான் கிடைக்கும்!

நில ஆராய்ச்சி நிபுணர்களின் உதவியால்தான் பூமிக்கு அடியில் எண்ணெய் எங்கு கிடைக்கும் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். நில ஆராய்ச்சி நிபுணர்களின் முக்கியமான வேலை பூமிக்கு அடியில் உள்ள பாறைகளை உடைத்து எடுத்து அதன் அமைப்பைப் பரிசோதித்துப் பார்ப்பதுதான். பிறகு அதில் உள்ள மண்ணின் தரத்தைக் கொண்டும், அந்த மண் படல்கள் ஒன்றன் மேல் ஒன்றாக அழுங்கி இருக்கும் முறையைக் கொண்டும் அந்தப் பாறைகளுக்கு அடியில் எண்ணெய் கிடைக்குமா கிடைக்காதா என்பதைக் கண்டு பிடிக்கின்றனர். இப்படி ஆராய்ச்சி செய்து எண்ணெய்க் கிணறு தோண்டினாலும் சில இடங்களில்தான் எண்ணெய் கிடைக்கிறது. சில இடங்களில் கிடைப்பதில்லை.

இப்பொழுது எண்ணெய் கிடைக்கும் இடங்களைப் பார்த்தால் அவைகள் ஒரு காலத்தில் கடலாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று நம்ப முடிகிறது. இயற்கையின் குழப்பம் காரணமாக, பூகம்பம் முதலிய பயங்கர உற்பாத நிகழ்ச்சிகள் ஏற்பட்டு அவை பூமியாக மாறியிருக்க வேண்டும் என்று பூமி ஆராய்ச்சி நிபுணர்கள் ஊகிக்கிறார்கள். வட அமெரிக்காவும் தென் அமெரிக்காவும் ஒரு காலத்தில் கடலாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று விஞ்ஞான நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். உலகத்துக்குத் தேவையான பெட்ரோலியம் எண்ணெய்ப் பொருள் பாதிக்கு மேல் அங்கு கிடைப்பதைக் கொண்டுதான் விஞ்ஞான நிபுணர்கள் அவ்வாறு அபிப்பிராயப் படுகின்றனர்.

உலகத்தின் மத்திய கிழக்குப் பிரதேசங்கள் ஒருகாலத்தில் கடற்கரையை ஒட்டிய படுகைகளாகத்தான் இருந்திருக்க வேண்டும். மத்திய தரைக் கடல், செங்கடல், கஸாபியன் கடல், கருங்கடல் ஓரமாக உள்ள பிரதேசங்கள் கடற்கரையை ஒட்டிய படுகைகளாகவே இருந்திருப்பதற்கு வேண்டிய அத்தாட்சிகள் நிறைய இருப்பதாக நில ஆராய்ச்சி நிபுணர்கள் உறுதியாகக் கூறுகின்றனர். காரணம் அங்குதான் உலகத்தி

## பூமியை வெட்டிக் குடைகிறார்கள்!

லேயே மிகப் பெரிய எண்ணெய்க் கிணறுகள் பூமிக்கு அடியில் இருக்கின்றன.

சுமார் இருநூறு பில்லியன் டிரம் பெட்ரோலியம் எண்ணெய்களாவது குறைந்த பட்சம் அங்கு கிடைக்கும் என்று விஞ்ஞான நிபுணர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். (ஒரு பில்லியன் என்பது பத்து கோடியாகும்.)

இவ்வாறு பூமிக்கு அடியில் இருக்கும் எண்ணெய்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே பிறந்து விட்டாலும், எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே எண்ணெய்க் குழம்புகளை மனிதர்கள் உபயோகிக்கத்தொடங்கினாலும்கூட எண்ணெய் வளர்ந்தது என்னவோ சுமார் நூறு ஆண்டுகளுக்குள்தான்.

எண்ணெய் மனிதர்கள் வாழ்க்கையில் கலந்து மெதுவாகத்தான் வளரத் தொடங்கியிருக்கிறது. வட அமெரிக்காவின் பூர்வீகக் குடிகளான சிவப்பு இந்தியர்கள் உப்புக் கிணறு தோண்டும் போது அத்துடன் ஒருவித எண்ணெயும் சேர்ந்து வந்ததைப் பார்த்தனர். அந்த எண்ணெயை மருந்துப் பொருளாக உபயோகப் படுத்தி வந்திருக்கின்றனர்.

பதினாறும் நூற்றாண்டில் ரோமன் கத்தோலிக்கப் பாதிரிகள் வட அமெரிக்காவுக்குச் சென்று மதப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தபோது சிவப்பு இந்தியர்கள் உபயோகித்து வந்த இந்தப் புதுமையான மருந்து எண்ணெயைப் பார்த்து மிகவும் அதிசயித்தனர்.

பதினெட்டாவது நூற்றாண்டின் மத்தியில் வட அமெரிக்காவில் குடியேறிய வெள்ளைக்காரர்கள் உப்புக் கிணறு தோண்டும் போது பல இடங்களில் தண்ணீருடன் எண்ணெயும் கலந்து வருவதைக் கண்டனர். கிர் என்ற உப்பு வியாபாரி இந்த மருந்து எண்ணெய்களையெல்லாம் சேமித்துச் சிறு சிறு புட்டிகளில் அடைத்துத் தம் உப்பு வியாபாரத்துடன் இந்த மருந்தெண்ணெய் வியாபாரத்தையும் செய்து வந்தார். அவர் விற்ற மருந்தெண்ணெய்ப் புட்டிகளில் உப்புக் கிணற்றின் படத்தை ஒட்டி, 'உப்புக் கிணறு மார்க்' மருந்தெண்ணெய் உயர்வானது என்று விளம்பரப்படுத்தினார். உப்பு வியாபாரியான கிர் வியாபார நோக்கத்துக்காக ஒட்டிய உப்புக் கிணற்றின் படம்தான் எண்ணெய்க் கிணறு தோண்டுவதற்கு வேண்டிய உத்தியைக் கொடுத்தது.

டார்ட் கல்லூரியைச் சேர்ந்த பிஸ்ஸல் என்னும் விஞ்ஞான ஆசிரியர் கிரீன் மருந்தெண்ணெய்ப் புட்டியை வாங்கி அந்த எண்ணெயைப் பரிசோதனை செய்து பார்த்தார். மனிதன் இதுவரையில் கனவுகூட காண முடியாத எத்தனை எத்தனையோ வித்தைகளை இந்த விந்தைப் பொருளான பெட்ரோலியத்தின் மூலம் சாதிக்கலாம் என்பதை உணர்ந்து தெரிவித்தார். அதன் பிறகுதான் எண்ணெய்க் கிணறு தோண்டி எண்ணெய் கண்டு பிடிக்கலாம் என்ற உணர்ச்சி பலருக்கு ஏற்பட்டது.

முதன் முதலில் எவ்வாறு எண்ணெய்க் கிணறு தோண்டினார்கள்! எங்கு தோண்டினார்கள்! யார் தோண்டினார்கள்!

## 4. முதல் எண்ணெய்க் கிணறு

சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு, போர் பூசல் இல்லாமல் உலகம் அமைதியாக இருந்த




காலம். நவீன நாகரிகத்தின் கோரப் பிடிப்பில் உலகம் அகப்பட்டுத் தவிக்காத காலம். உலகை அழிக்கும் அணுகுண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் கண்டு பிடிக்காத அந்தக் காலத்தில் அமெரிக்க மக்கள் இயந்திர வாழ்க்கை நடத்தாமல் அமைதியான முறையில் அன்பு வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

அமெரிக்கா இப்பொழுது உள்ளது போல் விண்ணைப்பிடிக்கும் கட்டடங்களை யுடைய பெரிய நகரங்களைக் கொண்டதாக இல்லை. மக்கள் கிராமங்களில் தான் அதிகமாக வாழ்ந்து வந்தார்கள். விவசாயத்திலும் இன்னும் பல துறைகளிலும் உழைத்து வந்தார்கள்.

ஒரு நாள். பென்ஸில்வேனியா நகரத்துக்கு அருகில் உள்ள டைட்டஸ் வில்லி என்ற கிராமத்தை நோக்கிச் செல்லும் நெடுஞ் சாலையில் நடுத்தர வயதுடைய வாலிபன் ஒருவன் தன்



ன் தனியே நடந்து சென்று கொண்டிருந்தான். சாலையின் இரு புறங்களிலும் உள்ள இயற்கைக் காட்சிகளை அனுபவித்த வண்ணம் எதையோ சிந்தனைசெய்து கொண்டு சென்று கொண்டிருந்தான்.

சாலையின் இருபுறங்களிலும் மக்கள் கிணறு வெட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவர்கள் கிணறு தோண்டும் இடத்துக்குச் சென்றான். 'எதற்காக இவ்வளவு கிணறு தோண்டுகிறீர்கள்' என்று விசாரித்தான். கிணற்றில் இருந்து உப்புத் தண்ணீர் எடுத்து அதைக் காய்ச்சி உப்பு செய்வதற்காகத்தான் என்பதை அறிந்து கொண்டு மீண்டும் தன் பிரயாணத்தைத் தொடர்ந்தான்.

சற்று தூரத்தில் அவனுக்குத் தெரிந்த 'வில்லியம் ஸ்மித்' என்ற கொல்லன் கிணறு தோண்டிக் கொண்டிருந்ததைக் கண்டான். அவனிடம் சென்றான்.

"கர்னல் டிரேக்! என்ன விசேஷம்! எங்கே வந்தாய்!" என்று விசாரித்தான் ஸ்மித். டைடஸ்வில்லி கிராமத்துச் சாலையில் நடந்து சென்ற வாலிபனின் பெயர்தான் கர்னல் டிரேக்.

"ஒன்றுமில்லை. கிணறு தோண்டுகிறீர்களே, பார்க்கலாம் என்று வந்தேன்."

"உப்புத் தண்ணீர் வேண்டுமல்லவா! உப்பு இல்லாமல் ஜீவிக்க முடியாதே! அதனால் தான் கிணறு தோண்டுகிறேன்."

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அதுபோல் செய்வோமா!"

"அது என்னப்பா அபூர்வ யோசனை! சொல்லேன். செய்தால்போச்சு."

"நாம் ஏன் இன்னும் ஆழமாகத் தோண்டி எண்ணெய் எடுக்கக் கூடாது!" என்றான் கர்னல் டிரேக்.

"அப்படியே தோண்டினால் போச்சு" என்று பலமாகத் தலையை ஆட்டினான் ஸ்மித்.

இருவரும் சேர்ந்து எண்ணெய்க் கிணறு தோண்டும் பணியில் ஈடுபட்டனர். காலையில் இருந்து மாலை வரையில் மண்ணைத் தோண்டித் தோண்டிக் கரையில் போட்டனர். மிக உற்சாகமாக அவர்கள் கிணறு தோண்டும் பணியில் ஈடுபட்டு உழைத்தனர்.

எந்தப் புது முயற்சியையும் கேலி செய்யும் மக்கள் கூட்டம் அங்கும் இல்லாமல் போகவில்லை. ஸ்மித்தும் டிரேக்கும் சேர்ந்து எண்ணெய்க் கிணறு தோண்டும் அதிசயத்தைப் பார்த்துக் கேலிசெய்தனர். அவர்கள் முயற்சியைப் பரிகாசம் செய்தனர். அவர்கள் தோண்டும் கிணற்றுக்கு "முட்டாள் கிணறு" என்று நாமதேயம் சூட்டி நையாண்டி செய்தனர்; கைகொட்டி நகைத்தனர்.

ஊர் ஜனங்களின் ஏச்சையும் பேச்சையும் சிறிதும் லட்சியம் செய்யாமல் டிரேக்கும் ஸ்மித்தும் கிணறு தோண்டுவதில் தீவிரமாக ஈடுபட்டனர். ஒருநாள் இரண்டு நாள் என்று ஒரு வாரம் சென்றது. கிணறு ஆழமாகிக் கொண்டு வந்தது. மேலும் மேலும் தோண்டினர். ஒரு வாரம், இரண்டு வாரம், மூன்று வாரம் என்று ஒரு மாதம்–முப்பது நாட்கள் சென்று விட்டன. கிணறு ஆழமாகப் போய்க் கொண்டே இருந்தது. மேலே மண் குன்று போலக் குவியத் தொடங்கியது. அவர்கள் முயற்சி என்னவோ ஊர் ஜனங்கள் சொல்லுவது போல வெறும் முட்டாள் கிணறு தோண்டும் முயற்சியாகவே இருந்தது.

இருந்தாலும் அவர்கள் மனம் தளர்ந்து போகவில்லை. மேலும் மேலும் தோண்டிக் கொண்டே சென்றனர். பத்தடி இருபதடி முப்பதடி என்று சுமார் அறுபது அடிக்கு மேல் தோண்டி விட்டனர். மாதங்கள் மூன்று முடிந்து விட்டன. விளையாட்டுப்போல தொண்ணூறு நாட்கள் சென்று விட்டன.



ஸ்மித்துக்குச் சற்று அலுப்புத் தட்டியது. "இத்துடன் நிறுத்திக் கொள்வோம். கிணற்றில் இருந்து என்ன வருகிறது என்று பார்த்து விட்டுப் பிறகு ஆரம்பிப்போம்" என்றான்.

டிரேக்கும் "ஆகட்டும்" என்று தலையை ஆட்டி வைத்தான்.

1859-ம் ஆண்டு. ஆகஸ்ட் மாதம்; இருபத்தேழாம் தேதி.

பொழுது புலர்ந்தது. பொற்கோழி கூவிற்று. கீழ் வானத்தில் சூரியன் ஜகஜ்ஜோதியாக உதயமானான். மக்கள் எல்லாரும் தங்களுடைய தொழிலில் ஈடுபட விரைந்தனர்.

டிரேக்கும் தான் மூன்று மாதங்கள், தொண்ணூறு

நாட்கள் பாடுபட்டுத் தோண்டிய கிணற்றை நோக்கிப் புறப்பட்டான். கிணற்றுக்கு அருகில் சென்றான். கிணற்றுக்குள் குனிந்து பார்த்தான். ஒரு சொம்பை எடுத்துக் கயிற்றில் கட்டிக் கிணற்றில் விட்டான். அதில் இருந்த தண்ணீரை மொண்டான். அந்தத் தண்ணீரை ஒரு முறைக்குப் பல முறை கூர்ந்து பார்த்தான். அவன் முகத்தில் ஒரு பிரகாசம் உண்டாயிற்று.

மீண்டும் கிணற்றுக்குள்ளிருந்து ஒரு சொம்புத் தண்ணீர் மொண்டான். கையில் கொட்டிப் பார்த்தான். கையெல்லாம் வழவழ வென்று ஒட்டிக் கொண்டது. தண்ணீரைக் கொஞ்சம் எடுத்து மூகர்ந்து பார்த்தான். அதில் ஏதோ ஒரு புது மணம் வீசுவதை உணர்ந்தான். அடுத்த கணம் அவன் தன்னை மறந்தான். அப்படியே அந்தத் தண்ணீரை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டான். கிணற்றைச் சுற்றிவந்து உத்சாகமாகக் குதித்தான். அங்கு மலை போல் பூமியில் இருந்து எடுத்துக் குவித்துக் கிடந்த மண்ணில் கிடந்து புரண்டான். மீண்டும் எழுந்தான். சுற்று முற்றும் பார்த்தான். திடீர் என்று கூச்சல் போடுவதற்கு ஆரம்பித்து விட்டான்.



“பில்லி மாமா! பில்லி மாமா!” என்று வாய்விட்டுக் கத்தினான்.—வில்லியம் ஸ்மித்தின் செல்லப் பெயர்தான் பில்லி மாமா.

டிரேக்கின் சத்தத்தைக் கேட்டு பில்லி மாமா ஓடி வந்தார். “என்ன! என்ன!” என்று படபடப் போடு கேட்டார்.

“எண்ணெய்க் கிணறு தோண்டி விட்டோம். கிணற்றுக்குள் உண்மையாகவே எண்ணெய் இருக்கிறது” என்று உணர்ச்சியுடன் கத்தினான் டிரேக். அப்படியே பில்லி மாமாவை அணைத்துப் பிடித்துக்கொண்டான்.

இவ்வாறு 1859–ம் ஆண்டு முதன் முதலில் எண்ணெய்க் கிணறு தோண்டி பெட்ரோலியம் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது.

பில்லிமாமாவும் டிரேக்கும் தோண்டிய அந்த முதல் எண்ணெய்க் கிணற்றின் ஆழம் அறுபத்து ஒன்பதே அடிதான்.

ஆனால் இன்றைய தினம் பத்தாயிரம் இருபதினாயிரம் அடிகள் பூமிக்குக் கீழே கீழே அதள பாதாளத்தை நோக்கிக் குடைந்து கொண்டு சென்று எண்ணெய் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கிறார்கள். சில இடங்களில் எத்தனை ஆயிரம் அடிகள் குடைந்துகொண்டு சென்றாலும் கடைசியில் உப்புத் தண்ணீர் தான் கிடைக்கிறது. சில இடங்களில் அதுவும் கிடைப்பதில்லை.

முதலில் தோண்டிய எண்ணெய்க் கிணற்றில் இருந்த எண்ணெயையும் மருந்தாகத்தான் உபயோகித்திருக்கிறார்கள். போகப் போக அது தொழில் துறைக்கு உதவும் என்பதை மக்கள் உணரத் தலைப்பட்டனர்.

பிறகு அந்த அதிசய எண்ணெயை விளக்கு எரிப்பதற்கு உபயோகப்படுத்த ஆரம்பித்தார்கள். மின்சாரம் கண்டு பிடிக்கப்படாத அந்த நாளில் எல்லா வீடுகளிலும், தொழிற்சாலைகளிலும், அரண்மனைகளிலும் அரண்மனைகளை யொட்டிய அரசாங்கக் காரியாலயங்களிலும் மண்ணெண்ணெய் விளக்குகள் தான் வெளிச்சம் கொடுத்து வந்தன. அந்தக் காலத்தில் மண்ணெண்ணெய் விளக்குகளுக்கு உலகம் முழுவதும் அதிகக் கிராக்கி இருந்து வந்தது.

மண்ணெண்ணெயுடன் கிடைத்த பெட்ரோல் எண்ணெயை விளக்குகளுக்கு உபயோகப்படுத்த முடியவில்லை. மீறி உபயோகப் படுத்தினாலும் அபாயங்கள் ஏற்பட்டு வந்தன. அதனால் பெட்ரோலை வெறும் கழிவுப் பொருளாகக் கருதிக் கடலில் பாய்ச்சி வந்தனர்.

ரட்டோ என்ற ஜர்மானிய நிபுணர் ஒருவர் இந்தப் பெட்ரோலை உபயோகிக்க ஒரு வழி கண்டு பிடித்தார். புதுமாதிரி இயந்திரம் ஒன்றைச் செய்து பெட்ரோலை விட்டு அந்த இயந்திரத்தை ஓட்டிக் காண்பித்தார். அதுமுதல் உலக நாகரிகத்தின் போக்கே மாறி விட்டது.

## 5. எண்ணெய்க் கிணறுகள்

முன்னாளில் கண்டு பிடிக்கப் பட்டது போல எண்ணெய்க் கிணறுகள் அவ்வளவு சுலபமாக இப்பொழுது கண்டுபிடிக்க முடிவதில்லை. பூமிக்கு அடியில் எண்ணெய்க் கிணறுகள் எங்கு கிடைக்கும் என்பதைக் கண்டு பிடிப்பதற் கென்றே சில ஆராய்ச்சி நிபுணர்கள் இருக்கிறார்கள். எத்தனை எத்தனையோ சில ஆராய்ச்சி நிபுணர்கள் தங்கள் வாழ்நாளெல்லாம் எண்ணெய்க் கிணறு கண்டு

பிடிப்பதில் ஈடுபடுத்தி வருகின்றனர். இந்த எண்ணெய்க் கிணறு வேட்டைக்கு எத்தனையோ விதம் விதமான நவீன இயந்திர சாதனங்களையும், ஆகாச விமானங்களையும், இரும்பு டிரக் வண்டிகளையும், சிறிய வெடி குண்டுகளையும் உபயோகப் படுத்துகிறார்கள். கடைசியில் பகீரதன் பலகாலம் கடும் தவம் செய்து புனிதமான கங்கை நதியைக் கொண்டு வந்ததுபோல அவர்கள் பலப்பல கஷ்டங்களை யெல்லாம் கடந்து விலைப் பொருளான பெட்ரோலியம் எண்ணெய்க் கிணறு இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கிறார்கள்.

மனித சஞ்சாரமே இல்லாத பயங்கரக் காடுகளின் மேலாகவும், கடற்கரை யோரமாகவும் பறந்து பறந்து சென்று அங்குள்ள நிலத்தின் அமைப்பைமுதலில் பார்க்கிறார்கள். பிறகு விமானத்தில் இருந்தே அந்த நிலங்களைப் புகைப் படம் எடுக்கிறார்கள். அந்தப் படங்களை வைத்துக் கொண்டு பூமியின் அமைப்பு முறையை ஆராய்ந்து புரிந்து கொள்கிறார்கள். அதிலிருந்து எண்ணெய்க் கிணறுகள் கிடைப்பதற்கு ஏற்ற இடமா என்பதை உணர்கிறார்கள். அப்படி உணர்ந்தவுடன் மீண்டும் அந்த நிலங்களைப் புகைப்படம் எடுக்கிறார்கள். நிலங்களின் மேடு பள்ளங்களை எல்லாம் அதற்கு வேண்டிய இயந்திரக் கருவிகளைக் கொண்டு அளந்து படங்கள் தயாரிக்கிறார்கள். அப்படித் தயாரித்த எல்லாப் படங்களையும், ஏற்கெனவே எடுத்த புகைப் படங்களையும் வைத்துக் கொண்டு பூமி ஆராய்ச்சியில் தேர்ச்சி பெற்ற விசேஷ நிபுணர்களை அணுகி அவர்கள் யோசனையைக் கேட்கிறார்கள்.

அந்த நிபுணர்களில் சிலர் பூமியின் அமைப்புப் படங்கள் சிலவற்றைப் பார்த்தவுடனேயே அந்த இடங்களில் எண்ணெய்க் கிணறுகள் இருக்கலாம் என்பதை எப்படியோ கண்டு பிடித்து விடுகின்றனர். இருந்தாலும் எண்ணெய்க் கிணற்றில் எண்ணெய் கிடைக்கும் வரை அதை நம்புவதற்கில்லை.

இன்னும் பூமிக்குக் கீழே உள்ள பாறையின் அமைப்பு முறைகளைத் தெரிந்து கொள்வதற்கு வேறு பல நவீன யந்திர சாதனங்களை வைத்துக் கொண்டிருக்கின்றனர். அதைக் கொண்டு பூமிக்கு அடியில் ஒரு செயற்கை பூகம்பத்தை உண்டாக்குகிறார்கள். அதாவது பூமியில் பல நூறு அடிகள் தோண்டி, அதற்கு அடியில் சிறிய வெடிகுண்டுகளைப் போட்டு வெடிக்கும் படி செய்கின்றனர். வெடி குண்டு வெடிக்கும்போது பூமி அதிரும் அல்லவா! அந்த அதிர்ச்சியின் அலைகளைக் கணக்கெடுக்கும் கருவியின் மூலமாகப் பதிவு செய்து கொள்கின்றனர். அந்த அதிர்ச்சிப் பதிவுப் படத்தை வைத்துக்கொண்டு அங்குள்ள பாறைகளின் அமைப்பு முறைகளைத் தெரிந்து கொள்ளுகின்றனர். பூமிக்கு அடியில் எண்ணெய் எப்படிக் கிடைக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறோம் அல்லவா! அதாவது கடல் ஜீவராசிக் கூட்டங்கள், கடல் தாவரக் காடுகள் ஆகியவற்றின் கொழுப்புச் சத்துகளும், எண்ணெய்களும்தான் இப்பொழுது பூமிக்கு அடியில் கிடைக்கும் பண்பட்ட எண்ணெய் என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறோம்.

அந்த ஜீவராசிகளும், தாவர வர்க்கங்களும் மாண்டு மடிந்து மக்கிய மண் படலங்கள் அந்தப் பாறைகளில் இருக்கிறதா என்பதைத்தான் அவர்கள் தெரிந்து கொள்கிறார்கள். அதில் மேற்படி கடல்வாழ் ஜீவராசிகளினுடைய மண்படலம் இருந்து விட்டால் அதற்குக் கீழே எண்ணெய் கிடைக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. மேலே தோண்டலாமா என்று நிர்ணயிக்கின்றனர். மேலும் மேலும் குடைந்து கொண்டு பூமிக்கு அடியில் பாதாளத்துக்கே செல்கின்றனர்.

இவ்வாறு குடைந்து குடைந்து எண்ணெய்க் கிணற்றை அமைப்பது என்பது நம் போன்ற சாதாரண மனிதர்களால் கற்பனை செய்து பார்க்கக் கூடிய விஷயம் அல்ல. பூமிக்கு அடியில் ஆயிரக்கணக்கான அடிகள் குடைந்து குடைந்து தோண்ட வேண்டும். அதற்கு எத்தனையோ நாட்கள், மாதங்கள் சில சமயங்களில் வருஷங்கள்கூட ஆகும். பூமிக்கு அடியில் மணல், மண், பாறை, களிமண் இப்படி என்ன என்னவோ படிப்படியாகப் படிந்து கிடக்கும். இவைகளை எல்லாம் குடைந்து கொண்டு செல்லவேண்டும். இதற்காக எண்ணெய்க் கிணறு தோண்டுவதற்கு முன்பாகவே பல ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருக்கிறது.

சாதாரணமாக நம் வீட்டுத் தோட்டத்திலோ, அல்லது வேறு இடங்களிலோ தண்ணீர்க் குழாய் இறக்குவதற்குக் கையாளும் முறையையேதான் எண்ணெய்க் கிணறுகள் தோண்டுவதற்கும் கையாளுகிறார்கள். சாதாரண குழாய்க் கிணறுகள் தோண்டுவதற்குப் பெரிய பெரிய இரும்பு ஸ்தம்பங்களைக்



பாரதத்தின் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் பம்பாய் டிராம்பேயிலுள்ள பர்மா ஷெல் சுத்திகரிப்பு ஆலையைத் திறந்து வைத்தார். மேலே படத்தில் இடது கோடியிலிருப்பவர் பம்பாய் முதன் மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய். வலது கோடியிலிருப்பவர் பர்மா ஷெல் டைரக்டர்களின் தலைவர் ஜே. எம். பெக்கினேர்.

கொண்டு முக்கோண வடிவத்தில் கோபுரம் போல் கட்டி அதிலிருந்து மண்ணைக் குடைந்து, இரும்புக் குழாய்களைப் பூமிக்குள் இறக்குவதை நம்மில் பலர் பார்த்திருக்கலாம். ஒரு சில அடி ஆழம் குழாய்க் கிணறு தோண்டுவதற்கே அவ்வாறு கோபுரம்போல் அமைக்க வேண்டியிருக்கிறது. ஆயிரக்கணக்கான அடிகள் பூமிக்குள் தோண்டுவதற்கு எவ்வளவு பெரிய இரும்புக் கோபுரம் அமைக்க வேண்டும் என்பதை ஒருவாறு ஊகிக்க முடிகிறதல்லவா!

பூமிக்கு மேல் எண்ணெய்க் கிணறு தோண்டும் இடத்தில் இருநூறு அடி உயரத்துக்கு இரும்பினால் கோபுரம் கட்டுகிறார்கள். அந்தக் கோபுரத்தின் முனையில் பூமியைக் குடையும் பல நவீன இயந்திர சாதனங்களை அமைக்கிறார்கள். அவற்றின் துணை கொண்டு பூமியைக்குடைந்து இரும்புக் குழாய்களைப் பூமிக்குள் புதைப்பதற்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

நீளமான இரும்புக் குழாயும் அந்தக் குழாயின் முனையில் பூமியைக் குடைந்து மண்ணைத் தோண்டும் பலம் பொருந்திய எஃகு அலகுகளையுடைய துரைப்பணமும் பொருத்தியிருக்கிறார்கள். அந்த எஃகு அலகுத் துரைப்பணத்தை அழுத்தி வேகமாகச் சுழலச் செய்து பூமியைக் குடைகிறார்கள். இவ்வாறு குடைந்து கொண்டு பூமிக்கு அடியில் சில சமயங்களில் மூன்று மைல் கூட செல்லுகிறார்கள். மூன்றுமைல் ஆழத்துக்கு அடியில் கிடைப்பது உப்புத் தண்ணீரா, இல்லை, எண்ணெய்ப் பொருள்தானா என்பதைக் கண்டு பிடிப்பதற்குப் பல நவீன இயந்திர சாதனங்களை உபயோகப் படுத்திப் பரிசோதனை செய்து பார்க்கின்றனர்.



பூமியைக் குடையும் குழாயும் எஃகு அலகுகளையுடைய துரைப்பணமும்.

அந்தக் குழாய்க்குள் மூன்று மைல்களுக்குக் கீழே போய் வெடிக்கும்படி சிறிய வெடிகுண்டுகளைப் போட்டு வெடிக்கச் செய்து அதன் மூலமாக எண்ணெய் பூமிக்கு மேலே வருவதற்கு வழி செய்கின்றனர். அப்படிப் பல முறை சோதனை செய்து எண்ணெய் இருப்பதைக் கண்டு பிடிக்கின்றனர். சில சமயங்களில் இந்த வெடிகுண்டு சோதனை செய்யாமலும் கண்டு பிடித்து விடுகின்றனர்.

மற்றத் தொழில் துறையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எண்ணெய் உற்பத்தி ஒரு சுலபமான தொழிலாகச் சிலருக்குத் தோன்றும். ஆனால் லாபம் தரும்படி எண்ணெய் உற்பத்தி செய்வதற்கு முன் அதில் ஈடுபட்டிருப்பவர்கள் படும் கஷ்டத்தையும் அதற்காக அவர்கள் செலவழிக்கும் தொகையையும் நினைத்துப் பார்த்தாலே பயங்கரமாக இருக்கிறது. வெனிஸுலா என்னும் இடத்தில் ஒரு எண்ணெய்க் கம்பெனி பத்து ஆண்டுகளில் பன்னிரண்டு கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறது. பத்து ஆண்டுகள் எந்தவிதமான வருமானத்தையும் எதிர்பாராமல் பன்னிரண்டு கோடி ரூபாய் செலவு செய்திருக்கும் அந்தக் கம்பெனி அதிபர்களின் விடா முயற்சியையும், ஊக்கத்தையும், தைரியத்தையும், திறமையையும் நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தால் கூட தலை 'கிர்' ரென்று சுழலத்தான் செய்கிறது.

ஆயிரம் ஆயிரம் ஆயிரம் அடிகளாகப் பூமிக்கு அடியில் சென்று எண்ணெய்க் கிணற்றைக் கண்டு பிடித்து விடுகிறார்கள். அந்த எண்ணெய் ஒரே குழம்பாக இருக்கும். சுத்தமாக இருக்காது. அதில் தண்ணீர், மணல், ஜலவாயு, கரி, கந்தகம் போன்ற கலவைகளும் மற்றும் பலவிதமான அழுக்குகளும் சேர்ந்தே இருக்கும். இந்தப் பண்படாத எண்ணெயை அதாவது 'குரூடாயிலை'ச் சுத்தப் படுத்த வேண்டும். சுத்தப்படுத்தி, பல ரகமான எண்ணெய்களாகப் பிரிக்க வேண்டும். அவ்வாறு பிரித்து எடுத்த எண்ணெய்களைத்தான் நாம் உபயோகிக்க முடியும். அதற்குப் பண்படா எண்ணெயை முதலில் எண்ணெய் சுத்தம் செய்யும் ஆலைகளுக்கு அனுப்பிச் சுத்தம் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும்.

## 6. எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள்

பூமியில் இருந்து எடுக்கப்பட்ட பண்படாத எண்ணெயிலிருந்து பல ரகமான எண்ணெய்களைச் சுத்தம் செய்து பிரித்து எடுப்பதே எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையின் வேலை. காஸோலின் எண்ணெய், மண்ணெண்ணெய், டீஸல் எண்ணெய் முதலிய பல ரகமான எண்ணெய்களைப் பண்படா எண்ணெயிலிருந்து பிரித்து எடுத்த பிறகு, அதில் எஞ்சியிருக்கும் பகுதியிலிருந்து பியூயல் எண்ணெய் நிலக்கீல் முதலியவைகள் எடுக்கப்படுகின்றன.

பண்படா எண்ணெயில் இருந்து எவ்வாறு நம் உபயோகத்துக்கு வேண்டிய பல ரக எண்ணெய்களைப் பிரித்தெடுக்கின்றனர்!

எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையில் உயரமான ஒரு குழாய் அமைத்திருக்கிறார்கள். இந்தக் குழாயின் உள்ளே ஒன்றின் மேல் ஒன்றாகப் பல தட்டுகள் வைத்து அறை அறையாகப் பிரித்து வைத்திருக்கின்றனர். கீழ் அறையில் இருந்து மேல் அறைக்குப் போவதற்கு வசதியாக மேல் நோக்கித் திறக்கும் கதவுகள் ஒவ்வொரு அறையிலும் இருக்கின்றன. இந்த அறைகள் ஒவ்வொன்றும் ஒரு தனிப்பட்ட கொதி நிலையையுடையது. ஒவ்வொரு அறையும் அதன் கீழ் இருக்கும் அறைகளைவிட அதிகக் குளிர்ச்சியுடையது. இந்த மாதிரி நவீன விஞ்ஞான முறையில் அமைக்கப்பட்ட குழாய்க்கு அடியில் முதலில் பண்படா எண்ணெயைச் செலுத்துகிறார்கள். அந்தப் பண்படா எண்ணெயில் சூடு ஏற்றப்படுகிறது.

எண்ணெயில் சூடு ஏற ஏறத் தண்ணீர் ஆவியாக மாறுவது போல பண்படா எண்ணெயும் ஆவியாக மாறுகிறது. அந்த ஆவி மேற்படி குழாயில் மேல் நோக்கிச் செல்ல முயலுகிறது. அவ்வாறு முயலும்போது அங்குள்ள மேல் நோக்கித் திறக்கும் கதவைத் திறந்து கொண்டு மேலே செல்லுகிறது. அப்படி மேலே மேலே ஆவிகள் சென்று கொண்டே இருக்கின்றன. அப்படிச் செல்லும்போது மேற்படி குழாயில் ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் அத்தனை அறைகளிலும் ஆவி நிறைந்து, அந்த அந்த அறையின் கொதி நிலைக்கு ஏற்றபடி திரவமாக மாறுகிறது. அப்படி மாறும் திரவம் அந்தந்த அறையிலிருந்து உடனுக்குடன் வெளி வருவதற்கு வசதியாகச் சில விசேஷ குழாய்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன.

இப்படிப் பல்வேறு அறைகளில் இருந்து வெளிவரும் திரவம் அந்தந்தக் கொதி நிலையின் தன்மைக்கு ஏற்றபடி பெட்ரோலாகவும், மண்ணெண்ணெய் ஆகவும், டீஸல் எண்ணெயாகவும், பர்னல் எண்ணெயாகவும் மாறி விடுகின்றன. இதுபோலத்தான் பண்படா எண்ணெயை எந்தவித ரஸாயன மாறுதலும் இல்லாமல் பல தரப்பட்ட எண்ணெய்களாக முதலில் பிரித்து எடுக்கின்றனர்.

ஆனால் இப்படிப் பிரித்து எடுத்ததுடன் ஆலை சுத்திகரிப்பு வேலை முடிவடைந்து விடவில்லை. மேற்கண்ட முறையில் எந்தவிதமான ரஸாயன மாறுதலும் இல்லாமல் பெட்ரோலைப் பிரித்து எடுத்து உபயோகித்தால் உலகத்துக்கு வேண்டிய பெட்ரோலின் தேவைகளைப் பூர்த்தி செய்துவிட முடியாது. இந்த முறையில் பிரித்தெடுக்கும் பெட்ரோல் உலகத் தேவையில் நூறில் ஒரு பங்கைத்தான் பூர்த்தி செய்யும். பின் உலகத்தின் பெட்ரோல் தேவை முழுவதையும் எப்படித்தான் பூர்த்தி செய்கிறார்கள்!

பெட்ரோலியம் தொழில் துறையில் உள்ள விஞ்ஞானிகள் அதற்குரிய அதிசயமான வழி ஒன்றைக் கண்டு பிடித்து வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள். பண்படா எண்ணெயில் மீதி உள்ள கன ரக எண்ணெய்களையும் இவர்கள் பெட்ரோலாக மாற்றி விடுகின்றனர். இதற்கு இவர்கள் கையாளும் விஞ்ஞான வித்தைக்குப் 'பிளப்பு முறை' என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள்.

பிளப்பு முறையா! இது என்ன அதிசயமாக இருக்கிறதே! திரவ பதார்த்தத்தைப் பிளப்பதா! அதைப் பிளக்க முடியுமா!

ஆம்! திரவ பதார்த்தத்தைப் பிளக்க முடியும். பெட்ரோலியம் விஞ்ஞானிகள் அப்படித்தான் கன ரக எண்ணெய்களைப் பல ரஸாயன முறைகளை உபயோகப்படுத்தி அதிசயமான விஞ்ஞான வித்தையின் மூலமாக அவைகளைப் பிளந்து இலேசான எண்ணெயாக மாற்றிப் பெட்ரோல் எண்ணெயாகச் செய்து வருகின்றனர். விஞ்ஞானிகள் அந்த விஞ்ஞான வித்தையை எப்படிச் செய்கின்றனர்! (தொடரும்)

## டி. கே. சி. யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்
1—8—45

பெரியாழ்வார் ஒரு மனுஷக் குழந்தையைப் பற்றிப் பாட்டு எழுதியிருக்கிறார்.

நேர்முகமாக அனுபவரீதியாக எழுதிய பாடல்களின் நயத்தையே காண முடியவில்லை. வானத்தை யெல்லாம் சுற்றிச் சுழன்று வரும் தாயுள்ளம் அடங்கிய கவியையா காணப் போகிறார்கள்.

"The Poets eye in a fine frenzy rolling
Doth glance from heaven to earth
And from earth to heaven"

என்று ஷேக்ஸ்பியரையும் வேறு 'கோட்' செய்து கொள்ளுவார்கள். "ரங்கநாதா! ரங்கநாதா! ரங்கநாதா!" என்று ஸ்ரீரங்கத்துக் கிளிப் பிள்ளை சொல்லும் கணக்குத்தான். இவர்களை யெல்லாம் கொஞ்சம் மறந்துவிட்டு, பெரியாழ்வார் சொல்லுவதற்குக் காது கொடுப்போம்.

தொட்டிலுக்குப் பொன்னால் விளிம்பு கட்டி, இடையிடையே மாணிக்கமும் வைரமும் வைத்து அழுத்தி இருக்கிறதாம்.

மாணிக்கம் கட்டி
வயிரம் இடைகட்டி

ஆணிப் பொன்னால் செய்த
வண்ணச் சிறுதொட்டில்

பேணி உனக்குப்
பிரமன் விடுதந்தான்

மாணிக் குறளனே!
தாலேலோ!

வையம் அளந்தானே!
தாலேலோ!

இங்ஙனம்
டி. கே. சிதம்பரநாதன்

# ‘வெயிற்காலத்து வயிற்றுக் கோளாறுகளை’ தளதளக்கும் பானம் நிறுத்துகிறது



வெயில் காலத்தில் உங்கள் வயிறு மிகச் சுலபமாகக் கெட்டுவிடுகின்றது. உங்கள் வாயில் ஒரு வித துர்க்கந்தம் ஏற்படுகிறது. தவிர நீங்கள் தளர்ச்சியாயும், சோம்பலுடனும் இருக்கின்றீர்கள். ஈனோ உங்கள் வயிற்றை சீராக்கி உங்கள் தேகநிலையை நேர்செய்து அதை ஆரோக்கியமாயும், சுறுசுறுப்பாயுமாக்குகின்றது.

ஈனோ எளிமையானது எனினும் வயிற்றில் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், நெஞ்செரிச்சல், வாயுப்பொருமல் முதலிய உபாதைகளை துரிதமாயும், நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது. எட்டே செகண்டுகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்— வயிற்றுக்கு மட்டுமல்ல, வாய்க்குக்கூட!

மிதம் மீறி புசிப்பதாலோ அல்லது உண்பது உங்கள் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாமலிருந்தாலோ ஈனோவின் விசேஷசக்தி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த உதவுகிறது. உங்களுக்கு லேசாய் பேதியாக விரும்பினால் காலி வயிற்றில் கொஞ்சம் பெரிய ‘டோஸ்’ உட்கொள்ளவும். எப்பொழுதும் ஈனோஸ் ‘ப்ரூட் ஸால்ட்’டை கையிருப்பில் வைத்துக் கொள்ளவும்.

## அது உங்களுக்கு குணம் செய்வதுடன் குளுமையையும் புத்துணர்ச்சியையும் தருகிறது

# ஈனோஸ் ‘ப்ரூட் ஸால்ட்’




பெரிய புட்டி ரூ. 3/12
சிறிய புட்டி ரூ. 2/6
உள்ளூர் வரிகள் பிரத்யேகம்

‘ஈனோ’ மற்றும் ‘ப்ரூட் ஸால்ட்’ என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகளாகும்

ENO. 1508 (Tam)

# ரவி சந்திரிகா

சோமு



## 11. விழிப்பும் திகைப்பும்!

புகழ் பெற்ற ஆங்கில நாடகாசிரியர் பெர்னார்ட் ஷா, டாக்டர் என்று 'போர்ட்' போட்டுக் கொண்டிருப்பவர்களுக்கெல்லாம் ஒரு கண்டிப்பான யோசனையை வற்புறுத்தினார். எங்கெங்கோ சென்று படித்து ஏதேதோ பட்டங்கள் பெற்று வந்து அவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் தங்களுடைய பெயருக்குப் பின்னால் எழுதிப் பல கையிலே தொங்க விடுகிற டாக்டர்கள், மகாஜனங்களின் நன்மைக்காக ஒரு முக்கிய அறிவிப்பையும் அந்தப் பட்டங்களோடு சேர்த்து எழுதிப் போட்டு விட வேண்டுமாம் — "டாக்டர்களாகிய நாங்களும் உங்களை யெல்லாம் போல் ஒருநாள் மடியக் கூடிய மனிதர்கள் தான்!" என்று!

திருச்சி ஜில்லா உதவி வைத்திய அதிகாரி டாக்டர் சுரேஷ், வைத்தியப் பரீட்சைகளில் தேறி விட்டு முதன் முதல் டாக்டராகத்



தமது வாழ்க்கையை ஆரம்பித்த புதிதில், பெர்னார்ட்ஷாவின் இந்த யோசனையைப் பற்றிக் கேள்விப் பட்டு ஏளனத்தோடு சிரித்தார். "இந்த ஷாவுக்குத்தான் எத்தனை அர்த்தமற்ற ஒரு விஷமம்!" என்று எண்ணினார் டாக்டர்சுரேஷ். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல அவருக்கு பெர்னார்ட்ஷாவின் வார்த்தைகளிலே இருந்த நுட்பமான உண்மை துலங்க ஆரம்பித்தது.

இந்த மனித உலகம் நோயின் கொடுமையிலும் நோயாளிகளிடத்திலே உள்ள அநுதாபத்திலும் எப்படியெல்லாம் நடந்து கொள்ளுகிறது! சில சமயங்களில் டாக்டர்களை யமனுக்கு நமன் என்றும் மரணத்தையேவென்றுகின்ற மகான்கள் என்றும் எண்ணி முறையிடுவதைப் பார்க்கும்போது டாக்டர்சுரேஷ், ஷாவை எண்ணி மனத்துக்குள்ளே சிரித்துக் கொள்ளுவார். ஏதோ ஜனனமும் மரணமும் தன்னுடைய கையிலேயே அடங்கிவிட்டதைப் போலவே நினைத்து நோயாளிகள் பேசுவதைப் பார்க்கும்போது, சிரிப்போடு ஒரு விவரிக்க முடியாத இரக்கமும் சுரேஷுக்கு உண்டாகும். 'மரணமும் ஜனனமும் தன்னுடைய கையிலேயே அடங்கிவிடக் கூடாதா, இந்தநோயாளிகள் இத்தனை கஷ்டப்படுகிறார்களே!' என்றெல்லாம் கூட அவர் எண்ணுவதுண்டு. அதுமட்டுமா? தானும் விதியின் வலிமைக்குக் கட்டுப்பட்ட ஒரு மனிதன்தான் என்பதை நோயாளிகளிடம் எப்படிக் காட்டிக்

கொள்ளுவது? அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுவதற்காக, விதியையே மாற்றி விடக் கூடிய ஒரு அதிசய வித்தை தன் கையில் இருப்பதாக அல்லவோ பாசாங்கு செய்ய வேண்டியதிருக்கிறது!

இன்னொரு கஷ்டமான அநுபவமும் டாக்டர் சுரேஷுக்கு அடிக்கடி ஏற்படுவதுண்டு. ஒரு நோயாளியிடம் எத்தனை அநுதாபம் இருந்தபோதிலும், தான் அந்த நோயாளியின் வேதனையைக் கண்டு எத்தனை இரக்கப்பட்டாலும், உணர்ச்சியின் வசமாகி விடாமல் நிதானத்தோடேயே இருக்க வேண்டியிருக்கிறது. கணவனுக்காகக் கண்ணீர் வடிக்கும் மனைவி, குழந்தையின் உயிர் துடிப்பதைக் கண்டு 'கோ' வென்று கதறும் ஒரு தாய், உயிரினும் இனிய தன் மனைவி மரணத்தோடு போராடுவதைக் கண்டு துடிதுடிக்கிற ஒரு கணவன்–இத்தனை பேருடைய துக்கங்களையும் கண்டு, தான் நெகிழ்ந்துவிடாமல் மனத்திடத்தோடு சிகிச்சையை நடத்த வேண்டும் ஒரு டாக்டர்! அப்பப்பா! எத்தனை கடினமான ஒரு காரியம்!

சுரேஷுக்கு ஆரம்பத்தில் இதெல்லாம் ஒரே வேதனையாகத்தான் இருந்தது. ஆனால் பழகிப் பழகி இப்பொழுது மனம் ஒரு திடத்தை அடைந்து விட்டது. அப்படி யென்றால், கல்லாகி விட்டது என்று அர்த்தமா? இல்லை. உணர்ச்சிகளையெல்லாம் வெளியே காட்டிக் கொண்டு கதறாமல், மௌனமாக சந்தோஷப்படுவதும், கண்ணீர் விடாமல் துக்கப் படுவதும் அந்த மனத்துக்குச் சித்தியாகி விட்டன!



ரவீந்திரன் அவனுடைய அநுபவங்களை அத்தனை வேகத்தோடும் படபடப்போடும் சொன்னானே! சுரேஷ் மௌனமாகத்தானே கேட்டுக் கொண்டு வந்தார். ஆனால் அவருடைய மனமோ?...

டாக்டர் சுரேஷ் ஒரு அறிவாளி. அத்தோடு ஒரு தங்கமான மனிதருங் கூட. அறிவும், நல்ல குணமும் ஒன்று சேர்ந்து அமைந்த அபூர்வ மனிதர்களில் சுரேஷ் ஒருவர். இது காரணமாகவே அத்தனை பரிவோடும் சாமர்த்தியத்தோடும் ரவீந்திரனிடம் பேசி அவனுடைய அந்தரங்கங்களையெல்லாம் அவரால் அறிந்து கொள்ள முடிந்தது. ஆனால் அந்த நிமிஷத்திலிருந்து அவருக்கு நிம்மதி யில்லை! நல்லவனாகவும் திறமைசாலியாகவும் உள்ள ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் விதி என்னென்ன விசித்திர விளையாட்டுக்களையெல்லாம் செய்து பார்க்கிறது என்று எண்ணினார். அதே சமயம் ரவீந்திரனுடைய மன இயல்பை நன்றாக ஆராய்ந்து பார்த்து விட்டதால், இதன் முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் உள் மனத்திலே அவருக்கு ஒரு தீர்மானம் இருந்தது.

இரண்டரை மணிக்குமேல் பங்களாவுக்குள்ளே காரைக் கொண்டு வந்து நிறுத்தி விட்டு, மாடியிலே போய்க் கோட்டையும் சட்டையையும் கழற்றும்போதே, அந்தத் தீர்மானம் அவருடைய உள் மனத்தில் ஸ்திரமாக ஏற்பட்டு விட்டது.

டாக்டருடைய பங்களாவில் பெண்டுகள் யாரும் இல்லை. அவருடைய மனைவி பிரசவத்துக்காகத் தகப்பனார் வீட்டுக்குப் போயிருந்தாள். "அநேகமாக டாக்டர்களின் மனைவிகளே இப்படித்தான்! கணவர்களை அவர்களுக்கு நன்றாகத் தெரியும். பிரசவத்துக்குத் தாயார் வீட்டுக்குப் போய் விடுவார்கள்!" என்று சுரேஷ் வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு! இப்பொழுது அவருக்கு அந்த ஏகாந்தமான வீடு எப்படியோ இருந்தது. நாலு வார்த்தை யாரிடமாவது பேச வேண்டும் போல இருந்தது அவருக்கு!

பங்களாக் காவற்காரனைக் கூப்பிட்டுக் கதவுகளைச் சாத்தும்படி சொல்லிவிட்டு, சாய்வு நாற்காலியிலே வந்து சாய்ந்தவாறு ரவீந்திரனையும் சந்திரிகாவையும் கல்யாணியையும் பற்றி எண்ணிக் கொண்டே நெற்றியைப் பிசைந்தார் சுரேஷ்!

'மனைவியினிடத்தில் உண்மையான அன்பு உள்ள ஒரு நல்ல கணவன் ரவீந்திரன். அதே சமயம் சந்திரிகாவிடம் எல்லையற்ற பாசம் அவனுக்கு இருக்கிறது. இதன் முடிவு என்ன ஆகும்?'—டாக்டர் யோசித்தார்: 'முடிவு என்ன ஆகும் என்பதில் என்ன சந்தேகம்? சந்திரிகா நான் நினைக்கிற மாதிரி மன இயல்பு உள்ளவளாக இருந்தால், நிச்சயம் என்னுடைய முடிவு சரியாகத்தான் இருக்கும். சந்தேகமேயில்லை. ஆனால் சந்திரிகா எப்படிப்பட்ட பெண்ணோ? ரவீந்திரன் சொன்ன வார்த்தைகளை வைத்துத்தானே அவளைப்பற்றி நமக்கு இப்பொழுது தெரிகிறது. வாஸ்தவமாகவே அவள் அத்தனை நல்லவளா?'-இப்படியெல்லாம் யோசனைகளைப் பலமாக ஓடவிட்டுக் கொண்டிருந்த சுரேஷ், அப்படியே சாய்வு நாற்காலியிலிருந்து பதறிப் போய் எழுந்தார்!

# நான்தான் டீ

உங்கள் வாழ்க்கையில்
பங்கு கொள்ளும் என் வாழ்க்கை
வரலாற்றைச் சொல்லுகிறேன் . . .

என்னைத் தெரியும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் வெகு நன்றாகத் தெரியுமா! கறுப்பு அல்லது செம்பொன் நிறங்களில் மெல்லிய தூளாகவோ அல்லது சுருங்கிய இலை யாகவோ என்னை உங்களில் பலர் பார்த்திருப்பீர்கள். ஆனால் ஒரு காற்றுப் படுகையில் சின்னஞ்சிறு விதையாக என் வாழ்க்கை யைத் தொடங்குகிறேன் என்பதும், பின்னர் பிரதான தோட்டத் தில் பதித்து நடப் படுகிறேன் என்பதும் உங்களுக்குத் தெரியுமா?

எனக்கு மேலே வானம், சுற்றிலும் ஏக்கர் ஏக்கராகத் தேயிலைத் தோட்டம். அஸ்ஸாம், மேற்கு வங்காளம், பீஹார், காங்ரா, நீலகிரி, ஆனைமலை ஆகிய இடங்களில் ஆறாயிரத்துக்கு மேற்பட்ட தேயிலைத்தோட்டங்கள் இருக்கின்றன. இவற்றின் பரப்பு சுமார் 8,00,000 ஏக்கர்-டில்லிராஜ்யத்தைப்போல் இருமடங்கானது.

மாதக்கணக்காக நான் திறந்தவெளியில் வாழ்கிறேன். பின்னர் என்னைக் கத்தரித்துவிட்டு, இலைகள் அடர்ந்த செடியாக வளரவிடுகிறார்கள். பிறகு இலைபறிக்கும்காலம் வருகிறது. பெண்களின் கனிவான விரல்கள் இரு இலைகளையும் ஒரு மொட்டையும் சேர்த்துப் பறிக்கின்றன. எனக்கு பெருமை தாங்கமுடியவில்லை- ஏனெனில் உலகத்தின் தேயிலைத் தேவையில் பாதியைப் பூர்த்தி செய்வதற்காக நான் பரந்தஉலகில் பிரயாணத்தைஇப்போது தொடங்குகிறேன். கம்பிக்கயிறுகள், லாரி, வண்டி மூலமும் அல்லது ஆட்களின் தலையிலும் இலை உருவில் உள்ளநான் பாக்டரிக்குக் கொண்டுபோகப் படுகிறேன். பாக்டரியில பலவிதங்களில் பதப் படுத்தி எனது பச்சை நிறத்தைக் கருப்பாக மாற்றுகிறார்கள். நறுமணமும் அலாதி. இன்சுவையும் பெறும்நான் லட்சோபலட்சம் இல்லங்களில் வாழ்வின் பிரதான இன்பங்களில் ஒன்றாகப் பரிமாறப் படுவதற்குத் தயாராகிவிட்டேன்.

**நான்தான் டீ** – லட்சோபலட்சம் பேரின் பானம்.





## சிதம்பரம் ஸ்ரீமந் நடராஜமூர்த்தி திருக்கோயில் திருப்பணி

# மஹா கும்பாபிஷேகம்

**மன்மத வருஷம் ஆனிமீ 23உ (7-7-55) வியாழக்கிழமை**

○●○

**"திருச்சிற்றம்பலம்"** **"திருச்சித்திரகூடம்"** ஆக சிவ - விஷ்ணு மூர்த்தங்களின் பொது உறைவிடமாகத் திகழும் **தில்லை திருக்கோயிலில்** பழுதடைந்த பல்வேறு முக்கியமான பாகங்களைப் புதுப்பித்து **திருப்பணி** வேலைகள் நடைபெற்று வருகின்றன. இப் பூலோக கைலாயத்தில் எழுந்தருளி யிருக்கும் "உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்" ஆகிய **ஸ்ரீமந் நடராஜமூர்த்திக்கு** நாளது ஆனி மாதம் 23-ம் தேதி (7–7-55) வியாழக்கிழமை **சம்புரோக்ஷணை - மகா கும்பாபிஷேகம்** நடைபெற விருக்கிறது. மேற்படி தேதிக்குள்ளாக **திருப்பணி** வேலைகளை முடிப்பதற்கு ஏராளமான பொருள் தேவையாக இருக்கிறது. ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு **சித்சபையில்** திருநடனம் புரியும் **ஸ்ரீமந் ஆனந்தத் தாண்டவ மூர்த்திக்கு** நடைபெற்று வரும் தெய்வப் பணியில் சிவநேசச் செல்வர்களும் ஆஸ்திகப் பொது மக்களும் மனமுவந்து பெரும் பங்கெடுத்துக் கொண்டு, **"சத் கைங்கரியம்"** திட்டப்படி சிறப்புற நடைபெறச் செய்ய வேணுமாய்க் கோருகிறோம். மேற்படி தெய்வப்பணிக்கான நன்கொடைகளை "ஸ்ரீ சபாநாயகர் கோயில் திருப்பணி மகா கும்பாபிஷேகக் கமிட்டி, சிதம்பரம்" என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்.

சிதம்பரம்
15 - 5 - 1955

**திருப்பணி மகா கும்பாபிஷேக கமிட்டியார்**

"டாக்டர், டாக்டர்" என்று கூப்பிட்டுக்கொண்டே பங்களாக் கதவைத் தட்டியது யார்? அந்தக் குரல் ரவீந்திரனதல்லவா? ஆமாம், அதில் சந்தேகமில்லை, ரவீந்திரனேதான்!

'இப்பொழுதுதானே கொண்டு போய் வீட்டிலே விட்டு விட்டு வந்தோம். அதற்குள் இங்கே எப்படிப் பறந்து வந்து விட்டான்!' என்று அதிசயித்துக் கொண்டே எழுந்தார் சுரேஷ். காவற்காரன் போய் ஏதாவது இசைவு கேடாகப் பேசி ரவீந்திரனை வெளியே அனுப்பி விடுவதற்கு முன்பு, தானே போய்விட வேண்டும் என்ற அவசரத்தில் அப்படியே வேகமாகப் படிகளிலே இறங்கி வாசலுக்கு ஓடி வந்தார் சுரேஷ்.

"ரவீந்திரனா?" — இவ்வாறு கேட்டுக் கொண்டே பங்களாவின் கதவைத் திறந்தார் டாக்டர்.

"அதற்குள் இங்கே எப்படி வந்து முளைத்தீர்கள்—நடந்துதானே வருகிறீர்கள்?"

"எப்படி வந்தேனோ எனக்கே தெரியாது டாக்டர்!" என்றான் ரவீந்திரன். அவனுக்கு மூச்சு படபடப்பாக வந்து கொண்டிருந்தது.



ஒரு நிமிஷத்தில் டாக்டர் யூகித்து விட்டார், ஏதோ எதிர்பாராத விபரீதம் நடந்திருக்கிறது என்று.

"யாருக்கும் உடம்பு ஒன்றுமில்லையே!" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை ரவீந்திரன். ஒரு நிமிஷம் அவனுடைய கண் கலங்கியது; அப்படியே முகம் எல்லாம் உருகி ஓடியது.

"டாக்டர்!" என்று ஒரு குழந்தை தகப்பனைக் கூப்பிடுவதைப் போலக் கூப்பிட்டுக் கொண்டே, அவருடைய மேலே சாய்ந்தான் ரவீந்திரன். வார்த்தை வரவில்லை. 'பொல பொல' என்று கண்ணீர் கொட்டியது. பாவம், தேம்பித் தேம்பி அழுதான் ரவீந்திரன்.

எந்த நிலைமையிலும் உணர்ச்சியை அடக்கிக் கொள்ளப் பழகிக் கொண்டவர் அல்லவா சுரேஷ். அப்படியே கைத்தாங்கலாக ரவீந்திரனைப் பிடித்துக் கொண்டே பங்களாவுக்குள்ளே அழைத்துப் போனார் அவர்!

* * *

**வா**சற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. 'சந்திரிகா' என்று அழைக்கும் குரலும் கேட்டது. ராமநாதன் ஒரு கணம் நிதானித்தான்.

"இது அவர்தான்!" என்றாள் சந்திரிகா. அதற்குள் ராமநாதன் சொன்னான்: "இன்னொரு குரல் வரட்டும் அம்மா! ஒரு வேளை நாகரத்தினம் ஏதாவது விஷமம் செய்தாலும் செய்யக் கூடும்!"

"நாகரத்தினமா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் சந்திரிகா. "ஆமாம்" என்று சொல்லிக் கொண்டே ராமநாதன் தன் வீட்டுத் திண்ணையிலே நாகரத்தினம் பதுங்கியதைச் சொல்லி முடிப்பதற்குள் கதவு தட்டும் ஓசை நின்று விட்டது.

"அம்மா! நீங்கள் அறைக் கதவைச் சாத்திக் கொள்ளுங்கள். என்ன வம்பு தான் நடக்கிறது, பார்த்து வந்து விடுகிறேன்!" என்றான் ராமநாதன்.

"அப்படியானால், நீங்கள் போகாதீர்கள். உதவி செய்ய வந்தவர் நீங்கள். என்னால் உங்களுக்கும் ........."

ராமநாதன் அந்த வார்த்தைகளுக்குச் செவி கொடுக்கவில்லை. சந்திரிகா அவனைக் கை யெடுத்துக் கும்பிட்டாள்.

"ஐயோ! எனக்குப் பயமாக இருக்கிறதே!" என்று பதறினாள் அவள்.

அவளைத் தைரியப்படுத்தி விட்டு ராமநாதன் மாடிப் படிகளில் இறங்கி வர ஐந்து நிமிஷம் ஆயிற்று. வந்து கதவைத் திறந்தால், ஆளையும் காணோம், தேளையும் காணோம்! விபரீத விஷம் ஏறிப்போன ரவீந்திரன் தான் அங்கிருந்து மறைந்து விட்டானே!

இதற்குள் கையும் காலும் பதறிக் கொண்டே ஒரு அசட்டுத் தைரியத்தில் சந்திரிகாவும் படிகளில் இறங்கிக் கீழே வந்து விட்டாள்!

"யாரையும் காணோமே!" என்றான் ராமநாதன்.

"குரல் அவரைப்போலவே இருந்ததே!" என்றாள் சந்திரிகா ஒரே வியப்போடு!

"அம்மா! மாரீசன் என்ற பிறவி இந்தக் காலத்திலும் நம்மிடையே இருக்கிறது. இந்த நாகரத்தினம் மான் வேஷம் கூட எடுக்கக் கூடியவன், அம்மா!" என்றான் ராமநாதன்.

சந்திரிகாவுக்கு உடம்பெல்லாம் பனிக்கட்டியாக ஜில்லிட்டது.

"அம்மா! நீங்கள் கொஞ்சம் தைரியமாக இருங்கள்! கதவைத் தாளிட்டுக்



கொண்டு கீழேயே இருங்கள். மாடியில் என்றால் பயப்படுவீர்கள். நான் பத்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன். உங்களோடு தனியாக இருப்பது ஆபத்து" என்றான் ராமநாதன்.

"அப்படி யென்றால்?"

"நீங்கள் கதவைப் பூட்டிக் கொண்டு பத்து நிமிஷம் இருங்கள். நான் அதற்குள் அப்புலிங்கம் வீட்டு வரை போய் வந்து விடுகிறேன்" என்றான் ராமநாதன்.

"அப்புலிங்கம் வீட்டுக்கா? இந்த வேளையிலா போகிறீர்கள்?"

"ஆமாம். அங்கே டெலிபோன் இருக்கிறது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் செய்ய வேண்டும்!"

"ஐயோ! எனக்கு எப்படியோ இருக்கிறதே. தெய்வமே! இதெல்லாம் என்ன கொடுமை! நான் ஒருத்தி இவ்வுலகில் எதற்காகப் பிறந்தேன்!"

சந்திரிகா ஏதேதோ புலம்புவதற்கு ஆரம்பித்து விட்டாள்.

ராமநாதனுக்கு என்ன சொல்லுவதென்றே புரியவில்லை.

"அம்மா! இந்த மாதிரி அனுபவம் எனக்குமே புதிதுதான். என் புத்தியும் குழம்புகிறது. ஆனாலும் நீங்கள் ஒரு அபலை. பதறி நடுங்குகிற பெண் பிறவி. இந்த நிலைமையில் உங்களை விடத் தைரியமாக இருந்து ஆகக் கூடியதைச் செய்ய வேண்டியதுதான் என்னுடைய கடமை. மனசைத் தளர விடாதீர்கள். எங்கள் தாயுமானவர் தெரு அப்படியொன்றும் கேட்பாரற்றுப் போய்விடவில்லை. கூச்சல் போட்டுக் கூட்டம் சேர்க்க வேண்டாமே என்று நினைத்தேன். அவ்வளவுதான். நீங்கள் ஒரு பத்து நிமிஷம் தைரியமாக வீட்டுக்குள்ளே இருங்கள். நான் இதோ வந்து விடுகிறேன்."



இவ்வாறு கூறிச் சந்திரிகாவை வீட்டினுள்ளே கதவைத் தாளிட்டுக் கொள்ளும்படி சொல்லி விட்டு, வேகமாக அப்புலிங்கத்தின் வீட்டை நோக்கி நடந்தான் ராமநாதன்.

அன்றிரவு எல்லாருக்குமே சிவராத்திரி தான் போலிருக்கிறது: அப்புலிங்கம் அப்பொழுதுதான் அப்பாவையும் அம்மாவையும் ஆஸ்பத்திரியிலேயே தூங்கச் செய்து விட்டு, வீடு திரும்பியிருக்கிறான். எனவே ராமநாதன் போய்க் கதவை இரண்டு தடவை தட்டுவதற்குள் அவனே வந்து திறந்தான்.

"என்னடாப்பா, இது! இந்த நேரத்திலே நீ வந்து நிற்கிறாய்?" என்று திகைப்புடன் கேட்டான் அப்புலிங்கம்.

"கதை பேசுவதற்கெல்லாம் இது சமயம் இல்லை. ரவீந்திரன் வீட்டில் சந்திரிகா தனியாக இருக்கிறாள்—"

"சந்திரிகாவா? நீ எங்கே அங்கு போய்ச் சேர்ந்தாய்?" என்று கேட்டான் அப்புலிங்கம். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது!

"அதெல்லாம் விவரமாகப் பேசலாம். இப்பொழுது அவசரமாக டெலிபோன் செய்ய வேண்டும்!"

"யாருக்கு?"

"போலீஸ் ஸ்டேஷனுக்கு. ரவீந்திரன் வீட்டில் திருடன்!"

"திருடனா? பிடித்து விட்டாயா அவனை?"

ராமநாதனுக்கு ஆத்திரம் வந்தது. அப்புலிங்கம் சொன்னான்: "ராமநாதா, என்னிடம் சுருக்கமாக விஷயத்தைச் சொல்லு. இந்த நேரத்தில் போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் செய்து, என்ன காரியத்தைச் சாதிக்க முடியும்?"

வேறு யாராவது அப்படிச் சொல்லியிருந்தால் ராமநாதனுக்கு அசாத்தியமாகக் கோபம் வந்திருக்கும். ஆனால் அப்புலிங்கத்தின் உண்மையான இதயம் ராமநாதனுக்குத் தெரியுமாதலால், ஒரு நிமிஷம் யோசித்தான்.

"சந்திரிகா தனியாக இருக்கிறாள் என்று கவலையோடு சொன்னாயே! நேரத்தை வீணாக்காதே. விஷயத்தைச் சொல்லு. ஆகவேண்டியதை உடனே கவனிப்போம்!" என்றான் அப்புலிங்கம்.

அவன் பேச ஆரம்பித்த இரண்டாவது நிமிஷத்திலேயே டெலிபோன் யோசனையைக் கைவிட்டான் ராமநாதன்.

"தம்பி! திருடனைப் பிடித்து வைத்துக்

கொண்டு அதற்கு மேல் செய்ய வேண்டிய காரியமப்பா, நீ சொல்லுவது! போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் கொடுக்கிற காரியத்தை என்னிடம் விட்டுவிடு. எனக்குத் தெரியும். முதலில் திருடனைப் பிடிப்போம்!'' என்றான் அப்புலிங்கம்.

''இதென்ன வேடிக்கை நீ சொல்லுவது?'' என்றான் ராமநாதன்.

''தம்பீ! திருடனை அப்படியே கொண்டு வரச் செய்கிறேன் பார். கிளம்பு!'' என்றான் அப்புலிங்கம்.

ஒன்றும் புரியாமல் ராமநாதன் 'திரு திரு' என்று விழித்துக் கொண்டிருக்கும் போதே, அப்புலிங்கம் தன் வீட்டுத் தோட்டக்காரனைக் கூப்பிட்டுக் கதவை நன்றாகப் பூட்டிச் சாவியைக் கையிலே எடுத்துக் கொண்டு உடனே தன்னோடு புறப்படும்படி கட்டளையிட்டான்.

'கிளம்பு ராமநாதா! முதலில் ரவீந்திரன் வீட்டுக்குப் போவோம்!'' என்றான் அப்புலிங்கம்.

ராமநாதனுக்கு வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. அப்படியே அப்புலிங்கத்தின் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்தான்.

தோட்டக்காரன் பின் தொடர அப்புலிங்கமும் ராமநாதனும் அந்த விசிவேளையில் ரவீந்திரன் வீட்டை நோக்கி வேகமாக நடந்தார்கள்.



''என்னதான் யோசனை? சொல்லேன்!'' என்றான் ராமநாதன், மௌனமாக நடந்த அப்புலிங்கத்தைப் பார்த்து.

''தம்பீ! உனக்கு உஸ்தாத் பீரானைத் தெரியுமா?'' என்று கேட்டான் அப்பு.

''கேள்விப் பட்டிருக்கிறேன். நேரில் பழக்கமில்லை'' என்றான் ராமநாதன்.

''நமக்கு ரொம்பவும் வேண்டியவர் அவர். இந்தத் திருச்சி வட்டாரத்தில் அவரைத் தப்பி இந்த மாதிரி ஒரு காரியம் நடவாது. போலீஸுக்கே சில சமயங்களில் வழி சொல்லிக் கொடுக்கிறவர் அவர்! பெரிய பெரிய திருட்டுக் கேஸ்களில் போலீஸுக்கே அவர்தான் துப்புத் துலக்க வேண்டும் தெரியுமா?'' என்றான் அப்புலிங்கம்.

''சரி! இப்பொழுது அவரைக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்?''

''அவரைக் கூப்பிட்டு விடுவதற்கெல்லாம் பஞ்சாங்கம் பார்க்கக் கூடாது தம்பீ. இப்படியே ரவீந்திரன் வீட்டுக்குப் போய் நாம் உட்கார்ந்துகொண்டு, நம்முடைய தோட்டக்காரனை அனுப்பினால் உடனே வந்து விடுவார் உஸ்தாத். எங்கே எப்படிக் கன்னம் வைத்திருக்கிறான் என்பதைப் பார்த்ததுமே, அவருக்குக் கன்னம் வைத்த ஆசாமி யார் என்று இனம் தெரிந்து விடும்!'' என்றான் அப்புலிங்கம்.

''இந்த ராத்திரியே அவருக்கு ஆள் அனுப்ப வேண்டுமா?......''

''தம்பீ! ஒரு வினாடி தாமதித்தாலும் போச்சு காரியம்! எதிரி போய் அவரை அணுகுவதற்குள் நம்முடைய ஆள் அவரிடம் போய் விற்க வேண்டும். அவர் காரியம் அப்படி! எல்லாருக்கும் வேண்டியவர் அவர்! புரிந்ததா?'' என்றான் அப்புலிங்கம் அழுத்தந் திருத்தமாக!

ராமநாதனும் அப்புலிங்கமும் வேகமாக நடந்தார்கள். தாயுமானவர் தெருவில் நுழைந்து திரும்பியதுமே, ராமநாதன் சற்று முன்னால் நடந்து சென்று ரவீந்திரன் வீட்டுக் கதவை மெதுவாகத் தட்டினான்.

எப்பொழுது வருவான் ராமநாதன் என்று ஆவலும் பயமும் மேலிட்டவளாக ஏகாந்தமாய் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டே இருந்த சந்திரிகா, வேகமாக வந்து கதவைத் திறந்தாள்.

ராமநாதனும் அப்புலிங்கமும் வீட்டுக்குள்ளே நுழைந்தார்கள். தோட்டக்காரன் அவர்கள் உத்தரவுக்காகக் காத்தவனாக, வெளியே திண்ணையில் நின்றான்.

ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே ராமநாதனும் அப்புலிங்கமும் நுழைந்ததும் சந்திரிகாவுக்குச் சற்று தைரியம் ஏற்பட்டது.

''இவர்தான் அப்புலிங்கம். மூதூர் மிராசுதார்!'' என்றான் ராமநாதன். சந்திரிகா பணிவும் பரிவும் தோன்றக் கை கூப்பி வணங்கினாள்.

''உட்கார் அப்புலிங்கம்'' என்று ஊஞ்சலைக் காட்டினான் ராமநாதன். நாற்காலியிலே அவன் உட்கார்ந்து கொண்டான். சந்திரிகா உள் வீட்டு அறையின் கதவிலே சாய்ந்தவாறு நின்று கொண்டாள்.

அந்தநேரத்தில் வெளியே தெருவில் கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. டாக்டர் சுரேஷும், ரவீந்திரனும் காரிலிருந்து இறங்கி ஒரே திகைப்போடு வீட்டுக்குள்ளே வந்தார்கள். (தொடரும்)

# மழைக் கால சவாரிக்கு

## நம்பிக்கையுள்ளவை

# Firestone

## பயர்ஸ்டோன்

## டயர்கள்




ஈரமான ரஸ்தாக்களினாலும், மழையினால் எதிரே வருவோரை சரிவரப் பார்க்க முடியாமற் போவதாலும் ஏற்படக்கூடிய இடையூறுகளைச் சமாளித்து வெகு அவசரமாகவும் நிச்சயமாகவும் பிரேக் போட்டு வண்டியை நிறுத்த பயர்ஸ்டோன் டயர்களையே நம்புங்கள்.

பயர்ஸ்டோன் டயரின் கவடு அமைப்பை ஒரு தடவை பார்த்தீர்களானால் அது பல திசைகளிலும் வழுக்காமல் இருப்பதற்கு எவ்வளவு சிறந்த பாதுகாப்பாக இருக்கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்.

அவைகள்

## ஸூப்பர்
## கம்-டிப்டு

D-73

# வெட்ட மேஜை

## சினிமா விளம்பரங்களுக்கும் தணிக்கை

மனிதர்கள் அனைவருமே தெய்வீகப் பிறவிகளல்ல. அவர்கள் உலக ஆசாபாசங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் அடிமைப் பட்டவர்களே. மனிதனின் இந்த பலவீனத்தை நன்றாக அறிந்து அதைப் பயன்படுத்திப் பணம் திரட்டத் தொடங்கி விட்டனர் நம் படாதிபதிகள். இதனால் படங்களில் விரசக் காட்சிகளும் கருத்துக்களுமே மேலோங்கி நின்றன. மனிதனின் கீழ்த்தர உணர்ச்சியைத் தூண்டி விடும் விரசமான காட்சிகளைப் படத்தில் சேர்ப்பதே வெற்றிக்கு வழி என எண்ணத் தலைப்பட்டனர் பட முதலாளிகள். ஆனால், இப்போதோ தணிக்கை மேன்மேலும் கடுமையாகிக் கொண்டே வருவதால் இவர்கள் முன்போல் தாங்கள் 'விரும்பியபடி' படமெடுக்க இயலவில்லை. ஆனாலும், நம் படாதிபதிகளுக்கா வழி தெரியாது! தற்போது ஒரு புதிய முறையைக் கண்டு பிடித்து விட்டனர்! படங்களில் எந்தெந்த மாதிரியான காட்சிகள் இருந்தால் தணிக்கை அதிகாரிகள் வெட்டி எறிகின்றனரோ, அவ்வழகிய காட்சிகளைப் பெரிய பெரிய சுவரொட்டிகள், 'பானர்கள்' ஆகியவற்றில் கொண்டு வந்தனர். கதாநாயகி மஞ்சத்தில் சாய்ந்திருப்பதாக ஒரு காட்சி இருக்கும். இக் காட்சிக்கு எவ்வளவு கவர்ச்சி யளிக்க முடியுமோ அவ்வளவும் செய்து விடுவார்கள். முன்பே குறிப்பிட்டுள்ளபடி பலவீன உணர்ச்சியுள்ள மனிதர் கூட்டம் இப்படங்களுக்கு விரைந்தோடுகிறது. ஆனால் அவர்கள் எதிர்பார்த்துச் செல்லும் அந்த 'விளம்பரக் காட்சிகள்' ஒன்றுமே படத்தில் வராது. இது படம் பார்க்கச் சென்றோருக்கு ஏமாற்றமளிக்கும் என்பதைச் சொல்ல வேண்டுமா! ஆனால், தணிக்கை அதிகாரிகள் அவற்றை நீக்கி யிருப்பார்கள் என்று சமாதானம் அடைவார்கள்.

ஆயினும், உண்மை அது அல்ல. விளம்பரத்தில் கண்டு ரசிகர்கள் ஏமாந்த அக் காட்சிகள் உண்மையில் படமாக எடுக்கப் படுவதேயில்லை. பட முதலாளிகளுக்குத் தெரியாதா இப்படிப்பட்ட காட்சிகள் தணிக்கையைத் தாண்டி வர முடியாதென்று! எனவே, மக்களை ஏமாற்றிக் கூட்டம் சேர்க்க, விளம்பரங்களுக்காக எனத் தனியாகச் சில காட்சிகளைத் தயாரிக்கிறார்கள். இம்மாதிரியான நடவடிக்கைகளைத் தடுக்க வேண்டும். எதை நாம் திரைப்படக் கொட்டகையில் பார்க்கக் கூசுகிறோமோ, அதே ஆபாசக் காட்சிகளை வீதிதோறும் சுவர்களில் காண்கிறோமே! ஆகவே, சினிமா விளம்பரக் காட்சிகளும் தணிக்கையின் அங்கீகாரம் பெற வேண்டும் என ஒரு புதிய விதியை அமுல் படுத்துவது அவசியமாகிற தல்லவா!

ஜமால்பூர்
16—6—55 முத்து

## யார் தவறு?

சென்னை மாகாணத்தில் ஒரு மாவட்டத் தலைமைக் கால்நடைக் காரியாலயத்தில் என் மகன் மாத அடிப்படைச் சம்பளம் ரூ. 45-0-0 விகிதத்தில் 1949ம் வருஷம் ஜூன் மாதம் அனுமதிக்கப்பட்டுத் தொடர்ந்து வேலை பார்த்துக் கொண்டு வருகிறான். திடீரென்று 1953ம் வருஷம் டிசம்பர் மாதம் ஒருநாள் சர்க்காரிலிருந்து ஒரு விநோதமான உத்தரவு வந்தது. என் மகனுக்கு ஆரம்பத்தில் மாதச் சம்பளம் ரூபாய் 24 தான் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும், இதுவரை தவறுதலாகக் கொடுக்கப்பட்ட அதிகத் தொகையாகிய ரூ. 492-15-0 ம் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்றும், அதற்காக மாதம் ரூ. 18-0-0 வீதம் இப்போது கொடுக்கப்படும் சம்பளத்திலிருந்து பிடிக்கப்படுமென்றும் உத்தரவு போட்டார்கள். தவறு செய்தவர்கள் யார்! ஏன் செய்தார்கள்! என் மகன் வேலையில் சேரும் போது ரூ. 45-0-0 விகித அடிப்படையில் தானே சேர்க்கப்பட்டான்! ரூ. 24-0-0 மாதச் சம்பளத்துக்கு அவன் இந்த வேலையை ஒப்புக் கொண்டிருப்பானா! இதைவிட அவனுக்கு வேறு உயர்ந்த வேலை கிடைத்திருக்காதா என்றெல்லாம் சர்க்காரில் சிந்தித்துப் பார்க்கத் தயாராக இல்லை போலும்!

எங்கள் குடும்பம் பத்து நபர்களைக் கொண்டது. எங்கள் குடும்பத்தின் காலட்சேபம் என்னுடைய ஒரே மகனின் வருவாயைக் கொண்டுதான் நடந்தாக வேண்டும். இந்தத் திடீர் சம்பளப் பிடிப்பைப் பற்றி மேலதிகாரிகளுக்குக் கருணை மனுக்கள் எழுதி எழுதிக் கைகள் நொந்து போயினவே தவிர, காருண்ய சர்க்காரின் யந்திரத்திலே கருணை தோன்றியதாகவே தெரியவில்லை!

திண்டுக்கல்
16—5—55 துரைசாமி அய்யர்

●

## இரு நன்மைகள்

தமிழில் தந்தி வரவேண்டும் என்ற தங்கள் முயற்சி பெரிதும் வரவேற்கத் தக்கதும், போற்றத் தக்கதுமாகும்.

இம் முறையானது மிகவும் சிறந்தது: இது தமிழ் வளர்ச்சிக்கும், கிராமாந்தரங்களிலே உள்ள மக்கள், தந்தியில் வரும் செய்திகளை உடனே வேறொருவர் உதவியின்றி அறிந்து கொள்வதற்கும் உதவியாக இருக்கும். ஒரு கல்லிலே இரண்டு மாம்பழங்கள் விழுந்தது போல் ஒரே சமயத்தில் இரண்டு நன்மைகள் ஏற்படுகின்றன. ஆகவே இந்தப் புதிய முறையைத் தபால்—தந்தி இலாகா உடனே ஏற்றுக் கொண்டு செயற்படுத்தும் என எண்ணுகிறேன்.

சர்க்கார்பாளையம்
1—6—55 ச. ப. பொன்னுசாமி

# ஹாஸ்யக் களஞ்சியம்














"காலேஜில் இடம் இல்லை. பசங்கள் கூட்டமோ ... என்ன செய்யலாம்? யோசனை தோன்றவில்லை..."
"கன்னார்ப்புடை விட்டுப் பார்க்கலாமா?"




"என்ன, வெல்லாத்தா கிரீம் முகத்தில் தடவிக் கொண்டிருக்கயே! இந்த ஐஸ் கிரீமைத் தடவிக் கொள்ளேன்!"



"பேர் சொல்லிக் கூப்பிட்டால் ஒன்றும் செய்யாது. நாயே, பேயே, என்று கூப்பிட்டால் அதற்கு ரொம்பக் கோபம் வந்து விடும்!"


பிரின்ஸிபல்
"இத்தனை பேர்களும் யார்?"
"இந்தப் பையனைக் காலேஜில் சேர்க்கச் சிபாரிசு செய்ய வந்திருக்கும் பிரமுகர்கள்."


"வக்கீல் ஐயா முண்டாசு கட்டுவதில் மிகவும் சமர்த்தர் பாருங்கள் கட்டை விரல் காயத்தையும் விட்டாரா என்று!"


"டேய்! பூட்ஸை மாத்தி வேறே காலிலே போட்டுக் கொண்டு இருக்கிறயே!"
"வேறே கால் இல்லே அம்மா! அதுவும் என்னுடைய கால் தானே!"


"ஓல் தாட் போர்! உடாதே, பிடிச்சுக்கோ! இவரைப் பிடித்தால் தான் பையனுக்குக் காலேஜில் அட்மிஷன் கிடைக்குமாம்!"





# கள்ளனுக்குக் குள்ளன்

வி.பி. கிருஷ்ணஸ்வாமி

ஒரே ஒரு ஊரிலே ஒரு பாட்டி இருந்தாள். அவள் மிகவும் ஏழை. ஊருக்கு வெளியில் ஒரு குடிசையில் வசித்து வந்தாள். ஒரு எருமை மாடு வைத்துக் கொண்டு அதன் பாலை விற்று ஜீவனம் நடத்தி வந்தாள்.

ஒரு திருடன் இந்த எருமை மாட்டைத் திருடிக் கொண்டு போக வெகு நாட்களாகத் திட்டமிட்டிருந்தான். அதே காட்டில் இருந்த ஒரு புலியும் எருமை மாட்டைத் தின்று விட வேண்டும் என்றிருந்தது. இது பாட்டிக்குத் தெரியும். தினம் விளக்கு வைத்ததும் எருமையைக் கொட்டகையில் கட்டி விட்டு "கள்ளனுக்குக் குள்ளன் இருக்கான், புலிக்குக் கிலி இருக்கு" என்று சொல்லி விட்டு வந்து படுத்துக் கொள்வாள். தினந்தோறும் இப்படி இவள் சொல்லுவதை மறைந்திருந்து தனித் தனியே கேட்ட திருடனும் புலியும் பயந்து போய் விட்டனர்.

ஆனால், ஒரு நாள் திருடனுக்கு ஒன்றும் கிடைக்க வில்லை. என்ன ஆனாலும் சரி, கிழவியின் எருமையைத் திருடி விடுவது எனத் துணிந்து கொட்டகையில் ஒளிந்து கொஞ்சம் வைக்கோலைத் தன்மேல் போர்த்துக் கொண்டிருந்தான். அன்றே, புலியும் பசியின் கொடுமையால் எருமையைத் தின்றுவிடுவது என்று, கொட்டகையில் வந்து ஒரு புறம் ஒளிந்து கொண்டது. விளக்கேற்றும் சமயம் பாட்டி கொட்டகையை எட்டிப் பார்த்தாள். புலியும் கள்ளனும் ஒளிந்திருப்பது தெரிந்தது. வழக்கத்தைவிட உரத்த குரலில் "கள்ளனுக்குக் குள்ளன் இருக்கிறான், புலிக்குக் கிலி இருக்கிறது" என்று கூறி விட்டுத் தன் குடிசைக் கதவைச் சாத்திக் கொண்டாள்.

இருட்டு கவிந்தது. எருமை புல் தின்று கொண்டிருந்தது. திருடன் மெள்ள வெளியில் வந்தான். "அது யாருடா குள்ளனும் குள்ளன்? வரட்டும், ஒரு கை பார்க்கிறேன்!" என்று சொல்லி ஒளிந்திருந்த புலியின் வாலைப் பற்றினான். நன்றாக இருட்டி யிருந்தபடியால் அவனுக்கு ஒன்றுமே தெளிவாகத் தெரியவில்லை. அது எருமை என்று அவன் நினைத்திருந்தான்.

அப்பொழுது புலி 'ஆ, இது கிலி போலிருக்கிறது' என்று நடுநடுங்கி ஓட ஆரம்பித்தது. திருடன் அதை இலேசில் விடவில்லை. எருமை மாடுதான் ஓடுகிறதென்று நினைத்துக் கொண்டு அதன் கழுத்தைப் பலமாகப் பிடித்தான். புலி தப்பித்துக் கொள்ள எண்ணித் திருடனை வாயில் கவ்விக் கொண்டது.

அச்சமயம் எருமை கட்டவிழ்த்துக் கொண்டு புலியின் மேல் பாய, அதன் கொம்புகளில் சிக்குண்டு புலி தவித்தது. எருமை 'ஙொய், ஙொய்' எனக் கத்திக் கொண்டு வெளியே ஓடப் புலியும் திருடனைக் கவ்வியபடி ஓட ஆரம்பித்தது.

கிழவி, 'கடவுளை நம்பினோர் கைவிடப் படார்' என்று சொல்லிக் குடிசையில் இருந்து வெளியே வந்தாள். கிராம ஜனங்கள் இந்த ஆரவாரம் கேட்டு விழித்து எழுந்தனர். புலியின் கோரப் பற்கள் நிறைந்த வாயில் சிக்கியவன் எங்கேயாவது உயிரோடு தப்ப முடியுமா? திருடன் இறந்து விட்டான். கிராம ஜனங்கள் எல்லோருமாகச் சூழ்ந்து கொண்டு புலியைத் தடிகளால் அடித்துக்கொன்று விட்டார்கள். கிழவி தன் எருமையைப் பிடித்து வந்து கொட்டகையில் கட்டி விட்டு நிம்மதியாகத் தூங்கப் போனாள். புலியையும் திருடனையும் ஒரே சமயத்தில் தீர்த்துக் கட்டி விட்ட கிழவியின் புத்தி சாலித்தனத்தை எல்லோரும் வியந்து பாராட்டினர்.



தென்னை மரமும் தேங்காய்களும்! திருப்பிப் பாருங்கள்!

# கொய்யாப்பழம்

சொக்கன்

கொய்யாத கனிஎதென்று குழந்தைகள் புதிர்போட்டு
நையாண்டி செய்கின்றார் நன்னூலால் தாக்கிடஉன்னை —
மெய்உளைந்து வருந்தினையோ, விளம்பாயோ கொய்யாவே?

வையத்தில்நீ தோன்றியநாள் வள்ளல்எம் தமிழ்மொழியில்
ஐயம்தராப் பொருந்துபெயர் ஆய்ந்துஉனக்குச் சூட்டுகையில்,
மெய்எங்கண் இருந்தனை நீ, விளக்காயோ கொய்யாவே?

அந் நாளில்,

கொம்பு கிளை கொப்பிலெல்லாம், குறுகொண்ணாப் படைபோல,
அம்புஎய்யும் முள்களால்நீ அடர மொய்த்து நின்றனையோ—அதனால்,

மலை தாவும் குறத்தியரும்
இலை தொட்டுக் கொய்யஉன்னை
மலைத்தனரோ, நாணினரோ? — பின்பு ஒருநாள்,

மென்கொடியொன்று எதோஉன்னைத் தழுவுதலும்,
வன்கண்மை மெதுவாய்நீ உதிர்த்துவிட்டு,
இன் காட்சியாய் இற்றைநாள்நாம் காண்கின்ற
பொன் கொழும் உருவமாக மாறினையோ?





# இதெல்லாம்

# இருமலில்

# ஆரம்பமாயிற்று

முதன் முதல் தந்தை இருமலுடன்
வீடு வந்தார். அடுத்தபடியாக தாய்க்கு
இருமல் தொத்திற்று. பிறகு
நொடியில் எல்லா குழந்தைகளும் லொக்கு,
லொக்கு என்று இரும ஆரம்பித்தனர்.
இது போல் உங்கள் குடும்பத்திலும் நேரி
டும்படி விட்டு விடாதீர்கள். 60 வருஷ
காலமாக சகல இருமல்களுக்கும் கைகண்ட
ஔஷதமாயிருக்கும் பெர்டுஸின் டெஷ்னர்
கக்குவான் இருமல் உட்பட எல்லாவித
இருமல்களினின்று நொடியில் யாதொரு
பாதகமுமின்றி நிவாரணம் அளிக்கிறது.



இன்றே

# பெர்டுஸின்

"டெஷ்னர்"
வாங்குங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும்
கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டீன்
ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி
இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா
லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்-1,
இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-10-TAM

“மாமி, சமையல் முடிந்து விட்டதா!” என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் வீட்டு எஜமானியான மீனாக்ஷி.

“இதோ ஆகி விட்டது. அடுப்பிலிருக்கும் குழம்பை இறக்க வேண்டியதுதான்” என்று பதிலளித்தாள் சமையல்கார மாமி பாக்கியம்.

“அப்பப்பா, சமையலை ஆரம்பித்து எவ்வளவு நேரமாயிற்று! இன்னும் முடிந்த பாடில்லை. இலையும் போட்டாகவில்லை. ஸ்டேஷனுக்குப் புறப்பட நேரமாயிற்று. உங்களை வைத்துக் கொண்டு காலம் தள்ளவே முடியவில்லை” என்று அலுத்துக் கொண்டாள் மீனாக்ஷி.

“பாவம், தள்ளாத வயது. ஓடி ஓடிச் செய்ய முடியவில்லை” என்று பரிந்து வந்தாள் மீனாக்ஷியின் பெண் லீலா.

“தள்ளாத வயதாகி வேலை செய்ய முடியா விட்டால் வேலையிலிருந்து விலகி விடுவது தானே! மாமி, இதோ பாருங்கள், இன்னும் ஐந்து நிமிஷத்தில் இலை போட்டுத் தயாராக இருக்க வேண்டும். சுபமான காரியத்துக்குப் புறப்படும்போது அபசகுனம் மாதிரி வண்டியைத் தவறவிடக் கூடாது” என்று கூறிக் கொண்டே சமையல் அறையை விட்டு வெளியே சென்றாள் மீனாக்ஷி.

மீனாக்ஷி வெளியே சென்றதுதான் தாமதம், குழந்தைகள் எல்லோரும் ஆளுக்கொரு வேலை செய்யக் கிளம்பி விட்டனர். இலை போட்டுத் தீர்த்தம் வைத்து, இலையில் கறிகள் கூடப் பரிமாறி விட்டனர்.

குழந்தைகளின் அன்பைக்கண்டு தன்னை மறந்து விட்டாள் பாக்கியம். இக் குழந்தைகளின் அன்புக்கு அடிமையாகித் தானே அவள் மீனாக்ஷியின் வீட்டில் ஸ்திரமாகத் தங்கி விட்டாள்! இந்த மீனாக்ஷியிடம் யார்தான் பத்து வருஷங்களாக வேலை செய்ய முடியும்!

மீனாக்ஷி தன் கணவர் குருஸ்வாமியுடன் சாப்பிட உள்ளே நுழைந்ததும் எல்லாக் குழந்தைகளும் ஒன்றுமே அறியாதவர்கள் போல மௌனமாகத் தங்கள் தங்கள் இலையில் சாப்பிட உட்கார்ந்து விட்டனர்.

சாப்பாடு முடிந்ததும் மீனாக்ஷி வாயில் வெற்றிலையைக் குதப்பிக்கொண்டே சமையலறைக்கு வந்தாள். “மாமி, நாங்கள் எப்போது திரும்பி வருவோம் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. லீலாவுக்குக் கல்யாணம் முடிக்கப் போகிறோம். ஒருவேளை அவர்களுக்குப் பெண்பிடித்து, எங்களுக்கும் பிள்ளையைப் பிடித்திருந்தால் நாங்கள் இறங்கப் போகும் எங்கள் அக்காவின் வீட்டிலேயே நிச்சயதார்த்தம் செய்து விட்டுச் சில நாட்கள் கழித்து வருவோம். ஒன்றும் சரியாக முடியா விட்டால் நாளை மறுநாள் வந்து விடுவோம். லீலாவை மட்டும் தான் அழைத்துப் போகிறோம். மற்றக் குழந்தைகளை உங்கள் பொறுப்பில் விட்டுவிட்டுப் போகிறோம். குழந்தைகளுக்கு வேளா வேளைக்குச் சாதம் போட்டுக் கவனித்துக் கொள்ளுங்கள். வீடு பத்திரம்” என்று கூறினாள். பிறகு கையில் கூஜாவை எடுத்துக் கொண்டு, “ஏ, லீலா! அம்மா பேசிக் கொண்டு நிற்காதே. நாழியாகிறது. சீக்கிரம் வா” என்று கூறிக் கொண்டே வாசல் பக்கம் விரைந்தாள்.

காரில் மீனாக்ஷி ஏறிக் கொண்டதும், லீலா அவசரம் அவசரமாகச் சமையலறைக்கு ஓடி வந்தாள். பாக்கியத்தின் முன் நமஸ்கரித்த வண்ணம் “மாமி, நமஸ்கரிக்கிறேன். ஆசிர்வதியுங்கள்” என்றாள். பாக்கியம் ஸ்தம்பித்து விட்டாள். “நம் மீது இவ்வளவு அன்பா இக் குழந்தைக்கு!” என்று எண்ணி எண்ணிப் புளகாங்கித மடைந்தாள்.

“லீலா, உன் குணத்துக்குத் தகுந்த கணவனாகக் கிடைக்க வேண்டும். நீ தீர்க்க சுமங்கலியாக நன்றாக இருக்க வேண்டும்” என்று மனம் கனிந்து ஆசிர்வாதம் செய்தாள்.

அவர்கள் எல்லோரும் புறப்பட்டுச் சென்றதும் பாக்கியம் உள்ளே வந்தாள். லீலா இல்லாமல் வீட்டினுள் நுழையவே அவளுக்குப் பிடிக்கவில்லை. அவள் அன்பு ஒன்றுதான் அவளுக்கு அவ் வீட்டில் விலை மதிப்பில்லாத சம்பளமாகத் தோன்றியது. அவள் அங்கு கிடைக்கும் பணத்தைப் பெரியதாகக் கருத




வில்லை. மீனாக்ஷியிடம் அவளை ஸ்திரமாகத் தங்கச் செய்தது லீலாவின் அன்பு ஒன்றுதான்.

எப்படியோ கஷ்டப்பட்டு, பெற்றெடுத்த வனைத் தன்னிடமே வைத்துக் கொண்டிருந்தால் அவனுக்கு இப்பொழுது விவாக வயது ஆகியிருக்கும். லீலாவைப் போல் அழகான மருமகள் வந்திருப்பாள். மகன் சம்பாதித்துப் போட ஹாய்யாகப் பேரக் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டு உட்கார்ந்திருக்கலாம். இதைப் பற்றி இப்பொழுது நினைக்கக் கூட வழியில்லை. எங்கே யிருக்கிறானோ, என்ன படித்துத் தேறி விட்டு, என்ன வேலையில் இருக்கிறானோ!

ரொம்பவும் ஏழையான வீட்டில் அவள் பிறந்திருக்கவில்லை. அக் காலைய ‘சால்ட்’ இன்ஸ்பெக்டரின் மூன்றாவது பெண்ணாக ஜனித்தாள் அவள். சம்பாதிப்புக்கேற்ற சம்சாரத்தைப் பெற்றிருந்தார். ஆனாலும் இருந்த நிலத்தின் வருவாயின் உதவியால் குடும்பத்தைக் குறைவில்லாமல் நடத்தினர். மொத்தமாக ஆறு குழந்தைகள் பிறந்ததும் அதற்குமேல் தாளா

தது போல் ஏழாவது பிரசவத்தில் அவள் தாயார் கண்களை மூடி விட்டாள். பெரிய பெண்கள் விவாகமாகிப் புக்ககம் சென்று விடவே வீட்டுப் பொறுப்பு பன்னிரண்டு வயதுச் சிறுமி பாக்கியத்தின் தலையில் விழுந்தது. அதனால் படிப்பு, பாட்டுக்கு வேண்டிய சௌகரியங்கள் அவளுக்குக் கிடைக்கவில்லை. பதினைந்து வயதில் அவள் சீனிவாசனின் கைகளைப் பிடித்தாள், இன்ப வாழ்க்கை நடத்த. ஆனால் பாக்கியம் சுகம் அநுபவிக்கப் பிறந்தவளல்ல; இல்லையென்றால், ஒரு ஆண் குழந்தை பிறந்த சில மாதங்களுக்கெல்லாம், பாக்கியத்தின் கணவன் சீனிவாசன் திடீரென்று இறந்து போவானா! அவன்தான் இறந்து விட்டான். அப்புறமாவது கடவுள் அவளிடம் கருணை காட்டியிருக்கலாகாதா! சீனிவாசனின் தமையன் நாகராஜன் தனக்கும் தன் குழந்தைக்கும் ஆதரவாயிருப்பான் என்று பாக்கியம் எதிர்பார்த்தாள்.

சிறு குழந்தையை வைத்துக் கொண்டு எங்கே போவாள்! ரொம்பவும் உபகாரம் செய்வது போல் நாகராஜன் ஒரு யோசனை சொன்னான். "இதோ பார், இக் குழந்தையை வைத்துக்கொண்டு அங்கும் இங்கும் அலைய வேண்டாம். குழந்தையை நாங்கள் சுவீகாரம் எடுத்துக் கொண்டு விடுகிறோம். உன் ஒரு வயிற்றை நீ வெளியில் எங்காவது காப்பாற்றிக் கொள்ளலாம். எனக்குச் சுவீகாரம்கொடுக்கச் சம்மதமா, சொல்லு. இல்லாவிடில் குழந்தையை அழைத்துக் கொண்டு நீ தனியாக எங்கேயாவது இடம் பார்த்துக் கொள்" என்றார். இவ் வார்த்தை பாக்கியத்துக்குப் பேரிடி போல் இருந்தது. மனம் குமுற விசித்து விசித்து அழுதாள்.

"இதற்கு அழுகை என்ன! வேறு வெளியில் சென்று அயலார் குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்வதைக் காட்டிலும் உன் குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்வதாகச் சொல்கிறார். அதனால் உனக்கும் லாபம். குழந்தையை வைத்துக்கொண்டு இரண்டுவயிற்றைக் கழுவக் கஷ்டப்பட வேண்டாம், பார்! குழந்தையும் நல்ல நிலையில் இருக்கும். குழந்தை நன்றாக இருப்பதை விரும்புவதைவிட ஒரு தாயார் வேறு என்ன வேண்டுவாள்!" என்று மேற்கொண்டு தூபம் போட்டாள் நாகராஜனின் மனைவி சரஸ்வதி.

குழந்தை நன்றாக இருப்பதைத்தான் தாயார் வேண்டுவாள். ஆனால் பெற்ற குழந்தை





யைத் தானம் செய்ய யாருக்கு விருப்பம் இருக்கும் என்பதைக் குழந்தையைப் பெறக் கொடுத்து வைக்காத சரஸ்வதி அறியவில்லை. பாக்கியம் பலவிதமாக யோசனை செய்தாள். இந்த உடன்படிக்கைக்குச் சம்மதம் இல்லையெனில் மறு நிமிஷமே வீட்டை விட்டு வெளியேற வேண்டும். இச் சிறு குழந்தையுடன் அவள் எங்கே போய் நிற்பாள்! வேலை செய்து பிழைக்கலாமென்றாலும் குழந்தையை யார் அண்ட விடுவார்கள்! பிறகு குழந்தையைப் படிக்க வைப்பது முதலிய காரியங்களை நிறைவேற்றி அவனை எப்படிப் பெரியவனாக்கி ஆளாக்குவது!

பல பிரச்னைகளை யோசித்துக் கடைசியில் மனதைக் கல்லாக்கிக் கொண்டு நாகராஜனின் யோசனைக்கு இசைந்தாள். மகன் எங்காவது நன்றாக இருக்கட்டும் என்ற ஒரே எண்ணம் அவளை இசையச் செய்தது. நாகராஜன் மெதுவாக வேறொரு நிபந்தனையும் போட்டார். குழந்தையை அங்கீகரித்தாலும் அவன் தாயாரை அங்கு நிறுத்தி வைக்க அவர் விரும்பவில்லை. ஆகையினால் "தத்துக் கொடுத்த பிறகு நீ இங்கே இருந்தால் குழந்தை உன்னிடமே ஒட்டிக் கொள்ளும். எங்களிடம் பிடிப்பு விழாது. எனவே, நீ வெளியில் எங்காவது இடம் பார்த்துக் கொள்ளவேண்டியதுதான்" என்றார் நிர்த்தாட்சிண்யமாக. பாக்கியமும் இதை எதிர்பார்த்தவள் தான். வேறு வழியில்லாமல் அதற்கும் சம்மதித்தாள். அந்த ஊரிலேயே நல்ல இடமாகப் பார்த்துக் கொண்டு சமையல் வேலையைச் செய்து கொண்டிருந்தாள். நடு நடுவில் குழந்தையைப் பார்த்துக் கொள்ளலாம் என்ற நப்பாசை அவளுக்கு இருந்தது. சுவீகாரம் சாஸ்திரோக்தமாக நடந்தது. அன்று முழுவதும் பாக்கியம் விசித்து விசித்து அழுதாள். அன்ன ஆகாரமில்லாமல் மூலையில் கிடந்தாள். ஆனால் அவளைத் தேற்றுவார் அங்கு ஒருவரும் இருக்கவில்லை. பெற்றெடுத்த மகனும் மாலையும் கழுத்துமாகக் கும்மாளத்தில் இருந்தான். ஆனால் இரவு படுக்கப் போகுமுன் ஸ்ரீதரன் ஏதோ நினைத்துத் தாயாரைத் தேடி வந்த போது சரஸ்வதி விளையாட்டுப் போக்குக் காட்டி வேறு இடத்துக்கு அழைத்துச் சென்று விட்டாள். அதைக் கண்ணுற்ற பாக்கியத்தின் மனம் வெடித்துவிடும் போலிருந்தது.

பாக்கியத்துக்கே அவ்வீட்டில் வெகுநாட்கள் தங்கப் பிடிக்கவில்லை. தன்னைத் தேடி வரும் குழந்தையை அவர்கள் போக்கு காட்டி அழைத்துச் செல்வது அவள் மனத்துக்கு மிகுந்த வேதனையைத் தந்தது. அதனால் அவளே ஒரு வீட்டில் சமையல் வேலை தேடிச் சென்று விட்டாள். நடு நடுவில் குழந்தையை வந்து பார்ப்பாள். ஆனால் நாகராஜன் தம்பதிகளோ அதையும் விரும்பவில்லை. ஆகையால் அவ்வூரை விட்டு மாற்றிக் கொண்டு சென்னைக்குச் சென்று விட்டனர். அத்துடன் அவள் பெற்றெடுத்த மகனைப் பற்றிய விஷயங்களையும் அவளால் அறிய முடியவில்லை.

பாக்கியம் உடல் சோர்ந்தாள். ஆனால் தன் ஒரு வயிற்றைக் காப்பாற்ற அவள் எங்காவது ஒரு இடத்தில் வேலைக்கு அமரத்தான் வேண்டியிருந்தது. ஏழெட்டு வருஷங்கள் பல இடங்களில் அமர்ந்து கடைசியாகக் குருஸ்வாமியின் வீட்டுக்கு வந்த போது மீனாக்ஷியின் குணம் அவளைத் திக்குமுக்காடச் செய்தது. ஆயினும் ஐந்து வயதுச் சிறுமி லீலா அவள் மனதை மிகவும் கவர்ந்து விட்டாள். அக் குழந்தையின் இனிமையான பேச்சில் மீனாக்ஷியின் கொடுஞ் சொற்கள் மட்டுமல்ல, தான் அடைந்த பழைய கஷ்டங்களையும் ஒருவாறு மறந்து விட்டாள். லீலா அன்பான வார்த்தைகள் மட்டுமல்ல, தாயாருக்குத் தெரியாமல் பாக்கியத்துக்கு உதவியாகவும் பல காரியங்கள் செய்வாள். பாக்கியத்தின்மீது தன்னையறியாமல் அவளுக்கு ஒரு இரக்கம் ஏற்பட்டிருந்தது. தனக்கு விவாகமாகிப் புக்ககம் சென்று விட்டாலும் தனக்குப் பின் பாக்கியத்தின்மீது இரக்கம் காட்டுவதற்கென்று தன் தம்பி தங்கைகளைப் பழக்கி விட்டிருந்தாள் லீலா. இக் குடும்பத்தினிடம் அன்பு என்ற கயிற்றினால் பாக்கியத்தை லீலா கட்டிப் போட்டிருந்தாள்.

இரண்டு நாட்கள் கழிந்தன. குருஸ்வாமியிடமிருந்து லீலாவுக்கு விவாகம் நிச்சயமாகி விட்டதாகப் பாலுவுக்குக் கடிதம் வந்தது. பாக்கியத்தின் சந்தோஷம் பிடிபடவில்லை. ஊரிலிருந்து திரும்பின லீலா, தாய்க்கு எதிரிலேயே ஓடி வந்து பாக்கியத்தை நமஸ்கரித்தாள். பாக்கியத்தின் கண்களில் ஆனந்த ஊற்றுப் பெருக்கெடுத்தது. லீலா பிறகு ரகசியமாகப் பாக்கியத்திடம் தனக்கு வரப்போகும் கணவன் கலெக்டர் என்றும், அழகாக இருக்கிறான் என்றும், மற்றும் பலவிதமாகப் புகழ்ந்து தன் இன்ப உணர்ச்சிகளைக் கொட்டினாள். பாக்கியத்தின் ஆனந்தம் எல்லை மீறியது.

விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் துரிதமாக நடந்தன. ஆயிற்று மறுநாள், இன்னும் சிறிது நேரத்தில் சம்பந்திகள் வந்து விடுவார்கள். மேளச் சத்தம் காதைத் துளைத்தது. அதோ, சம்பந்திகளும் வந்துவிட்டனர். லீலா அவசரம் அவசரமாகப் பாக்கியத்தின் கையைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு மாடிக்கு ஓடினாள். ஒருவரும் அறியாவண்ணம், "அதோ பாருங்கள், மாமி! அவர்தான் மாமனார். பின்னால் இறங்குபவர் மாமியார். அதற்குப் பிறகு இறங்குகிறாரே, அவர் தான் மாப்பிள்ளை" என்றாள். அவளுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. ஆனால் சம்பந்திகளைப் பார்த்த பாக்கியம் அப்படியே அசந்து நின்றுவிட்டாள். அது நாகராஜனாயிற்றே; கூடவே சரஸ்வதி; அப்படியானால் அவன்?—அவன் மகன் ஸ்ரீதரன்தானே! அப்பப்பா எப்படி வளர்ந்து விட்டான்! அழகு ஸ்வரூபமாக நிற்கிறானே! பாவி இவனையா தத்துக் கொடுத்தேன்......! அவளால் அதற்கு மேல் நிலையாக நிற்க முடியவில்லை.

"என்ன மாமி கலவரத்துடன் நிற்கிறீர்கள்! பிள்ளை பிடிக்கவில்லையா!"

"பிடிக்காமலென்ன! ராஜா மாதிரி இருக்கிறான். லீலா நான் கீழே போகிறேன். தலையைச் சுற்றுகிறது" என்று கூறின பாக்கியம் விடுவிடென்று கீழே இறங்கினாள். வந்தவள் சாமான் அறைக்குச் சென்று பேசாமல் படுத்து விட்டாள்.



லீலாவும் பின்னாடியே ஓடி வந்தாள். படுத்திருந்த பாக்கியத்தின் தலையைத் தொட்டுப் பார்த்து, "மாமி, ஜுரம் வந்து விட்டதா! ஒரு மாத அலைச்சல் உடம்புக்கு ஆகவில்லை. நான் தனிக் குடித்தனம் போனால் உங்களை அழைத்துப் போய் விடுகிறேன். 'ரெஸ்ட்' கொடுத்து உடம்பைத் தேற்றி விடுகிறேன். இருங்கள், காப்பி கொண்டு வருகிறேன்" என்று கூறிக்கொண்டே சமையலறைக்குச் சென்றாள்.

பாக்கியத்தின் மனம் சொல்ல முடியாத வேதனை அடைந்தது. 'இந்த அருமைக் குழந்தை லீலா என் நாட்டுப் பெண். அதை வெளியில் சொல்ல நான் கொடுத்து வைக்கவில்லையே! பாவி பெற்றெடுத்த குழந்தையை 'என்னுடையது' என்று சொல்லவில்லையே! என் சொந்த மாமியார் சமையல்காரி என்று அறிந்தால் லீலாவின் மனம் வேதனை அடையாமலிருக்குமா! இங்கு என்னைப் பார்த்தால் நாகராஜன் என்ன சொல்வார்!'

பலவித ஏக்கங்கள் சூழ மயங்கி விழுந்து கிடந்தாள் பாக்கியம். தள்ளாடித் தள்ளாடி வேலை செய்ய எழுந்தாலும் அவளால் நடக்க முடிய வில்லை. "கல்யாணத்தன்று வேலை செய்யாமல் இம் மாதிரியா படுப்பது!" என்று மீனாக்ஷியின் கடுஞ் சொற்கள் காதில் விழுந்ததும் தன் துக்கச் சுழலில் அவள் அதைப் பொருட்படுத்த வில்லை. "என் மகன், என் மகன்" என்று கூறி ஸ்ரீதரனைக் கட்டி அணைக்க அவள் மனம் துடியாகத் துடித்தது. ஆனால் 'சமையல்காரியின் மகன்' என்ற பெயர் கிட்டக் கூடாதே என்ற எண்ணம் அவள் ஆசையை அழித்தது. விவாகத்தில் ஈடுபட்ட ஒருவராவது அவளைக் கவனிக்க வில்லை. லீலா மட்டும் நடுநடுவில் வந்து ஏதாவது ஆகாரம் கொடுத்து விட்டுப் போனாள்.

பாக்கியத்தின் எண்ணம் வேறொரு பக்கமும் சுழன்றது. விவாகமான பிறகு லீலா தன் சொந்த நாட்டுப் பெண் என்று அறிந்து அவளால் ஒதுங்கி இருக்க முடியுமா! மகனைக் கண்டதும் என்றாவது ஒரு நாள் பாசமும் அன்பும் மேலிட அவனை அணைக்க ஓடி விடுவாள். அப்பொழுது அவர்கள் கதி என்ன ஆகும்! 'சமையல்காரியின் மகன்' என்று மீனாக்ஷி மாப்பிள்ளையை அவமதிப்பாள். சமையல்கார மாமியாரிடம் லீலா பழையபடி அன்புடன் பழக முடியுமா! இவ்வெண்ணச் சுழலில் ஈடுபட்ட அவள் இரவு நெடுநேரத்துக்குப் பிறகு ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாக ஒருவரும் அறியாமல் வெளியே சென்றாள். மறுநாள் முகூர்த்தத்தின் போது லீலா முதன் முதலாகப் பாக்கியத்தைத் தேடித் தேடிப் பார்த்தாள். எங்கு தேடியும் அவள் கண்களில் படவில்லை. தாயாரைக் கேட்டாள். "வேலைக்குச் சோம்பி எங்கு உட்கார்ந்து விட்டாளோ!" என்று கூறினாளே தவிர, அவளைத் தேட முயற்சி செய்யவில்லை. லீலாவின் மனம் மிகுந்த வேதனையை அடைந்தது.

விவாகம் கழிந்து இரண்டு நாட்களாகியும் பாக்கியம் திரும்பி வராமல் போகவே, மீனாக்ஷிக்குச் சற்றுக் கஷ்டமாகத் தான் இருந்தது. வீட்டு வேலைகளை அவளால் முழுவதும் செய்ய முடியவில்லை. லீலாவோ அடிக்கடி புக்ககம் சென்று விட்டாள். இரண்டு மாதங்களாகியும் பாக்கியத்தின் இருப்பிடம் தெரியாமல் போகவே, "சமயத்தில் கைவிட்டு இப்படி ஈவு இரக்கமில்லாமல் எப்படித்தான் போனாளோ! இவ்வளவு நாட்கள் இவ்வீட்டு உப்பைத் தின்றுவிட்டு அழகாகக் கைம்மாறு செய்து விட்டாள்!" என்று திட்டியபடியே மீனாக்ஷி வேறு ஆள் தேடுவதில் மூழ்கினாள்.

லீலாவுக்கு அன்று தலைதீபாவளி. வீடு ஒரே குதூகலமாகக் காணப்பட்டது. லீலா மாடியில் தன் கணவனுடன் தனித்துப் பேசிக்கொண்டிருந்த போது முதல் நாள் வந்த பார்ஸல் நினைவு அவளுக்கு வந்தது. அதிக வேலையிருந்ததால் அவள் முதல் நாளே அதைப் பிரித்துப் பார்க்கவில்லை. இன்று பார்ஸலின் மேலே அனுப்பியவரின் விலாசத்தைப் பார்த்ததும் அவள் திடுக்கிட்டாள். அது பாக்கியத்தினிடமிருந்து வந்திருந்தது. அதில் வைக்கப் பட்டிருந்த கடிதத்தைப் படித்தாள்.

*அன்புள்ள லீலா,*

இது உனக்கு என் அன்புப் பரிசு. என் ஆசை மருமகளுக்கும் மகனுக்கும் அனுப்பும் எளிய பரிசு; ஒரு புடவையும் வேஷ்டியும்.

அருகில இருந்து உன்னை நான் மருமகளாகத் தெரியப்படுத்திக் கட்டி அணைக்கக் கொடுத்து வைக்கவில்லை. ஏதோ பைத்தியம்போல் எழுதுகிறேனே என்று யோசித்து நிற்காதே. இவ்வளவு நாட்களாக மறைக்க முயன்றும் மறக்க முடியாத ரகசியத்தை வெளியிட்டே விடுகிறேன். ஸ்ரீதரன் நான் பெற்றெடுத்த மகன். நாகராஜனுக்குத் தந்த மகன். இந்த ரகசியத்தை வெளியிடாதே. என் மகனைச் 'சமையல்காரி மகன்' என்று பறைசாற்றி அவமானப் படுத்தாதே. இனி அவன் சுகம்தான் உன் சுகம். நீயும் 'சமையல்காரியின் மருமகள்' என்று பட்டம் பெறாதே. வாய் நிறைய மகனையும் மருமகளையும் அன்புடன் கூப்பிட்டு மகிழக் கொடுத்து வைக்காத நான் எழுத்திலாவது எழுதி என்னைத் தேற்றிக் கொள்கிறேன்.

இனி என் இருப்பிடம் புனித கங்கைக்கரை. பாசத்தை அறுத்து விசுவநாத சுவாமியின் காலடியில் விழுந்து கிடந்து அவனிடமே உயிரை விடுவேன். நீங்கள் நீடூழி சுகமாக வாழ வேண்டும்.

இப்படிக்கு
பாக்கியம்"

கடிதத்தைப் படித்த லீலா தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தாள். ஸ்ரீதரனும் கடிதத்தைப் படித்துவிட்டுச் செயலற்று நின்றுவிட்டான். தாய்ப்பாசம் அவன் மனத்தை வருத்தியது. இருவரும் பிறகு வெகுநேரம் யோசித்துப் பாக்கியத்தை அழைத்து வர மறுநாளே காசிக்குப் போக நிச்சயித்தனர். ஆனால் பாக்கியத்தைப் பற்றின விஷயத்தை ஒருவரிடமும் அறிவிக்கவில்லை. ஸ்வாமி தரிசனத்துக்குக் காசிக்குப் போவதாகச் சொன்னார்கள்.

ஒருவழியாகப் பாக்கியத்தைத் தேடிப் பிடித்தனர். ஆனால் அவர்களோடு வர அவள் இணங்கவில்லை.

"லீலா, வீணாக என்னைக் கூப்பிடாதே! சம்சார பந்தத்தை அன்றே விட்டு விட்டு இந்த விசுவநாதன் காலடியில் விழுந்து கிடந்திருக்க வேண்டியவள். ஏதோ ஒரு மாயை சூழ உன்னை விட்டுப் பிரிய மனமில்லாமல் இருந்தேன். இனியும் என் அன்புக்குரிய லீலா சமையல்காரியின் நாட்டுப் பெண்ணாக இருக்க நான் விரும்பமாட்டேன். கொஞ்ச நஞ்சம் இருந்த மனக்கலக்கம் இன்று அகன்றுவிட்டது. நீயும் ஸ்ரீதரனும் வாய் நிறைய என்னை 'அம்மா' என்று கூப்பிட்டு விட்டீர்கள். இதுவே நான் வாழ்வில் செய்த பெரும் பாக்கியம். இந்த இன்பத்துடன் நான் கண்களை மூடி விடுகிறேன். யார் மறுத்தாலும் என்றென்றும் நீங்கள் என் சொந்த மகன் மருமகள் என்று உங்கள் மனத்தில் ஸ்திரமாகப் பதித்து விடுங்கள். அதுவே நீங்கள் செய்யும் உதவி" என்று கூறிய பாக்கியம் இருவரையும் அணைத்துக் கொண்டாள்.

ஊர் திரும்பின லீலா முதல் வேலையாக என்றோ வீட்டிலிருந்த காமிராவினால் எடுத்த பாக்கியத்தின் போட்டோவைத் தேடிஎடுத்துக் கண்ணாடி போட்டாள். ஸ்ரீதரனும் லீலாவும் தினமும் காலையில் எழுந்ததும் அப் படத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்வார்கள். அவள் மகன் ஒருவன் இருக்கிறான் என்பதைக் காட்டி, அவளை மகிழ்விக்க வாரந்தவறாமல் 'அம்மா' என்று அழைத்துக் கடிதம் எழுதி, மாதந்தவறாமல் பணமும் அனுப்பி வந்தான் ஸ்ரீதரன். அவனுடைய இந்தச் செய்கை பாக்கியத்துக்குக் கடைசிக் காலத்தில் கட்டாயம் மன நிம்மதியைக் கொடுத்தே இருக்கும் அல்லவா!

# கானல்நீர்

ஆசிரியர்: கலீல் ஜிப்ரான்
மொழிபெயர்ப்பு: ரா. வீ.

வீரானி என்னும் பெயர் கொண்ட ஒரு நகரத்தை அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் சிறந்த வீரனாகவும் மகா புத்திமானாகவும் இருந்தான். அவனுடைய வீரத்தைக் கண்டு மக்கள் பயந்தார்கள்; பணிந்தார்கள். அவனது புத்திக் கூர்மைக்காக அவனிடம் அளவற்ற அன்பு செலுத்தினார்கள்.

அந்த நகரத்தின் மத்தியிலே ஒரு கிணறு. அந்தக் கிணற்றின் நீர் பளிங்கு போல் பரிசுத்தமாகவும், பனிக்கட்டி போல் குளுமையாகவும் இருந்தது.

நகரத்து மக்கள் அனைவரும், அரசன் மந்திரி பிரதானிகள் உள்பட அந்தக் கிணற்று நீரைத்தான் பருகி வந்தார்கள். காரணம், அந்த நகரத்தில் அந்தக் கிணற்றை விட்டால் வேறு கிணறே கிடையாது.

ஒரு நாள் இரவு மக்கள் எல்லோரும் நன்கு கண் அயர்ந்து விட்டபின் ஒரு பேய் அந்த நகரத்துக்குள் நுழைந்தது. ஒரு விசித்திரமான மூலிகையின் ஏழு சொட்டுச் சாற்றைக் கிணற்றுக்குள் பிழிந்து, "இந்தக் கிணற்று நீரை யார் குடித்தாலும் உடனே பித்தனாக மாறிவிட வேண்டும்!" என்று மந்திரித்துச் சாபம் அளித்துவிட்டு மறைந்து விட்டது.

மறுநாள் காலை மந்திரியையும் மன்னனையும் தவிர, மற்ற நகரவாசிகள் அனைவரும் அந்தக் கிணற்று நீரைக் குடித்தார்கள். அப்புறம் என்ன! பேயின் சொல் பலித்து விட்டது. அந்தக் கணமே அவர்கள் எல்லோரும் பித்தர்களாகி விட்டார்கள்.

அன்று நகரத்தில் உள்ள சந்து பொந்துகளிலும் பிரதான ராஜ வீதிகளிலும் கடைத் தெருக்களிலும் மக்கள் ஒருவர் காதை ஒருவர் கடித்துக் கொண்டிருந்தனர்.

"நம் அரசனுக்கும் முக்கிய மந்திரிக்கும் மூளை மழுங்கி விட்டது. இந்த அசட்டு அரசனின் அதிகாரத்தை இனி நம்மால் அதிககாலம் பொறுத்துக் கொள்ள முடியாது. எனவே, இவனைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கி விட்டு மறுகாரியம் பார்க்க வேண்டியதுதான்!" என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளலாயினர்.

இந்தப் பேச்சு அரசன் காதுகளுக்கும் முதன் மந்திரியின் காதுகளுக்கும்கூட எட்டியது. அறிவாளியான அரசன் அதிக நேரம் யோசிக்கவில்லை. மாலைப் பொழுதானதும் தங்கப் பாத்திரம் ஒன்றில் அந்தக் கிணற்றின் நீரைத் தருவித்தான். உடனே அதைத் தானும் பருகித் தன் முதன் மந்திரியையும் பருகச் செய்தான்.

அப்புறம் சொல்ல வேறு வேண்டுமா! வீரானி நகரத்தில் மங்கள வாத்தியங்கள் முழங்கின. 'மன்னனுக்கும் மதிமந்திரிக்கும் மூளை சரியாகி விட்டது' என்று மக்கள் முடிவு செய்ததைத் தவிர இதற்குக் காரணம் வேறு எதுவாக இருக்க முடியும்!

# உங்கள் பாதுகாப்பிற்காக

நீங்கள் "'ஹாஸலீன்' ஸ்னோ" வாங்கும்பொழுது பாட்டிலின் மூடியின் மேல் யூனிகார்ன் டிஸைன் வரையப் பட்டுள்ள வெள்ளி நிற அலு மினியம் ஆலு காப்சூல் சரி யானபடி பொருத்தப்பட்டிருக் கிறதா என்பதை கவனிக் கவும். இந்த ஒரு வழியில் மட் டுமே நீங்கள் அசலான சரக்கு வாங்குவதை நிச்சய மாய் அறிந்து கொள்ளமுடியும்.

நீங்கள் வாங்கும்பொழுது அலுமினியம் பாயில் சரியாகப் பொருத்தப்பட் டிருக்கிறதாவென்பதை நிர்ணயிக்கவும்.






இந்த டிஸைன் நீல நிறத்தில் மேல் புறத்திலிருக்கிறது.

# "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

"'ஹாஸலீன்' ஸ்னோ" டிரேட் மார்க்

பர்ரோஸ் வெல்கம் அண்ட் கம்பெனி (இந்தியா) லிட்.
தபால் பெட்டி 290, பம்பாய்.

# மற்ற எல்லா தேயிலைகளையும் விட அதிகமாக விற்பனையாகும் தேயிலை!

ப்ரூக் பாண்டின் விற்பனை வெற்றிக்கு காரணம் என்னவெனில் அது களங்கமற்று புத்தம்புதியதாக இருக்கிறது, கலப்பற்று சுத்தமானதாகவும் இருக்கிறது. தோட்டத்திலிருந்து கடைகளுக்கு அதிவேகமாக அனுப்பப்படுவதாலேயே ப்ரூக் பாண்ட் தேயிலை எப்பொழுதும் புத்தம்புதியதாக இருக்கிறது. காற்றுப் புகாமல் நன்கு பாக் செய்யப்பட்டிருப்பதால் ப்ரூக் பாண்ட் தேயிலை மாசு மருவற்று, கலப்பற்று சுத்தமாக இருக்கிறது.







## மற்றெந்த தேயிலையையும் விட

# ப்ரூக் பாண்ட் தேயிலையை

## அதிகப்படியான ஜனங்கள் வாங்குகிறார்கள்



# லட்சத்தில் ஒருவன்

சௌமித்திரி

‘பல்லவன் பாங்க்’ காரியாலய மானேஜிங் டைரக்டர் மாணிக்கவாசகம் தம்முடைய அறையில் சுழலும் காற்றாடிக்கு அடியில் அமர்ந்தவாறு ‘பைல்’களைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

“ஸார்!” என்ற குரலைக் கேட்டுத் தலை நிமிர்ந்து பார்த்தார்.

தம் எதிரில் ஆபீஸ் பையன் ஏதோ ஒரு செய்தியைச் சொல்லுவதற்காகப் பணிவுடன் நிற்பதைக் கண்டார்.

“என்னப்பா!”

“உங்களை யாரோ ஒருவர் பார்க்கணும் என்கிறார், ஸார்!”

“யார் அது!”

“தெரியவில்லைங்க! ஏதோ மனு கொடுக்க வந்தேன் என்று சொன்னார்.”

“ஓஹோ! சரி, சரி, இப்போது ஒன்றும் வேலை காலி இல்லை என்று சொல், போ!”

“சரிங்க, ஸார்!” என்று சொல்லி விட்டு அந்த ஆபீஸ் பையன் திரும்புவதற்குள், “டேய், டேய்! கொஞ்சம் நில்! அந்த ஆசாமியை இங்கே அனுப்பு!” என்று உத்தரவிட்டார் மாணிக்கவாசகம்.

“‘வேலை காலி இல்லை’ என்று சொல்லிப் பழக்கமாகி, இப்போது ஆள் தேவையாக இருக்கும் போதுங்கூட அதுதானே முதலில் வாயிலே வருகிறது!” என்று முணுமுணுத்துக் கொண்டார் மாணிக்கவாசகம்.

அடுத்த நிமிஷம் கைகளைக் கூப்பியவண்ணம் ஒரு இளைஞன் உள்ளே பிரவேசித்தான். மாணிக்கவாசகம் அவனை ஏற இறங்கப் பார்த்தார். கறுத்த உடல்; சோகம் படர்ந்த கண்கள்; ஒட்டிய கன்னம்; ஆனால் முகத்தில் களை இருந்தது. அவன் உடலிலும், உடலின் மேலும் வறுமை தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. அவனைப் பார்த்தவுடன் மாணிக்கவாசகத்தினுடைய உள்ளத்தின் ஒரு மூலையில் இரக்கம் ஊற ஆரம்பித்தது

“வணக்கம், ஸார்!” என்று சொல்லிக் கொண்டே தன் கையிலிருந்த விண்ணப்பத் தாளை மாணிக்கவாசகத்தினிடம் நீட்டினான்.

அதைப் பெற்றுக் கொண்டு, அதில் ஒரு விநாடி கண்களை ஓட்டிய அவர், தலையை நிமிர்த்தி அவ்வாலிபனை நோக்கினார்.

“உன் பெயர் என்ன, தம்பி!”

“பிரகாசம்!”

“உன் பெயருக்கும் ஆளுக்கும் சம்பந்தமேயில்லையே!” என்று நகைச்சுவையுடன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் பிரகாசத்தின் இதழ்களில் ஒருவறட்சிப் புன்னகை நெளிந்தது.

“அப்படி ஒன்றும் இல்லை, ஸார்! வறுமை இருள் சூழ்ந்த தங்கள் வாழ்க்கை, என்னால் தான் பிரகாசமடையப் போகிறது என்று நம்பி எனக்குப் பிரகாசம் என்று என் பெற்றோர் பெயர் வைத்தார்களாம்!”

“ஓஹோ! அப்படியா!” என்று கூறிச் சிரித்த மாணிக்கவாசகம், “உன் தந்தை என்ன வேலை செய்கிறார்!” என்று வினவினார்.

“அவர் இப்போது உயிருடன் இல்லை, ஸார்! நானும் என் அம்மாவும்தான் இருக்கிறோம். அப்பா இறந்த பிறகு துடுப்பில்லாத படகைப் போல நாங்கள் தவித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு வருஷமாக வேலை தேடி அலைகிறேன். என் துரதிர்ஷ்டம் எங்கே சென்றாலும் ‘இல்லை’ என்ற சொல்தான்! ஸார், தயவுசெய்து எனக்கு ஒரு வேலை கொடுத்து என்னையும், என்னை நம்பியுள்ள தாயாரையும் காப்பாற்றுங்கள்!” என்றான் பிரகாசம் கெஞ்சும் குரலில்.

“சரி, நீ என்ன படித்திருக்கிறாய்!”

“இண்டர் படித்திருக்கிறேன்.”




கடைக்காரன்:—இங்கே புதிய பேப்பர்களை விற்கிறோம். எதிர்த்தாற் போல இருக்கிற கடையிலே பழைய பேப்பர்களை எடுத்துக் கொள்கிறோம். அதுவும் நம்ம கடைதான் ஐயா; அங்கே என் மகன் இருக்கிறான்!

---

"டைப்ரைட்டிங் தெரியுமா!"

"லோயர் கிரேட் பாஸ் செய்திருக்கிறேன்."

"எங்கே, உன் 'சர்டிபிகேட்'டுகளை எடு, பார்ப்போம்!" என்று கூறித் தம்முடைய மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டார் மாணிக்கவாசகம்.

பிரகாசம் தன்னுடைய இண்டர் சர்டிபிகேட்டையும், டைப்ரைட்டிங் சர்டிபிகேட்டையும் கையிலிருந்த பையிலிருந்து எடுத்து அவர் முன்னால் வைத்தான்.

அவ்விரண்டையும் பார்த்து முடித்த மாணிக்கவாசகம், "மிஸ்டர், பிரகாசம்! இந்த சர்டிபிகேட்டுகள் மட்டும் போதாது! உன் நடத்தையைப் பற்றி யாராவது உனக்குத் தெரிந்த பெரிய மனிதர்களிடமிருந்து ஒரு நன்னடத்தை சர்டிபிகேட் வேண்டுமே!" என்றார் அதிருப்தியுடன்.

"இந்த ஏழைக்குத் தெரிந்த பெரிய மனிதர்கள் யார் இருக்கப் போகிறார்கள்! பெரிய மனிதர்களின் வீட்டு வாசலையே மிதிக்க அருகதையற்ற நான் யாரிடமிருந்து ஸார், 'காண்டக்ட் சர்டிபிகேட்' வாங்க முடியும்!" என்றான் பிரகாசம் துயரத்துடன்.

ஒருகணம் சிந்தித்துப் பார்த்த மாணிக்கவாசகம், "பரவாயில்லை! அது வேண்டாம்! உன்னை வேலைக்கு எடுத்துக் கொள்கிறேன். ஆனால் நீ முந்நூறு ரூபாய் 'டிபாசிட்' கட்ட வேண்டி யிருக்கும்!" என்றார் புன்னகையுடன்.

"முந்நூறு ரூபாயா!" என்று திடுக்கிட்டு வினவிய பிரகாசம், "ஒரு வேளை உணவுக்கும் திண்டாடும் நிலையிலுள்ள நான் அவ்வளவு பணத்துக்கு எங்கே ஸார் போவேன்! எங்களிடம் முந்நூறு காலணா கூடக் கிடையாதே!" என்றான் பரிதாபகரமான குரலில்.

"பிரகாசம்! இது பணம் புழங்கும் இடம். 'டிபாசிட்' இல்லாமல் யாரையும் வேலைக்கு வைத்துக் கொண்டு வழக்கமில்லையே!" என்றார் மாணிக்கவாசகம்.

"இந்த ஏழைக்காகக் கொஞ்சம் கருணை காட்டுங்கள், ஸார்! மாதா மாதம் சம்பளத்தில் ஐம்பது ரூபாய் பிடித்து வைத்துக் கொள்ளுங்கள். ஆறு மாதத்தில் அந்த 'டிபாசிட்' தொகை சேர்ந்து விடும்!" என்றான் பிரகாசம்.

அதைக் கேட்டுச் சிரித்த மாணிக்கவாசகம், "தம்பி! நீ 'டிபாசிட்' தொகையைக் கட்டுவதற்குள் ஆபீஸ் பணத்தைச் சுருட்டிக் கொண்டு கம்பி நீட்டி விட்டால் நான் என்ன செய்கிறது!" என்று வினவினார்.

"ஸார்! என்னைப் பெற்ற தாயின்மீதும், எனக்குக் கல்வி அறிவை அளித்த சரஸ்வதியின் மீதும் ஆணையாகச் சொல்கிறேன்! நான் அந்தமாதிரிக் கேவலமான காரியத்தைச் செய்ய மாட்டேன்! என்னை நம்புங்கள், ஸார்!"

மாணிக்கவாசகம், அவன் கொடுத்த விண்ணப்பத் தாளை மீண்டும் கையில் எடுத்துக் கொண்டு அதில் கண்களைச் செலுத்தினார். ஆனால் அவர் மனம் மட்டும் தீவிரமான சிந்தனையில் லயித்திருந்தது. பிரகாசத்தின் பேச்சும் அவன் உருவமும் அவர் உள்ளத்தை உருக்கி விட்டிருந்தன. ஆனால் முன்பின் பழக்கமில்லாத அவனை எந்தவித ஆதாரமும் இல்லாமல் வேலைக்கு வைத்துக் கொள்வதை அவர் மனம் ஒப்புக் கொள்ளவில்லை.

மறு கணம், அந்த விண்ணப்பத் தாளை ஒரு 'பைலு'க்குள் வைத்து மூடிவிட்டு, பிரகாசத்தை நோக்கிய மாணிக்கவாசகம், "பிரகாசம்! 'டிபாசிட்' இல்லாமல் உன்னை வேலைக்கு வைத்துக் கொள்ள என்னால் முடியாது! யாரிடமாவது கடன் வாங்கியாவது முந்நூறு ரூபாய் செலுத்தி விடு! அந்த வேலையை உனக்கே கொடுத்து விடுகிறேன்!" என்று தீர்மானமான குரலில் கூறி விட்டார்.

அவருடைய மனத்தை மாற்ற முடியாது என்று அறிந்த பிரகாசம், கண்களை நீர் மறைக்க, "வருகிறேன், ஸார்!" என்று கூறி அவருக்கு வணக்கம் செய்துவிட்டு அகன்றான்.

அவன் சென்ற திசையையே ஒரு நிமிஷம் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த மாணிக்கவாசகம், ஒரு நீண்ட பெருமூச்செறிந்து விட்டுத் தம் வேலையைக் கவனிக்க ஆரம்பித்தார். ஆனால், சோகம் படர்ந்த கண்களும், துயரம் தெறிக்கும் புன்னகையும் கொண்ட அந்த இளைஞனை அவரால் மறக்கவே முடியவில்லை.

மறுநாள் மாலை. காரியாலய அலுவல் சம்பந்தமாகச் சென்னை போவதற்காக ரயிலடிக்குச் சென்றார் மாணிக்க வாசகம்.

"திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் அரை மணி நேரம் தாமதமாக வரும்" என்று ஒலிபெருக்கியின் மூலமாக அறிவிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. அந்த அறிவிப்பைக் கேட்ட அவர், தம்முடன் வந்திருந்த நண்பருடன் இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் தங்கும் அறையை நோக்கி நடந்தார். முதல் பிளாட்பாரத்தில் அன்று ஒரே கூட்டமாக இருந்தது. 'வெயிடிங் ரூமை'ச் சமீபித்த மாணிக்கவாசகம், அந்த அறைக்குச் சற்றுத் தூரத்தில் சுவர் ஓரமாகப் போடப்பட்டிருந்த சிமெண்ட் பெஞ்சியில் தனியாக உட்கார்ந்து சிந்தனையில் மூழ்கி இருந்த பிரகாசத்தைக் கண்டார். உடனே அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. அவனது குணத்தைச் சோதித்து, அவன் நம்பத் தகுந்தவனா இல்லையா என்பதை அறிந்து கொள்ளத் தீர்மானித்தார். மறுகணம், அருகிலிருந்த

நண்பனிடம், "கோபால்! அந்தப் பையனை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று மெல்லிய குரலில் கூறினார்.

"பார்த்து விட்டேன்! எதற்காக!" என்று ஆவலுடன் வினவினார் கோபால்.

"வாருங்கள், சொல்கிறேன்!" என்ற மாணிக்க வாசகம், பரபரப்புடன் பிரகாசத்தின் கண்ணுக்குப் படாத இடத்துக்கு நண்பரை இழுத்துச் சென்றார்.

தம் கையிலிருந்த பெரிய தோல் பையைத் திறந்து அதிலிருந்த ஒரு சிறிய புதிய தோல் பையை வெளியே எடுத்தார். காலியாக இருந்த அந்தப் பைக்குள், கீழே கிடந்த ஒரு செங்கல்லை வைத்து மூடினார். பெரிய தோல் பையைப் பூட்டி இருந்த இரண்டு பூட்டுகளில் ஒன்றை எடுத்து அந்தச் சிறு தோல் பையை இறுகப் பூட்டினார்.

அவர் செய்கையை வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்ற நண்பரிடம், "கோபால்! இந்தத் தோல் பையைக் கொண்டு போய் அந்தப் பையன் அருகில் உட்காருங்கள். மெள்ள அவனுடன் பேச்சை ஆரம்பியுங்கள். உலக விவகாரத்தையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பற்றிச் சற்று நேரம் அளந்து விடுங்கள்! பிறகு கைக் கடிகாரத்தை ஒரு தடவை பார்த்து விட்டு, 'வண்டி வர இன்னும் இவ்வளவு நேரம் இருக்கிறதே' என்று சலிப்புடன் சொல்லுங்கள்! பிறகு, 'காப்பி சாப்பிட்டு வருவோம், வருகிறீர்களா!' என்று அவனைக் கூப்பிடுங்கள். 'வந்தனம், நீங்கள் போய் வாருங்கள்!' என்று அவன் மரியாதையாகச் சொல்வான். உடனே இந்தப் பையை அவனிடம் கொடுத்து, 'இதில் முந்நூறு ரூபாயும் சில சாமான்களும் இருக்கின்றன. கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். இதோ காப்பி சாப்பிட்டு விட்டு வந்து விடுகிறேன்!' என்று சொல்லி இதைக் கொடுத்து விட்டு வந்து விடுங்கள்! நான் அந்தப் புஸ்தகக் கடையில் நிற்கிறேன்" என்று கூறி, செங்கல் அடங்கிய அந்த சிறிய தோல் பையைக் கோபாலிடம் கொடுத்தார் மாணிக்கவாசகம்.

"என்ன ஸார், இது வேடிக்கை! எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்று திகைப்புடன் கேட்டார் கோபால்.

"எல்லாம் பிறகு சொல்கிறேன்! முதலில் நான் சொன்னதைச் செய்யுங்கள்!" என்று அவசரப்படுத்தி நண்பரை அனுப்பி விட்டுச் சற்று தூரத்திலிருந்த 'ஹிக்கின்பாதம்ஸ்' புத்தகக் கடை முன்னால் சென்று நின்று கொண்டார் மாணிக்க வாசகம். தமக்குப் பிடித்த புத்தகங்கள் சிலவற்றைப் பொறுக்கி எடுப்பதில் ஈடுபட்டார். பத்து நிமிஷம் கழிந்தது.

"ஸார்! கொடுத்து விட்டேன்!" என்ற மெல்லிய குரலைக் கேட்டுத் திரும்பினார் மாணிக்கவாசகம். அவர் பின்னால் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தார் கோபால்.

"நல்லது. அதை அவனிடம் கொடுக்கச் சொன்னதின் காரணத்தை இப்போது சொல்கிறேன், வாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே, வாங்கியிருந்த புத்தகங்களுக்குப் பணத்தைச் செலுத்தி விட்டு நண்பருடன் ரயில்வே ஹோட்டலை நோக்கி நடந்தார் மாணிக்கவாசகம்.

காப்பி சாப்பிட்டுக் கொண்டே, அந்த வாலிபன் தம்மிடம் வேலை கேட்க வந்ததையும், அவனைப் பார்த்தவுடன் அவன் மீது தமக்கு ஏற்பட்ட அநுதாபத்தையும், ஆனால் அதே சமயம் அவன் மீது ஏற்பட்ட சந்தேகத்தையும் கூறினார். பிறகு, "அவன் குணத்தைப் பரிசோதிக்கத்தான் அந்தப் பையை அவனிடம் கொடுத்துவரச் செய்தேன்! அற்ப புத்தியுள்ள அயோக்கியனாக இருந்தால் அதில் உண்மையாகவே முந்நூறு ரூபாய் இருக்கும், அதைக் கொண்டு டிபாஸிட் கட்டி வேலையை அடைந்து விடலாம் என்று நினைத்து, அந்தப் பையுடன் இந்நேரம் ஓடி இருப்பான்!" என்றார் மாணிக்கவாசகம். அதைக் கேட்ட கோபால், "சரி, அவன் அந்தப் பையுடன் ஓடியிருக்கவில்லை என்றால் என்ன செய்வீர்கள்!" என்று ஆவலுடன் கேட்டார்.

"நாளைக்கே அவனுக்கு உத்தியோக உத்தரவு அனுப்பி, அவனை என் ஆபீஸில் வேலைக்குச் சேர்த்துக் கொள்வேன்!" என்றார் மாணிக்கவாசகம்.

ஐந்து நிமிஷங்களில் அவ்விருவரும் அந்த ஹோட்டலை விட்டு வெளியே வந்தார்கள். பிரகாசம் உட்கார்ந்திருந்த பெஞ்சை நோக்கி நடந்தார்கள். அதை ஆவலுடன் நோக்கிய மாணிக்கவாசகம் திடுக்கிட்டார். ஆம், அது காலியாகக் கிடந்தது. அந்தப் பிளாட்பாரம் முழுவதையும் தேடி விட்டார்கள். எங்குமே பிரகாசத்தைக் காணவில்லை.

"அயோக்கியன்! நம்பிக்கை மோசம் செய்யும் நயவஞ்சகன்! அவன் முகத்தைப் பார்த்து ஏற்பட்ட இரக்கத்தில் நேற்றே வேலை கொடுத்து



விடலாம் என்று கூட நினைத்தேன்! அப்படிக் கொடுத்தால் அவன் என் பாங்கையே கொள்ளை அடித்திருப்பான்! நல்ல காலம், தப்பினேன்!'' என்று தம்மை ஆசுவாசப் படுத்திக் கொண்டார் மாணிக்கவாசகம்.

இரண்டு வாரங்கள் சென்றன. மாணிக்கவாசகம் சென்னை சென்று திரும்பி விட்டார்.

''இமாலயா இன்ஷியூரன்ஸ் கம்பெனி''யின் வருடாந்திர விழாவுக்கு அன்று மாலை சென்றிருந்தார் மாணிக்கவாசகம். அந்தக் கம்பெனிக் கட்டடத்தைச் சுற்றியிருந்த இடத்தில் போடப்பட்டிருந்த அலங்காரப் பந்தலில் தேனீர் விருந்து நடந்து கொண்டிருந்தது. குமாஸ்தாக்களும் மற்றப் பெரிய உத்தியோகஸ்தர்களும் சமமாக அமர்ந்து ஆனந்தமாகப் பேசிய வண்ணம் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார்கள்.

ஐஸ்கிரீமை எவர்சில்வர் கரண்டியில் சிறிது எடுத்து வாயருகே கொண்டு சென்ற மாணிக்கவாசகத்தின் பார்வை, யதேச்சையாக எதிர் வரிசையில் அமர்ந்து, சிரித்துக் கொண்டே சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு வாலிபன் மேல் விழுந்தது. கையிலிருந்த ஐஸ்கிரீம் கரண்டியை உடனே கீழே வைத்துவிட்டார்.

அருகிலிருந்த அந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனி மானேஜரிடம், ''ஸார்! அதோ எதிர் வரிசையில் நீல ஷர்ட் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கும் அந்தக் கறுத்த வாலிபன் யார்!'' என்று ஆவலுடன் வினவினார்.

''ஏன், ஸார்! அவனை உங்களுக்குத் தெரியுமா! போனவாரம் தான் அவனை டைப்பிஸ்டாக நியமித்தேன். பிரகாசம் என்பது அவன் பெயர். நல்ல பையன், ஸார்!'' என்றார் அந்த மானேஜர்.

''அதற்குள் அவன் மேல் உங்களுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டு விட்டதா! பேஷ்! இருந்தாலும் கொஞ்சம் அவன் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருங்கள்!'' என்று எச்சரித்தார் மாணிக்கவாசகம்.

''நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே! விஷயத்தைச் சொல்லுங்கள், ஸார்!'' என்று திடுக்கிட்டுப் போய் வினவினார் மானேஜர்.

''அவனைக் காட்டிக் கொடுப்பதா என்று எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதைச் சொல்லாமலிருந்தால் உங்கள் ஆபீசுக்கே பெரிய தீங்கு ஏற்பட்டு விடலாம்! அதனால் சொல்கிறேன். கேளுங்கள்: அவன் ஒரு பெரிய அயோக்கியன், நம்பிக்கை மோசம் செய்யும் நயவஞ்சகன்'' என்று ஆரம்பித்து, பிரகாசத்தைத் தாம் சோதித்த விவரத்தை அவரிடம் கூறினார்.

''அப்படியா! பார்த்தால் சாதுவைப் போல் தோன்றும் இவன் இவ்வளவு பெரிய அயோக்கியனா!'' என்று பிரமித்த அந்த மானேஜர், ''ஸார்! அவனை இன்றைக்கே 'டிஸ்மிஸ்' செய்து விடுகிறேன்!'' என்று நன்றியுடன் நவின்றார்.

அவருக்கு ஒரு பெரிய உபகாரத்தைச் செய்து விட்டோம் என்ற திருப்தியுடன் அன்று வீட்டுக்குத் திரும்பிச் சென்றார் மாணிக்கவாசகம்.

ஆனால் அடுத்த சில தினங்களில் பிரகாசத்தை மீண்டும் காட்டிக் கொடுக்க வேண்டிய சந்தர்ப்

பம் ஏற்படும் என்று அவர் அப்போது எதிர் பார்க்கவே இல்லை. தமது பாங்குடன் தொடர்பு கொண்டிருந்த ஒரு கம்பெனி மானேஜரைப் பார்த்துப் பேசுவதற்காகச் சென்ற மாணிக்கவாசகம், அந்த இடத்தில் பிரகாசத்தைக் காண நேர்ந்தது. காலியாக இருந்த ஒரு வேலைக்குப் பத்துப் பேரை 'இண்டர்வியூவ்'க்கு அழைத்திருந்தார் அந்த மானேஜர். அவர்களிடையே பிரகாசமும் உட்கார்ந்திருந்தான். அவன் நம்பத்தகாதவன் என்ற விஷயத்தை அந்த மானேஜரிடம் சொல்லாமலிருக்க மாணிக்கவாசகத்தால் முடியவில்லை. மறுகணம் பிரகாசத்தின் விண்ணப்பத் தாள் கிழிந்துக் குப்பைக் கூடையில் எறியப்பட்டது.

நான்கு மாதங்கள் சென்றன. பிரகாசத்தை மாணிக்கவாசகம் அடியோடு மறந்து விட்டிருந்தார். தம் மகளுடைய திருமணத்துக்கு நண்பர் ஒருவரை அழைத்துப் பத்திரிகை கொடுத்து வருவதற்காக, அவர் மானேஜராக இருந்த "இண்டர் நாஷனல் கலர் கம்பெனி"க்குச் சென்றார் மாணிக்கவாசகம். அவரைக் கண்டதும் பிரமாதமாக வரவேற்று உபசரித்தார் நண்பர்.

அப்போது அந்த அறையில் ஒரு 'பைலு'டன் பிரவேசித்த பிரகாசத்தைக் கண்டதும் துணுக்குற்றார் மாணிக்க வாசகம். மானேஜரிடம் ஏதோ ஒன்றைக் காட்டிக் கையெழுத்து வாங்கிக் கொண்டு அங்கிருந்து சென்றான் பிரகாசம். போகும் போது மாணிக்க வாசகத்தைப் பார்த்து இலேசாகப் புன்னகை செய்து கொண்டே போனான்.

"ஏன், ஸார்! அவனை அப்படி முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள்!" என்று வியப்புடன் வினவினார் அந்த நண்பர் மாணிக்க வாசகத்தினிடம்.

"பாவம்! அதிர்ஷ்டமில்லாதவன்! மீண்டும் மீண்டும் அவன் எனக்குத் தெரிந்தவர்களின் ஆபீஸில்தான் வேலைக்கு வரவேண்டுமா! அப்படி வந்த பிறகு என் கண்ணில்தான் பட வேண்டுமா!" என்றார் மாணிக்கவாசகம்.

"என்ன ஸார், புதிர் போடுகிறீர்கள்!"

"ஆம்! அவன் துரதிருஷ்டசாலிதான், சுந்தரம்! அவன் இன்று தன் வேலையை இழக்கப் போகிறான்!"

"சீக்கிரம் விஷயத்தைச் சொல்லுங்கள்!"

பிரகாசம் அயோக்கியன் என்ற விஷயத்தை மாணிக்கவாசகம் விளக்கிக் கூறினார். அதைக் கேட்டதும் திடுக்கிட்ட சுந்தரம், மேஜையிலிருந்த மணியைப் பலமாகத் தட்டினார்.

மறுகணம் ஆபீஸ் பையன் அவர்கள் முன்னால் வந்து நின்றான்.

"உடனே பிரகாசத்தை இங்கே வரச் சொல்!" என்று உத்தரவிட்டார்.

அடுத்த நிமிஷம் அவர்களுக்கெதிரே பணிவுடன் நின்று கொண்டிருந்தான் பிரகாசம்.

"பிரகாசம்! உன்னை இந்த நிமிஷம் முதல் வேலையிலிருந்து நீக்கி விட்டேன்!" என்றார் சுந்தரம் கடுமையான முகத்துடன்.

அதைச் செவியுற்றதும் பிரகாசம் பதறிப் போய் விட்டான்.

"ஏன் ஸார்! நான் என்ன தவறு செய்தேன்!" என்று திகிலுடன் கேட்டான்.

"அதை விளக்க நான் தயாராக இல்லை! நீ இந்தக் காரியாலயத்தில் வேலை செய்யத் தகுதியற்றவன்! இதோ 'டிஸ்சார்ஜ்' கடிதம்! இதை 'ஹெட்கிளார்க்'கிடம் காட்டிப் பாக்கி சம்பளத்தை வாங்கிக்கொண்டு நீ போகலாம்!"

"ஸார், ஸார்! இன்னும் ஒரு மாதம் வரையிலாவது என்னை வேலைக்கு வைத்துக் கொள்ளுங்கள், ஸார்! அதற்குள் அந்தப் பணம் சேர்ந்து விடும். என் தவறுக்குப் பிராயச்சித்தம் செய்துவிடுவேன்!" என்று கெஞ்சினான்.

"என்னப்பா, உளறுகிறாய்! எந்த ரூபாய் சேர்ந்து எதற்குப் பிராயச்சித்தம் செய்யப் போகிறாய்!" என்று அதட்டினார் சுந்தரம்.

"சொல்கிறேன், கேளுங்கள் ஸார்! ஐந்து மாதங்களுக்கு முன் ஒரு நாள், தென்காசியிலிருந்து வந்து கொண்டிருந்த என் நண்பனை வரவேற்க ரயில்நிலையத்தில் காத்துக் கொண்டிருந்தேன். அப்போது நான் அமர்ந்திருந்த சிமெண்ட் பெஞ்சியில் ஒருவர் உட்கார்ந்தார். என்னுடன் மிகப் பிரியமாகப் பேசினார். என்னைக் காப்பி சாப்பிட வருமாறு அழைத்தார். நான் மறுத்து விட்டேன். அப்போது தன் கையிலிருந்த தோல்பையை என்னிடம் நீட்டி, அதில் மூந்நூறு ரூபாய் இருப்பதாகவும், காப்பி சாப்பிட்டு விட்டு வரும் வரை வைத்திருக்கும்படியும் வேண்டினார். முதலில் தயங்கிய நான் அவர் வேண்டுகோளை மறுக்காமல் அதை வாங்கி வைத்துக் கொண்டேன்.

ஒரு நிமிஷம் சென்றிருக்கும். நாட்டுப்புறத்தானைப் போல் தோன்றிய ஒரு மனிதன் என் அருகில் வந்து நின்றான். தன் மகன் வட இந்தியாவில் ராணுவத்தில் வேலை பார்ப்பதாகவும், அவனுக்குத் தான் ஒரு கடிதம் எழுதியிருப்பதாகவும் ஆங்கிலத்திலிருக்கும் அவன் விலாசத்தைக் கொஞ்சம் எழுதித் தரும்படியும் சொல்லிவிட்டு, ஒரு கவரையும், ஆங்கிலத்தில் ஏதோ விலாசம் எழுதியிருந்த ஒரு துண்டுக் கடிதத்தையும் என்னிடம் கொடுத்தான்.

கல்வி அறிவில்லாத அவன் பரிதாப நிலைக்கு இரங்கிய நான், என் இடது புறமிருந்த பெஞ்சின் கைப்பிடியின் மேல் வைத்து விலாசத்தை எழுதிக் கொடுத்தேன். எனக்கு வணக்கம் தெரிவித்து விட்டு அந்த மனிதன் வேகமாகக் கூட்டத்தில் சென்று மறைந்தான். அப்போது தான் எனக்கு அந்தத் தோல் பையின் ஞாபகம் வந்தது. வேகமாகத் திரும்பி வலது புறத்தில் என் அருகில் வைத்துக் கொண்டிருந்த அந்தப் பையைப் பார்த்தேன். எனக்குப் பகீரென்றது. அதை அங்கே காணவில்லை. நான் விலாசம் எழுத இடது பக்கம் திரும்பி இருந்த போது பையை அந்த நாட்டுப்புறத்தானுடைய சகா ஒருவன் கவர்ந்து சென்றிருக்க வேண்டும். உடனே அவன் சென்ற திசையை நோக்கி வேகமாக ஓடினேன். ஸ்டேஷன் முழுவதும் தேடினேன். ஆனால் அவன் அகப்படவில்லை. தோல் பை களவு போய்விட்டது என்று அந்த மனிதரிடம் சொன்னால், அவர் அதை நம்பாமல் என்னையே போலீஸில் பிடித்துக்கொடுத்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் என்னைக் கவ்விக் கொண்டது. மறு கணம் அங்கிருந்து வேகமாக வீட்டுக்கு விரைந்தேன்.

ஆனால் முன்பின் தெரியாத என்னிடம் நம்பிக்கையாக மூந்நூறு ரூபாய் அடங்கிய பையைக் கொடுத்துச் சென்ற அந்த மனிதருக்கு என் அஜாக்கிரதையினால் நான் தவற விட்ட பணத்தை எப்படியாவது கொடுத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தேன். மூன்று மாதங்களுக்கு முன், நான் இங்கே வேலைக்கு வந்த மறுநாள், அந்த மனிதரின் வீடு எது என்பதைத் தற்செயலாக அறிந்தேன்.

ஸார்! வயிற்றையும் வாயையும் கட்டி மிகவும் சிக்கனமாகச் செலவு செய்து, என் நூறு ரூபாய் சம்பளத்தில் மாதம் ஒன்றுக்கு எழுபது ரூபாய் மீந்து வருகிறேன். இது வரை இருநூற்றுப்பத்து ரூபாய் சேர்ந்திருக்கிறது. இன்னும் தொண்ணூறு ரூபாய் வேண்டும்! ஸார், தயவு செய்து இன்னும் ஒரு மாதம் மட்டிலுமாவது என்னை வேலைக்கு வைத்துக் கொள்ளுங்கள்! இந்த மாதம் சம்பளம் வாங்கியதும் அந்த மனிதருக்கு நான் கொடுக்க வேண்டிய மூந்நூறு ரூபாயையும் சேர்ப்பித்து விடுகிறேன்! இத்தனை நாள் அவர் மனத்தைக் கலங்க வைத்ததற்கு, அவர் காலில் விழுந்து மன்னிப்புப் பெற்று விடுகிறேன்! கொஞ்சம் கருணை காட்டுங்கள், ஸார்!" என்று மன்றாடினான் பிரகாசம்.

அவன் சொன்னது யாவையும் கவனத்துடன் கேட்ட மாணிக்கவாசகமும் சுந்தரமும் அவனைப் பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பிரகாசத்தின் உயர்ந்த குணம் அவர்கள் உள்ளத்தைத் தொட்டது.

திடீரென்று ஆசனத்தை விட்டு எழுந்து பிரகாசத்தை நெருங்கிய மாணிக்கவாசகம், "தம்பி! உன் உயர்ந்த குணத்தை உணர்ந்து கொள்ளாமல், நீ சிரமப்பட்டு அடைந்த உத்தியோகங்களிலிருந்து உன்னை விலக்கச் செய்தேன்! அயோக்கியன் என்றும் நம்பிக்கை மோசம் செய்யும் நயவஞ்சகன் என்றும் பழித்தேன்! என்னை மன்னித்துவிடு, பிரகாசம்! உன் குணத்தைச் சோதிப்பதற்காகத்தான் என் நண்பர் மூலமாக அந்தத் தோல் பையை உன்னிடம் கொடுத்து வரச் செய்தேன்! ஆனால் அதிலிருந்தது மூந்நூறு ரூபாய் அல்ல; ஒரு உடைந்த செங்கல்தான்!

"வறுமையில் வாடிய போதிலும், தன் அஜாக்கிரதையால் தவறவிட்ட பிறர் பொருளுக்கு ஈடு செய்ய வேண்டும் என்ற லட்சியத்தைக் கொண்டாய். உன்னைப்போல் பரிசுத்த இதயம் படைத்தவர்கள் லட்சத்தில் ஒருவர் கூட இவ்வுலகில் இருக்க மாட்டார்கள்!" என்று தழுதழுத்த குரலில் கூறி அவனை அன்புடன் அணைத்துக் கொண்டார். பிரகாசம் திகைப்புடன் அவரைப் பார்த்தான்.

அதன் பிறகு சுந்தரத்துக்கும் மாணிக்கவாசகத்துக்குமிடையே ஒரு சிறு தகராறு நடந்தது. இமயம் போல் உயர்ந்த உள்ளம் படைத்த பிரகாசம் தன் காரியாலயத்தில்தான் இருக்க வேண்டும் என்று சுந்தரமும், "அதெல்லாம், முடியாது! அவன் என்னிடம் தான் இருக்க வேண்டும்" என்று மாணிக்கவாசகமும் சில நிமிஷங்கள் வாக்குவாதம் செய்து கொண்டார்கள். கடைசியில் மாணிக்கவாசகம் தான் வெற்றி பெற்றார்.

இப்போது பிரகாசம் பல்லவன் பாங்கின் காஷியர்! அவன் இருண்ட வாழ்வில் உண்மையிலேயே பிரகாசம் ஏற்பட்டு விட்டது.

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram




ஹிமாலயா
புக்கெ
உபயோகித்து
அதன்
அதிகப்படியான
புதுப்பொலிவை
உணருங்கள்
—நாள்முழுவதும்!



# ஹிமாலயா
# புக்கெ

டால்கம் அண்டு டாய்லெட் பவுடர்ஸ்



சிவப்புக் கோடிட்ட ஹிமாலயா பொக்கே
டாய்லெட் பவுடர் டின் ஒரு பவுடர்
பேடுடன் கூடியது.

HBP. 12A-50 TM இராஸ்மிக் கம்பெனி லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

REGISTERED No. M. 4392
Registered as newspaper Ceylon